**நள்ளிரவு வானவில்!- 1**

**ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்**

# நள்ளிரவு வானவில்!

**ச**ந்திரசூடன் காலை ஆறு மணி காபியைத் துளித்துளியாய் ரசித்துக் குடித்துவிட்டு அன்றைய நாளிதழைக் கையில் எடுத்துக் கொண்டு தலைப்புச் செய்திக்குப் போவதற்கு முன், அவருடைய மனைவி அபிராமி, தன் எண்பது கிலோ எடை உடம்போடு ஒரு தூண் மாதிரி நடந்து வந்து அவர் முன்பாய் நின்றாள்.



"என்னங்க..!"

"சொல்லு..!" தலைப்புச் செய்தி அவ்வளவு சுவாரஸ்யம் இல்லாமல் போகவே நாளிதழின் அடுத்த பக்கத்தைப் புரட்டிக் கொண்டே தலையை ஆட்டினார் சந்திரசூடன்.

"இது உங்களுக்கே சரியா படுதா?"

"எது?"

"இன்னிக்கு புதன்கிழமை!"

"அதுக்கென்ன இப்போ..?"

"இன்னிக்குக் காலையில பத்து மணிக்கு நம்ம பொண்ணு மீராவை மாப்பிள்ளை வீட்டுக்காரங்க பெண் பார்க்க வரப்போறாங்க..!"

"அதுதான் தெரியுமே... நான் என்ன பக்கத்துவீட்டுக்காரனா..?"

"தெரியுமில்ல? அதுக்கப்புறமும் இப்படி பேப்பரும் கையுமா உட்கார்ந்துட்டா எப்படி? நீங்க குளிச்சு ரெடியாக வேண்டாமா... நேரம் 'பரபர'ன்னு ஓடிடும்!"



அபிராமி படபடவென்று பொரிந்துகொண்டிருக்கும் போதே சந்திரசூடனின் செல்போன் ரிங்டோனை மெலிதாய் வெளியிட்டது. நாளிதழை தாறுமாறாக மடித்து வைத்தவர், அழைப்பது யார் என்று செல் போனை எடுத்துப் பார்த்தார்.

மாப்பிள்ளையின் அப்பா பார்த்தசாரதி.

சந்திரசூடன் கொஞ்சம் பவ்யத் தோடும், நிறைய பதற்றத்தோடும் தன் செல்போனை எடுத்து இடது காதுக்கு ஒற்றினார். "குட்மார்னிங் சம்பந்தி..!"

"குட்மார்னிங்... குட்மார்னிங்! என்ன, வாக்கிங் போயிட்டு வந்துட்டீங்களா?"

"ம்... வாக்கிங் போயாச்சு... காபி குடிச்சாச்சு... பேப்பர் பார்த்துட்டு இருந்தேன். உங்க போன்... என்ன, மாப்பிள்ளை டெல்லியிலிருந்து புறப்பட்டுட்டாரா?"

"ம்... புறப்பட்டாச்சு. இப்ப ஃப்ளைட்ல வந்துட்டிருப்பான். ஒன்பது மணிக்கெல்லாம் வீட்ல இருப்பான். பத்து மணிக்கெல்லாம் உங்க வீட்ல இருப்போம். நான் ஏற்கெனவே சொன்ன மாதிரி மாப்பிள்ளையோடு சேர்த்து நாங்க மொத்தம் பதினாறு பேர் வருவோம்!"

"வாங்க... வாங்க... எவ்வளவு பேர் வேணுமின்னாலும் வாங்க... நாங்க வெயிட் பண்ணிட்டிருக் கோம்!"

"அப்புறம் ஒரு விஷயம்..."

"என்ன... சொல்லுங்க!"

"பத்து மணியிலிருந்து பத்தரை மணி வரைக்கும் ரொம்பவும் நல்லநேரம். அந்த நேரத்துக்

குள்ளே நாம லௌகீகமான விஷயங்களைப் பேசிடறது நல்லது."



"பேசிடலாம்! நேரம்தான் வேண்டப்பட்டது இருக்கே. நிச்சாந்தியாய் உட்கார்ந்து ஒரு குழப்பம் இல்லாமே எல்லாத்தையும் பேசிடலாம்."

"ரொம்ப நல்லது! எங்க மருமகப் பொண்ணு மீராவுக்கு ஹெவியான மேக்கப்பெல்லாம் வேண்டாம். சிம்பிளா இருந்தா போதும். எங்க பையன் ஞானேஷுக்கு அப்படி இருந்தாத்தான் பிடிக்கும்."

சந்திரசூடன் சிரித்தார்.

"நீங்க சொல்லவே வேண்டாம்... எங்க பொண்ணு மீரா பேருக்கு ஏற்ற மாதிரியே கொஞ்சம் பழங்கால டைப். பியூட்டி பார்லர் பக்கம் போனதே இல்லை. முகத்துக்கு பவுடர் போட்டுக்கவே யோசனை பண்ணுவா."

"போட்டோவைப் பார்க்கும்போதே தெரியுதே! சரியா பத்து மணிக்கு வந்துடறோம்."

"வாங்க... வாங்க!" வாயெல்லாம் பல்லாய் சிரித்து தன்னுடைய செல்போனை அணைத்த வாறு சந்திரசூடன் நிமிர, எதிரில் அவருடைய மகள்

மீரா கோபக்கனல் உமிழும் கண்களோடு நின்றிருந்தாள். மீராவுக்கு இருபத்தி மூன்று வயது. ஐம்பது கிலோ எடையைத் தாண்டாத ஒடிசலான உடம்புவாகு. பெரிய கரிய கண்கள். அடர்த்தியான தலைமுடி ஒற்றைப் பின்னலாய் மாறி, முதுகில் ஒரு கறுப்பு அருவியாய் வழிந்தது.

சந்திரசூடன் மகளை ஏறிட்டார் "போன்ல மாப்பிள்ளையோட அப்பா பேசினார்ம்மா..."

"அதுதான் தெரியுதே! ஏம்பா... இப்படி கூழைக் கும்பிடு போடறீங்க? மாப்பிள்ளை வீட்டுக்காரங்கனா மரியாதை குடுக்க வேண்டியதுதான். அதுக்காக இப்படியா? நீங்களும் ஒண்ணும் சாதாரண நபர் கிடையாது. இண்டஸ்ட்ரியலிஸ்ட் சந்திரசூடன்னு சொன்னா டெல்லி வரைக்கும் தெரியற ஒரு பர்சன்."

சந்திரசூடன் எழுந்து வந்து மகள் மீராவின் தோள் மேல் மெதுவாய் கையை வைத்தபடி சிரித்தார். "என்ன இருந்தாலும் பெண்ணைப் பெத்தவனுக்கு இந்த விஷயத்துல உயரம் கொஞ்சம் கம்மிதான். மாப்பிள்ளையோட அப்பா பார்த்தசாரதி ரிடையர்ட் ஹைகோர்ட் ஜட்ஜ். அது எப்பேர்ப்பட்ட பதவி. அவருக்கு இல்லேன்னாலும் அவர் வகித்த பதவிக்காவது மரியாதை குடுக்கணுமா... வேண்டாமா?"



"அப்படீன்னா... ஒரு காரியம் பண்ணுங் கப்பா!"

"என்ன?"

"மாப்பிள்ளையோட அப்பா நம்ம வீட்டுக்கு வந்ததுமே அவரை நடு ஹால்ல சோபாவில் உட்கார வெச்சு பெரிய தாம்பாளத்துல தண்ணியை ரொப்பி பாதபூஜை பண்ணிடுங்க! வேணும்ன்னா நானும் அம்மாவும் கூட உங்களோட அந்த பாதபூஜையில் ஜாய்ன் பண்ணிக்கறோம்!"

"பார்த்தியா... அபிராமி உன் பொண்ணோட கேலியை?"

"அது கேலி இல்லீங்க... உண்மைதான். மாப்பிள்ளையோட அப்பாகிட்டே நீங்க ரொம்பத்தான் வழியறீங்க."

"இதோ பார் அபிராமி! இப்ப நமக்கு கிடைச் சிருக்கிறது சாதாரண சம்பந்தம் கிடையாது. பாரம்பர்யம் மிக்க மரியாதைக்குரிய குடும்பம். மாப்பிள்ளை பையனுக்கு டெல்லியில் இருக்கிற ஒரு பெரிய மல்டிநேஷனல் கம்பெனியில் இந்த சின்ன வயசிலேயே வைஸ் பிரஸிடென்ட் போஸ்ட். மாசம் ரெண்டு லட்ச ரூபாய் சம்பளம். நம்ம மீராவுக்கு இப்படியொரு..."

மீரா தன்னுடைய இரண்டு காதுகளையும் பொத்திக்கொண்டாள். "அப்பா! இந்த கதாகாலட்சேபத்தை நீங்க இன்னும் எத்தனை நாளைக்குத்தான் கையில் ஜால்ரா கட்டை இல்லாமே பண்ணிட்டு இருப்பீங்க? போய் மொதல்ல குளிங்கப்பா!"

"அம்மாவும் பொண்ணும் ஒண்ணு சேர்த்துட் டீங்க. இனி என்னால பேச முடியாது!" சந்திரசூடன் கிளம்பிவிட, அபிராமி மகளைப் பார்த்தாள்.



"மீரா..! அந்த 'கேட்டரிங்'காரனுக்கு போன் பண்ணி எல்லா அயிட்டங்களையும் 'ஹாட் பேக்'ல வெச்சுத்தான் கொண்டு வரணும்னு சொல்லிடு. லேண்ட்லைன் டெலிபோனுக்கு கீழேயே அவனோட விசிட்டிங் கார்டு இருக்கு. நீ அவன்கிட்டே பேசறியா... இல்ல, நான் பேசட்டுமா?"

"நானே பேசிடறேன்ம்மா!" ஹாலின் வலதுபக்க மூலையில் இருந்த லேண்ட்லைன் டெலிபோனை நோக்கிப் போனாள். போனை நெருங்கியவள் அதற்குக் கீழே இருந்த விசிட்டிங் கார்டை தேட முயன்ற விநாடி டெலிபோன் தன் தொண்டையைத் திறந்தது. மீரா ரிஸீவரை எடுத்து தன்னுடைய இடது காதுக்கு ஒற்றினாள்.

"ஹலோ..!"

"பேசறது யாரு... மீராவா?" மறுமுனையில் ஓர் ஆண் குரல் கேட்டது.

"ஆமா... நீங்க?"

"நான் யார்ங்கிறது உனக்கு முக்கியம் இல்லை. விஷயம்தான் முக்கியம்."

"விஷயமா... என்ன விஷயம்?"

"இன்னிக்கு உன்னைப் பெண் பார்க்க வரப் போற மாப்பிள்ளையோட பேரு ஞானேஷ்."

"ஆமா..."

"டெல்லியில் இருக்கிற 'ஃப்யூச்சர் மிராகிள்' ஐ.டி கம்பெனியில் வைஸ் பிரஸிடெண்ட்"

"ஆமா..!"

"ஞானேஷ் டெல்லியிலிருந்து புறப்பட்டு சென்னை வந்துட்டாரா?"

"இல்லை! ஃப்ளைட்ல வந்துட்டிருக்கார். ஏன்... என்ன விஷயம்..?"



"அவர் டெல்லியிலிருந்து சென்னைக்கு நேற்றைக்கே வந்துட்டாரே... அது உனக்குத் தெரியாதா?"

"என்னது... நேற்றைக்கே வந்துட்டாரா..?"

"ஆமா!"

"இருக்காதே! இன்னிக்கு காலையில் அஞ்சு மணிக்குத்தான் டெல்லி டு சென்னை ஃப்ளைட்ல புறப்பட்டு வந்துட்டிருக்கார்."

"ஸாரி மீரா..! ஞானேஷ் நேத்திக்கே சென்னைக்கு வந்துட்டார். இப்போ எங்கே இருக்கார் தெரியுமா?"

"எங்கே..?"

"உன் வீட்டு மொட்டை மாடியில் இருக்கிற வாட்டர் டேங்க்குக்குப் பக்கத்துல வெயிட் பண்ணிட்டிருக்கார். போய்ப் பாரு..!"

மீரா திடுக்கிட்டுப் போனவளாய் நிமிர்ந்தாள். மேற்கொண்டு பேசும் முன்பு மறுமுனையில் ரிஸீவர் சாத்தப்படும் சத்தம் கேட்டது. முகம் வியர்த்துப் போன மீராவின் இதயம் ஒரு டெலிபிரிண்டராய் மாறியிருக்க, அவள் நடுக்கத்தோடு சுற்றும் முற்றும் பார்த்தாள்.

ஹாலில் யாரும் இல்லை.

குளியலறையில் அப்பாவும், சமையலறையில் அம்மாவும் இருப்பது தீர்மானமாய் தெரிந்தது. மெல்ல நடந்தாள். கேள்விகள் மூளையை மொய்த்தன.

’போனில் பேசிய நபர் யார்?’

’அந்த நபர் சொன்னது உண்மையா?’

’மாப்பிள்ளை ஞானேஷ் எப்படி நம் வீட்டு மொட்டை மாடியில்?’

’அம்மாவிடம் இந்த விஷயத்தை சொல்ல

லாமா வேண்டாமா?’

’வேண்டாம்! முதலில் நீ போய் மொட்டை மாடியைப் பார். இது யாராவது விளையாடும் விளையாட்டாகக் கூட இருக்கலாம்!’

அம்மா பார்க்காத ஒரு விநாடியில் மீரா சமையலறையைக் கடந்து வீட்டின் பின் பக்கமிருந்த மாடிப்படிகளுக்கு வந்து வேகமாய் ஏறினாள். மூன்றாவது மாடியின் முடிவில் மொட்டை மாடி வந்தது. குளிர்ந்த காற்று முகத்தில் மோதியது.

பரந்து விரிந்த அந்த மொட்டை மாடிப் பரப்பில் யாருமில்லை. பார்வை மாடியின் தென்மேற்குப் பகுதியில் இருந்த வாட்டர் டேங்கை நோக்கிப் போயிற்று.

யாரும் இல்லை.

’ஒருவேளை வாட்டர் டேங்குக்குப் பின்னாடி இருக்கலாமோ?’



இதயம் தடதடக்க வாட்டர் டேங்க்கை நோக்கிப் போனாள்.

’தனியா வந்தது தவறு. அம்மாவையோ அப்பாவையோ கூட்டிக்கொண்டு வந்திருக் கலாம்!’

மூளைக்குள் உற்பத்தியான கடைசி எச்சரிக்

கையை உதாசீனப்படுத்திவிட்டு வாட்டர் டேங்கை நெருங்கி பின்னால் மெல்ல எட்டிப்

பார்த்தாள்.

சின்னதாய் ஒரு மண் சட்டி தெரிந்தது. அதன்

குறுகலான வாய்ப்பகுதி மஞ்சள் துணியால் கட்டப்பட்டிருக்க, அதன் மேல் நான்காய் மடிக்கப்பட்ட ஒரு கடிதமும், ஐ.டி. கார்டு ஒன்றும் தெரிந்தது.

'என்ன இது?'

ஐ.டி. கார்டை எடுத்துப் பார்த்தாள்.

மாப்பிள்ளை ஞானேஷ் அந்த அடையாள அட்டையில் ஸ்டாம்ப் சைஸ் போட்டோவில் டை கட்டிக்கொண்டு சிரித்தான்.

மீராவின் மொத்த உடம்பும் ஒரு வியர்வைக் குளியலுக்கு உட்பட, மண் சட்டியின் மேல் இருந்த அந்தக் கடிதத்தை எடுத்துப் பிரித்தாள்.

கோணல்மாணலான தமிழ் எழுத்துக்களோடு நான்கைந்து வாக்கியங்கள் கிறுக்கலாக எழுதப்பட்டிருந்தன.

அன்புடையீர்!

வணக்கம்.



இத்துடன் ஞானேஷின் இறுதிச் சடங்குகளைச் செய்வதற்கு வசதியாக அவருடைய அஸ்தி 500

கிராம் அனுப்பியுள்ளோம். பெற்றுக்கொள்ளவும்.

பெங்களூர். பன்னர்கட்டா ரோடு.

காலை பதினோரு மணி.

'அல்டிமேட் வொண்டர்ஸ் சாஃப்ட்வேர்' கம்பெனியின் ஏழுமாடி உடம்பும் கண்ணாடி சதுரங்களில் பளபளத்துக்கொண்டிருக்க, ஐந்தாவது மாடியில் தன்னுடைய எக்ஸ்க்யூட்டிவ் அறையில் உட்கார்ந்து கம்ப்யூட்டரின் திரையில் 'ஸ்க்ரால்' செய்துகொண்டிருந்த கான்ட்

ராக்ட்டை உன்னிப்பாக படித்துக்கொண்டு இருந்த 50 வயது யோகானந்தை, இன்டர்காமின் இன்னிசை சற்றே அசைத்தது. கம்ப்யூட்டரின் திரையினின்றும் பார்வையை விலக்காமல் ரிஸீவரை எடுத்து "யெஸ்" என்றார்.

மறுமுனையில் கம்பெனி ரிசப்ஷனிஸ்ட் கல்பனா கவுடா தன் சாக்லேட்தனமான ஆங்கிலம் பேசினாள்.

"சார்! ஒன் மிஸ் ரிதன்யா ஹேஸ் கம் டு ஸீ யூ. ஷால் ஐ பர்மிட் ஹர்?"

யோகானந்த் தன் இடது கையின் ஆட்

காட்டி விரலால் தன் முன் வழுக்கையைக் கீறிக்கொண்டார்.

"ரிதன்யா?"

""யெஸ்... ஸார்"

"ஏஜ்?"

"பிட்வீன் ட்வென்டி·ஃபைவ் டு தர்ட்டி"

"பர்ப்பஸ் ஆஃப் த மீட்டிங்?"



"ப்யூர்லி பர்சனல்னு எழுதிக் கொடுத்திருக் காங்க.!"

"சரி... உள்ளே அனுப்பு டைம் பவுண்ட்ரி ஃபைவ் மினிஸ்ட்தான்னு சொல்லிடு."

"யெஸ்... ஸார்!"

இன்டர்காமின் ரிஸீவரை சத்தம் இல்லாமல் சாத்திய யோகானந்த், தன் மூளையின் சில நியூரான்களைத் தேய்த்தார்.

'யார் இந்த ரிதன்யா?'

கம்ப்யூட்டரின் திரையை இருட்டாக்கிவிட்டு காத்திருந்தார். சரியாக இரண்டு நிமிஷங்கள் கரைந்திருந்தபோது அறைக்கதவு மெலிதாக தட்டப்படும் சத்தம் கேட்டது.

"ப்ளீஸ் கெட் இன்!"

அந்த அழகான ரிதன்யா கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே வந்தாள். நீல நிற சுடிதார். உயர்த்திப் போட்டுக்கொண்ட ஒரு அலட்சியமான கொண்டை. சராசரிக்கும் கூடுதலான உயரம். உதட்டின் விளிம்பில் வலுக்கட்டாயமாக உட்கார்த்தி வைக்கப்பட்ட புன்னகை.

"ஸாரி... ஃபார் த இன்கன்வீனியன்ஸ்"

"நோ பிராப்ளம்... பீ ஸீட்டட்."

சிவப்பு வெல்வெட் நாற்காலியில் அந்த ரிதன்யா உட்கார்ந்தாள். பத்து விநாடி மௌனத்துக்குப் பிறகு யோகானந்தே பேச்சை ஆரம்பித்தார்.

"மிஸ் ரிதன்யா..! நீங்க யார்ன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?"

"ஷ்யூர்!" என்று சொன்ன ரிதன்யா தன் கையில் வைத்து இருந்த உத்யோக அட்டையை அவரிடம் நீட்டினாள். யோகானந்த் வாங்கிப் பார்த்தார். கார்டு ஆங்கிலம் பேசியது.



ஹெச்.ரிதன்யா... விஜிலன்ஸ் செகண்ட் கிரேடு ஆபீஸர். சைபர் க்ரைம் பிராஞ்ச். சென்னை. தமிழ்நாடு.

"ஓ! போலீஸ் டிபார்ட்மெண்ட்... அதுவும் தமிழ்நாட்டு சைபர் க்ரைம் பிராஞ்ச். நான் எதிர்பார்க்காத ஒரு விசிட்டர். இட்ஸ் ஓகே! உங்களுக்கு என்ன வேணும் மிஸ் ரிதன்யா?"

"ஒரு உண்மை!"

"உண்மைகளுக்கு என்கிட்டே பஞ்சமே கிடையாது. என்கிட்டே என்ன கேட்கணுமோ, கேளுங்க!"

"இந்த 'அல்டிமேட் வொண்டர்ஸ்' சாஃப்ட்வேர் கம்பெனிக்கு நீங்கதானே எம்.டி?"

"சந்தேகமேயில்லாமல்!"

"உங்களுக்குத் தெரியாமல் இந்த கம்பெனியில் எந்த ஒரு முறைகேடும் நடக்க வாய்ப்பில்லை என்கிற ஒரு உண்மையை நான் நம்பலாமா?"

"தாராளமா!"

"அப்படீன்னா இந்த வார்த்தைக்கு என்ன அர்த்தம்?" சொன்ன ரிதன்யா, மேஜையின் மேல் இருந்த பேனாவை எடுத்து ஒரு துண்டு பேப்பரில் எழுதி யோகானந்திடம் நீட்ட... அவர் அதில் பார்வையைப் போட்டார்.

*AMIDNIGHT RAINBOW*

குழப்பமாய் ரிதன்யாவை ஏறிட்டார் யோகானந்த்.

"என்ன இது?"

"நள்ளிரவு வானவில்."

"அப்படீன்னா..?"



"இதுக்கான பதில் உங்ககிட்டதான் இருக்கு... நீங்கதான் சொல்லணும்!"

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

# நள்ளிரவு வானவில்!

ரிதன்யா சொன்னதைக் கேட்டு அந்த ஏ.சி. அறையிலும் தன் சதைப்பிடிப்பான சதுர முகத்தில் மெலிதாய் வியர்த்தார் யோகானந்த். நெற்றியைத் தன் இடதுகையின் ஆட்காட்டி விரலால் அவஸ்தையாய்த் தேய்த்துக்கொண்டே அவளை ஏறிட்டார்.

"நள்ளிரவு வானவில்! இப்படியொரு வார்த்தையை நான் இன்னிக்குத்தான் கேள்விப்படறேன்."



ரிதன்யா தன் இதழ்க்கோடியில் மெலிதாய் புன்னகையொன்றை நெளியவிட்டாள்.

"ஒரு யானையைக் கூடையால மூடிவைக்க முடியாது மிஸ்டர் யோகானந்த்..!"

"அப்படீன்னா, நான் பொய் சொல்றேனா?"

"பொய் என்கிற வார்த்தையை நான் யூஸ் பண்ணலை. நீங்கதான் சொன்னீங்க."

யோகானந்த் தன் இடது கையின் ஆட்காட்டி விரலை சற்றே கோபத்தோடு உயர்த்தினார்.

"லுக்... மிஸ் ரிதன்யா..!"

"ஸாரி... ஐயாம் மிஸஸ் ரிதன்யா ஹரிகிருஷ்ணன்!"

"ஓ.கே... மிஸஸ் ரிதன்யா! நான் சட்டத்தை மதிக்கிற ஆசாமி. இந்த பொய், புரட்டு, பித்தலாட்டம் என்கிற வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டவன். நீங்க போலீஸ் டிபார்மென்ட்டிலிருந்து வந்திருக்கீங்க என்கிற ஒரேயொரு காரணத்துக்காகத்தான் எனக்கு முன்னால் உட்கார வெச்சு பேசிட்டிருக்கேன்..."

"ஸாரி ஸார்...! நீங்க இங்கே என்னைப் பார்த்து பேசறதைத் தவிர்த்திருந்தா நாளைக்கு நீங்க மெஜஸ்டிக் சர்க்கிளில் இருக்கிற சைபர் க்ரைம் பிராஞ்ச் ஆபீஸுக்கு வர வேண்டி இருந்திருக்கும். ஒரு ரெப்யூட்டட் ஐ.டி. கம்பெனியின் எம்.டியான உங்களுக்கு அது மாதிரியான ஒரு அசௌகரியத்தை கொடுக்கக் கூடாதுனுதான் நானே உங்களைப் பார்க்க வந்தேன்."

"ஸோ... இது ஒரு என்கொயரி?"

"யெஸ்..."



"அபௌட் வாட்?"

"நள்ளிரவு வானவில்."

"சத்தியமா எனக்குப் புரியலை!"

"இந்த கம்பெனியோட எக்ஸிக்யூட்டிவ் எம்.டியார்னு நான் தெரிஞ்சுக்கலாமா?"

"என்னோட சன் ரூபேஷ்..!"

"ப்ளீஸ் கால் ஹிம். அவருக்கு இந்த 'நள்ளிரவு வானவில்' பற்றி தெரிந்திருக்க வாய்ப்பு இருக்கு!"

யோகானந்த் தன் கோபப் பார்வையால் ரிதன்யாவை ஒரு பத்து விநாடி நேரம் வரை தகனம் செய்துவிட்டு, மேஜையின் மேல் இருந்த இன்டர்காம் ரிஸீவரை எடுத்து பட்டனை அழுத்தி, "ரூபேஷ்! ஒரு பத்து நிமிஷம் என்னோட

ரும் வரைக்கும் வந்துட்டுப் போ!" என்று இயந்திரத்தனமாகப் பேசி, ரிஸீவரை சத்தமாக வைத்துவிட்டு, வெளிநாட்டு மினரல் வாட்டர் பாட்டிலை எடுத்து ஒரு வாய்த் தண்ணீரைத் தொண்டைக்குக் கொடுத்தார்.

ஸ்பிலிட் ஏ.சியின் ரீங்காரம் மட்டும் சன்னமாய்க் கேட்டுக்கொண்டிருக்க, ரிதன்யாவும், யோகானந்தும் விநாடிகள் மரணமடைவதை மௌனமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மூன்று நிமிடங்கள் முழுவதுமாய் கரைந் திருந்தபோது ரூபேஷ் கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே வந்தான். இருபத்தைந்து வயதிலிருந்து முப்பது வயதுக்குள் தோற்றம் காட்டினான். திமிறிய தோள்பட்டைகளில் முறையான உடற்பயிற்சி தெரிந்தது. காது மடல்களின் நுனிகளும், மூக்கு நுனியும் தினமும் சாப்பிடும் உயர்தர ஒயின் உதவியால் அமெரிக்க லைஃப்பை வாங்கி மினுமினுத்தன. அணிந்திருந்த 'ஸ்பெடில்வேர்' சூட் அவனுடைய ஆறடி உயர உடம்புக்கு நேர்த்தியாய் பொருந்தியிருந்தது. ஸ்ப்ரே செய்திருந்த கோல்ட் ஃப்ளேம் சென்ட் ஏ.சியின் உதவியால் மூச்சை அடைக்கிற மாதிரி மணத்தது.





தன்னுடைய அப்பாவையும், எதிரில் உட்கார்ந்திருந்த ரிதன்யாவையும் ஒரு குழப்பப் பார்வையால் நனைத்துக்கொண்டே காலியாக இருந்த நாற்காலியொன்றில் உட்கார்ந்தான்.

"என்ன டாடி... எனிதிங்க் இம்பார்ட்டன்ட்?"

"யெஸ்... இவங்க யார்னு தெரியுதா?"

ரிதன்யாவை மறுபடியும் ஒரு தடவை பார்த்துவிட்டு தன்னுடைய தோள்கள் இரண்டையும் மெலிதாய் 'ஜெர்க்' செய்தான்.

"₹ஸாரி டாட்... யார்னு தெரியல."

"ஷி ஈஸ் ரிதன்யா ஃப்ரம் சைபர் க்ரைம் பிராஞ்ச்."

ரூபேஷின் புருவங்கள் சில மில்லிமீட்டர்கள் உயர்ந்து, நெற்றியின் மையத்தில் முடிச்சு கொண்டன.

"ஓ! காவல்துறை... மேடம் என்ன விஷயமா வந்திருக்காங்க?"

ரிதன்யா பேச்சில் குறுக்கிட்டாள்.

"ஒரு என்கொயரி"

"ரிகார்டிங் வித்..?"

"A MIDNIGHT RAINBOW. தமிழில் சொல்றதா இருந்தா நள்ளிரவு வானவில்."

"நள்ளிரவு வானவில்..? ஏதோ ஒரு கவிதை புத்தகத்தோட தலைப்பு மாதிரி இருக்கு!"

ரிதன்யா சற்றே குரலை உயர்த்தினாள்.

"மிஸ்டர் ரூபேஷ்! இப்படியெல்லாம் போலித் தனமா பேசி நீங்க என்னை என்கொயரியிலிருந்து டைவர்ட் பண்ண முடியாது. 'நள்ளிரவு

வானவில்' என்கிற வார்த்தைக்கும், உங்க ளுடைய ஐ.டி. கம்பெனியான 'அல்டிமேட் வொண்டர்ஸு'க்கும் ஏதோ ஒரு தொடர்பு இருக்கிறதா எங்களுடைய சைபர் க்ரைம் பிராஞ்சுக்குத் தகவல் கிடைச்சது. அது ஒரு விபரீதமான சங்கேத வார்த்தையா இருக்கலாம்ங்கிறது இன்டலிஜென்ஸ் 'ஸ்பை விஸ்'கோட கணிப்பு. அவங்க கணிப்பு சரியா, இல்லையானு தெரிஞ்சுக்கத்தான் இங்கே வந்திருக்கேன்!"

ரிதன்யாவை ஒரு புன்னகையோடு பார்த்தான் ரூபேஷ். "நீங்க கேட்ட இந்தக் கேள்விக்கு என்னோட அப்பா என்ன பதில் சொன்னார்?"

"தெரியாதுனு சொன்னார்."

"அதையே ஒரு ஜெராக்ஸ் எடுத்து என்னோட பதிலா நீங்க பதிவு பண்ணிக்கலாம்!"

"மிஸ்டர் ரூபேஷ், நீங்களும் உங்க அப்பாவும் ரொம்ப நேரத்துக்கு இப்படி கேலியும் கிண்டலுமா

பேசிட்டு இருக்க முடியாது. உண்மையைச் சொல்ல வேண்டிய வேளை எந்த நிமிஷத்திலும் வரலாம்!"

"ஈஸிட்..! அப்படீன்னா அந்த நிமிஷம் வர்ற வரைக்கும் நாம வெயிட் பண்ணலாமே!"

ரிதன்யாவின் ஒட்டுமொத்த உடம்பும் ஒரு கோபத்தவிப்புக்கு உட்பட்ட விநாடி அவளுடைய கைப்பையில் இருந்த செல்போன் பியானோ வாசிப்பை ரிங்டோனாக வெளியிட்டது. எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தாள்.

சி.பி.சி.ஐ.டி. சைபர் க்ரைம் செல்லில் இருந்து டி.எஸ்.பி. நம்பெருமாள் ரிதன்யாவை அழைத்துக் கொண்டிருந்தார்.

செல்போனை காதுக்கு ஒற்றினாள்

"ஸார்! நான் ரிதன்யா..."

மறுமுனையில் அவர் சற்றே பதற்றத்தோடு பேசினார். "ரிதன்யா, நான் இப்போ பேசறதை மட்டும் கேட்டுக்கோ. பதில் எதுவும் பேசாதே. இப்போ நீ யோகானந்த் ரூம்லதானே இருக்கே?"

"ஆமா ஸார்!"

"உபயோகமான தகவல் ஏதாவது கிடைச்சுதா?"

"இல்ல... ஸார்"

"சரி, இப்போ டவர் கிடைக்கலைனு வெளியே வந்து யாரும் கேட்டுவிடாதபடிக்கு கொஞ்சம் எச்சரிக்கையோடு பேசு. ஏன்னா, நான் இப்போ சொல்லப் போகிற விஷயம் ரொம்பவும் முக்கியம்!"

ரிதன்யா ஜாக்கிரதையானாள் 'ஏதோ விபரீதம்... இல்லையென்றால் சீ:ஃப் இவ்வளவு டென்ஷனாக பேசமாட்டார்!'

சில விநாடிகள் மௌனமாக இருந்துவிட்டு மெல்ல பேச்சை ஆரம்பித்தாள் "ஸாரி ஸார், உங்க வாய்ஸ் பிரேக் ஆகுது. சரியா டவர் கிடைக்கலைனு நினைக்கிறேன். வெளியில வந்து பேசறேன் ஸார்..."

சொல்லிக்கொண்டே எழுந்தவள், இரண்டு பேரையும் பார்த்து 'எக்ஸ்க்யூஸ் மீ'யை உதிர்த்துவிட்டு அறைக்கு வெளியே வந்து நீளமான வராந்தாவில் நடந்து சாலையைப் பார்த்தபடி இருந்த ஜன்னலுக்குப் பக்கமாய் போய் நின்றுகொண்டு இடது காதுக்கு செல்போனைக் கொடுத்தாள்.

"ஸார்! வெளியே வந்துட்டேன். என்ன விஷயம் ஸார்?"

"என்ன சொல்றாங்க அப்பாவும் மகனும்?"

"நோ... ரெஸ்பான்ஸ் ஸார். 'நள்ளிரவு வானவில்' என்கிற வார்த்தையை நான் சொன்னதும் அவங்க எந்த ஒரு ரியாக்ஷனையும் காட்டல. இனிமேல்தான் கொஞ்சம் ஃபோர்ஸ் பண்ணணும்!"

"வேண்டாம் ரிதன்யா... நீ அவங்ககிட்டே என்கொயரியை ஸ்மூத்தா முடிச்சுக்கிட்டு உடனடியா அந்த இடத்தைவிட்டு புறப்பட்டுரு!"

"ஏன் ஸார்?"

"நள்ளிரவு வானவில் மேட்டரை நமக்கு இன்ஃபார்ம் பண்ணின கலியுகம் டி.வி. ரிப்போர்ட்டர் இரண்டாம் நாரதர் இப்போ உயிரோட இல்லை."

"எ... என்னாச்சு ஸார்?"



"சென்னையிலிருந்து இப்பத்தான் தகவல் வந்தது. அரைமணி நேரத்துக்கு முந்தி ஓ.எம்.ஆர். சாலையில் பைக்கில் போய்க்கிட்டு இருந்த இரண்டாம் நாரதரை, ஒரு மர்ம கும்பல் வழி மறிச்சு அரிவாளால் சரமாரியா வெட்டியிருக்காங்க... ஆள் ஸ்பாட்லயே இறந்துட்டார்!"

ரிதன்யாவின் காதோடு ஒட்டியிருந்த செல்போன் மெலிதான ஒரு நடுக்கத்துக்கு உட்பட்டது. நெற்றியும், புறங்கழுத்தும் வியர்வையில் பொடித்தன.

'இது சாதாரண விவகாரம் போல் தெரியவில்லை!' பயம், கவலை கலந்த யோசனையோடு பார்வையை மெல்ல திருப்பினாள். விழிகள் நிலைத்தன.

சற்றுத் தொலைவில் ரூபேஷ் தெரிந்தான். அவளை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

சென்னை.

போலீஸ் கமிஷனர் அலுவலகம். காலை பதினோரு மணி.

கமிஷனர் ராஜகணேஷ் தனக்கு எதிரில் அரைவட்டம் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்த சந்திரசூடன், அபிராமி, மீரா, பார்த்தசாரதி எல்லோரையும் பொதுப் பார்வை பார்த்துக் கொண்டு பேசினார்.

"மண் சட்டியில் வைக்கப்பட்டிருந்த சாம்பல் உண்மையிலேயே மனித உடலின் சாம்பலா அல்லது வேறு ஏதாவது ஒரு பொருளோட சாம்பலான்னு... ஃபாரன்ஸிக் எக்ஸ்பர்ட்ஸ் ஆய்வு பண்ணிட்டு இருக்காங்க. அதனுடைய ரிசல்ட் வந்த பிறகுதான் போலீஸாலே ஒருமுறையான விசாரணையைத் தொடங்க முடியும்."

முகம் இருண்டு போயிருந்த ரிட்டையர்ட் ஜட்ஜ் பார்த்தசாரதி, கண்கள் வெகுவாய் கலங்கிப் போயிருக்க, குரல் தழுதழுத்தார்.

"இன்னிக்குக் காலையில் டெல்லியிலிருந்து சென்னைக்கு ஃப்ளைட் ஏறுறதுக்கு முன்ன என்னோட சன் ஞானேஷ் பேசினானே! ஒன்பது மணிக்குள்ளே சென்னை வந்துருவேன். பத்து மணிக்கெல்லாம் மீராவை பெண் பார்க்க போயிடலாம்ன்னு சொன்னானே?"

"அது ஞானேஷோட வாய்ஸ்தானா?"

"சந்தேகமேயில்லை... அது என் சன்னோட வாய்ஸ்தான்!"

"ஞானேஷ் அந்தக் குறிப்பிட்ட டெல்லி ஃப்ளைட்ல டிராவல் பண்ணியிருந்தா ஃப்ளைட்டோட ட்ரிப் ஷீட்டில் அவரோட பேர் இருந்திருக்கணுமே?"

"இப்ப என்னோட குழப்பமே அதுதான்!"

"மீராவோடு டெலிபோனில் பேசின அந்த நபர், ஞானேஷ் நேற்றைக்கே டெல்லியிலிருந்து சென்னை திரும்பிட்டதா சொல்லியிருக்கான். அது உண்மையா இருக்கும்பட்சத்தில், ஞானேஷ் அதை உங்ககிட்டே மறைக்க வேண்டிய அவசியம் என்ன?" கமிஷனர் ராஜகணேஷ் கேட்கவும்... பார்த்தசாரதி தீர்க்கமாய் தலையாட்டினார்.

"இதுநாள் வரைக்கும் ஞானேஷ் என்கிட்டே எந்த ஒரு விஷயத்தையும் மறைச்சது கிடையாது. சின்ன வயசிலேயே அம்மாவை இழந்துட்ட அவனை, கண்ணும் கருத்துமா வளர்த்தவன் நான். விளையாட்டுக்குக்கூட என்கிட்டே பொய் பேசினது இல்லை. மீராவை பெண் பார்க்க புரோக்கர் ஏற்பாடு பண்ணினபோது நான் ஞானேஷுக்கு போன் பண்ணி 'நீ டெல்லியில் எந்தப் பெண்ணையாவது காதலிக்கிறியா... அப்படி ஏதாவது இருந்தா இப்பவே சொல்லிடு'னு கேட்டப்ப, 'அப்பா! நீங்க பார்த்து எந்தப் பெண்ணை கட்டி வெச்சாலும் எனக்கு ஓ.கேதான்'னு சொன்னான்."

சந்திரசூடன் இப்போது கமிஷனரை ஏறிட்டார்.

"ஸார்! மாப்பிள்ளை ஞானேஷ்கிட்டே நானும் ரெண்டு தடவை பேசியிருக்கேன். அவர் பொய் பேசுகிற நபராகவோ, தப்பான நபராகவோ இருக்க வாய்ப்பில்லை!"

கமிஷனர் ஏதோ பேச முயற்சித்த விநாடி அவருடைய உதவியாளர் பக்கத்தில் வந்து நின்றார்.

"ஸார்...! உங்களைப் பார்த்து பேசறதுக்காக மணிகண்டன்னு ஒருத்தர் வந்து வெயிட் பண்ணிட்டிருக்கார்."

"விஷயம் என்னான்னு கேட்டீங்களா?"

"கேட்டேன் ஸார்... ஞானேஷைப் பத்தி ஏதோ பேசணும்னு சொன்னார்!"

கமிஷனர் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

"மொதல்ல அவரை உள்ளே அனுப்புங்க!"

உதவியாளர் அங்கிருந்து வேகமாக நகர, பார்த்தசாரதியிடம் திரும்பினார் கமிஷனர்.

"யார் அந்த மணிகண்டன்?"

"தெரியலையே!"

எல்லோரும் காத்திருக்க அந்த மணிகண்டன் ஒரு தயக்கமான நடையோடு உள்ளே வந்தான்.

இளைஞன். முப்பது வயதுக்குள் இருந்தான். சிரத்தையாக 'ட்ரிம்' செய்யப்பட்ட தாடியும் மீசையும் லேசான ஒரு கறுப்பு கோட்டிங்குக்கு உட்பட்டு அவனுடைய சிவப்பு நிறத்தை இன்னமும் வெளிச்சம் போட்டுக் காட்டின. கமிஷனரைப் பார்த்து தயக்கமாக 'விஷ்' செய்துவிட்டு கலக்கம் நிறைந்த சன்னமான குரலில் சொன்னான்.

"ஸார்! எம்பேரு மணிகண்டன். ஞானேஷோட ஃப்ரெண்ட். ராயப்பேட்டையில் இருக்கிறதென்றல் அப்பார்ட்மெண்ட்டில் ஸ்டே பண்ணியிருக்கேன். கொஞ்ச நேரத்துக்கு முந்திதான் ஞானேஷ் சம்பந்தப்பட்ட அந்த விபரீதமான விஷயம் தெரிய வந்து அதிர்ந்துட்டேன். நேத்து ராத்திரி அவன் அந்த பார்ட் டிக்குப் போயிருக்கக்கூடாது ஸார். நான் வேண்டாம்னு சொல்லியும் அவன் கேட்கல!"

எல்லோரும் திடுக்கிட்டுப் போனவர்களாய் மணிகண்டனைப் பார்த்தார்கள்.

"என்னது! ஞானேஷ் நேத்தைக்கு சென்னையில் இருந்தானா?"

"ஆமா ஸார்! ரெண்டு நாளைக்கு முன்னாடியே டெல்லியிலிருந்து சென்னைக்கு வந்துட்டான். என்கூடத்தான் 'ஸ்டே' பண்ணியிருந்தான்."

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

# நள்ளிரவு வானவில்!

மணிகண்டன் சொன்னதைக் கேட்டு, போலீஸ் கமிஷனர் ராஜகணேஷ் வியப்பு ஈஷிக்கொண்ட விழிகளோடு ஒரு நேர்க் கோட்டைப் போல் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

"ஞானேஷ் ரெண்டு நாளைக்கு முன்னாடியே சென்னை வந்துட்டாரா!"

"ஆமா ஸார்..."

"எதுக்காக ரெண்டு நாளைக்கு முன்னாடியே வந்தார்?"

"நான் காரணம் கேட்டப்ப ஒரு ஹைடெக் மீட்டிங்கை அட்டெண்ட் பண்ணவும், அது சம்பந்தமான பார்ட்டியில் கலந்துகொள்ளவும் வந்ததா சொன்னான். வீட்டுக்கு விஷயம் தெரிய வேண்டாம்னும் கேட்டுக்கிட்டான்."

"அந்த ஹைடெக் மீட்டிங் எங்கே நடந்துச்சு?"

"ஏதோ ஒரு ஹோட்டல் பேர் சொன்னான் ஸார். மைண்ட்ல ரெஜிஸ்டர் ஆகல."

"நேத்து ராத்திரி எத்தனை மணிக்கு ஞானேஷ் உங்க அப்பார்ட்மென்ட்டை விட்டுக் கிளம்பிப் போனார்?"

"ஏழு மணியிலிருந்து, ஏழரை மணிக்குள்ளே!"

"பார்ட்டிக்குப் புறப்பட்டுப்போற நேரத்துல ஞானேஷோட செயல்பாடுகள் எப்படியிருந்துச்சு?"

"கொஞ்சம் டென்ஷனா இருந்தான். சரியான நேரத்துக்கு கால்டாக்ஸி வந்து சேராததால, அந்த டாக்ஸி டிரைவரை 'கன்னாபின்னா'னு திட்டித் தீர்த்துக்கிட்டிருந்தான். டாக்ஸி வந்ததும் என்கிட்டகூட ஒரு வார்த்தை சொல்லிக்காம வேகமா கிளம்பிப் போய்ட்டான்!"



"அந்த கால்டாக்ஸி நிறுவனத்தோட பேர் என்ன?"

"தெரியலை ஸார்... அவன்தான் புக் பண்ணினான்."

"வாசல்ல வந்து நின்ன டாக்ஸியை நீங்க பார்த்தீங்களா?"

"ம்... ஜன்னல் வழியா எட்டிப் பார்த்தேன்..."

"அது என்ன கார்?"

"இண்டிகோ மாதிரி தெரிஞ்சுது ஸார். லைட் ப்ளூ கார். காரோட டிக்கி மேல க்ரீன் கலர்ல ஏதோ ஒரு லோகோ சிம்பல்."

போலீஸ் கமிஷனர் யோசனையில் சில விநாடிகளைக் கழித்துவிட்டு மணிகண்டனை உன்னிப்பாக ஒரு பார்வை பார்த்தபடி கேட்டார்.

"ஞானேஷ், மீராவை பெண் பார்க்கவும் வந்திருக்கார் என்கிற விஷயம் உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியும் ஸார்."

"அப்புறம் ஏன் ஞானேஷ் அவர் வீட்டுக்குப் போகாம ரெண்டு நாளைக்கு முன்னாடியே வந்து உங்க வீட்ல ஸ்டே பண்ணணும்?"

"ஸார்! நான் இதே கேள்வியைத்தான் ஞானேஷ்கிட்டேயும் கேட்டேன். அதுக்கு அவன் 'நான் இந்த ஹைடெக் மீட்'ல கலந்துக்கிறது ப்யூர்லி பர்சனல் அண்ட் கான்ஃபிடென்ஷியல். முக்கியமா என்னோட ஃபேமிலி மெம்பர்ஸுக்குத் தெரியக்கூடாதுனு சொன்னான். ஞானேஷ் பர்சனல் மேட்டர்னு சொல்லிட்டதால மேற்கொண்டு எதுவும் அவன்கிட்டே கேட்கலை."

"சரி... பார்ட்டிக்குப் போன ஞானேஷ், ராத்திரி வீட்டுக்கு வரலைனு தெரிஞ்சதும் அவருக்குப் போன் பண்ணீங்களா?"

"பண்ணினேன் ஸார்... போன் 'ஸ்விட்ச்டு ஆஃப்'னு ரெக்கார்டட் வாய்ஸ் கேட்டது. ராத்திரி முழுக்க தூக்கம் இல்லை ஸார். அரை மணி நேரத்துக்கு ஒரு தடவை போன் பண்ணி, போன் பண்ணிக் களைச்சுப் போயிட்டேன். என்னையும் அறியாம விடிகாலை மூணு மணிக்கு தூங்கிட்டேன். கண் முழிச்சு பார்க்கும் போது எட்டு மணி. திரும்பவும் போன் பண்ணினப்ப... அதே 'ஸ்விட்ச்டு ஆஃப்'. பயந்து போன நான் 'பரபர'னு குளிச்சு ரெடியாகி, ஞானேஷோட வீட்டுக்குப் போனேன். வீட்ல யாரும் இல்லை.

வேலைக்காரங்க ரெண்டு பேர் இருந்தாங்க. அவங்க மூலமா விஷயத்தைத் தெரிஞ்சுகிட்டு இங்கே வந்தேன்."

அதுவரைக்கும் ஒன்றும் பேசாமல் கனமான கவலையோடு இருந்த பார்த்தசாரதி, அழுது சிவப்பேறிய விழிகளோடு மணிகண்டனை மெல்ல ஏறிட்டார். "என் மகனோட ஃப்ரெண்டுனு சொல்றே... உன்னை ஒரு தடவைகூட அவனோடு சேர்ந்த மாதிரி நான் பார்த்தது இல்லையே?"

"நீங்க பார்த்திருக்க வாய்ப்பில்லை ஸார். ஏன்னா, ஞானேஷை எனக்கு அஞ்சு வருஷ காலமாய்த்தான் தெரியும். நானும் ஞானேஷும் டெல்லியில் இருக்கிற 'ஃப்யூச்சர் மிராக்கிள்' ஐ.டி. பிராஞ்ச்சில் ஒண்ணா வேலை பார்த்தோம். ரெண்டு பேருமே 'சென்னை பேஸ்' என்கிற காரணத்தால நெருங்கிப் பழகி ஃப்ரெண்ட்ஸ் ஆயிட்டோம். போன வருஷம்தான் எனக்கு சென்னை பிராஞ்சுக்கு மாற்றலாச்சு. ராயப்பேட்டையில் இருக்கிற அப்பார்ட்மெண்ட்டில் தங்கி வேலைக்குப் போய்ட்டு வந்துட்டிருக்கேன். எனக்கு சொந்த ஊர் கோயம்புத்தூருக்குப் பக்கத்தில் இருக்கிற தடாகம். அம்மாவும் அப்பாவும் அங்கேதான் இருக்காங்க..." மணிகண்டன் படபடப்பாக பேசிக்கொண்டிருக்கும்போதே அந்த ஃபாரன்ஸிக் ஆபீஸர் பக்கத்து அறையிலிருந்து வெளிப்பட்டு, கமிஷனர் முன்பாக விறைப்பாக நின்றார்.

"ஸார்...! அந்த அஸ்தி சாம்பலின் ஃபர்ஸ்ட் ரிப்போர்ட் ரெடியாயிடுச்சு... நீங்க அதை ஒரு தடவை பார்த்துட்டா, இட் வில் பி பெட்டர் ஃபார் ஃபர்தர் இன்வெஸ்டிகேஷன்ஸ்."

"ஷ்யூர்" என்ற கமிஷனர் ராஜகணேஷ் எழுந்து அந்த அதிகாரியைப் பின்தொடர்ந்து உள்ளே போனார். அறைக்குள்ளே மேலும் இரண்டு தடயவியல் நிபுணர்கள், உயிரோடு இருந்த கம்ப்யூட்டர்களுக்கு முன்பாக உட்கார்ந்து இருந்தார்கள். கமிஷனரைப் பார்த்ததும் எழுந்தார்கள்.

"ரிப்போர்ட் என்ன சொல்லுது?"

"ஸார்! இது மனித உடம்போட சாம்பல்தான் என்கிற முடிவுக்கு வரவேண்டியிருக்கு."

"உங்க கெஸ் வொர்க்கா?"

"இல்லை ஸார்... ஹண்ட்ரெட் பர்சன்ட் இது ஒரு மனிதனோட சாம்பல்தான். எரிக்கப்பட்ட மனித உடலின் சாம்பலில்தான் இந்த அளவுக்கு கால்சியம், கார்பன் இருக்கும். ஒரு மரத்துண்டையோ, ஒரு பிராணியையோ எரிச்சா சாம்பல்ல இந்த அளவுக்கு இருக்காது ஸார்"

"சரி... உங்க அடுத்த ஸ்டெப் என்ன?"

"இந்த சாம்பலில் சின்னச் சின்ன எலும்புத் துணுக்குகள் நிறையவே இருக்கு. இதையெல் லாம் ஒரு டி.என்.ஏ ஆய்வுக்கு உட்படுத்திப் பார்த்து, மிஸ்டர் பார்த்தசாரதியோட டி.என்.ஏவோடு ஒப்பீடு செய்தாலே, இறந்தது ஞானேஷா... இல்லை, வேற யாராவதான்னு தெரிஞ்சுடும் சார்!"

"இந்த டி.என்.ஏ. முடிவு எப்ப நமக்கு கிடைக்கும்?"

"இன்னிக்கே டெல்லியில் இருக்கிற இன்ஸ்டிடியூட் ஆ:ப் :ப்ரான்ஸிக் ரிசர்ச் சென்டருக்கு அனுப்பி வெச்சுடறோம் ஸார். ரிப்போர்ட் நம்ம கைக்கு வர எப்படியும் ஒரு வாரம், பத்து நாள் ஆயிரும். இந்தக் கால அவகாசத்துக்குள்ள ஞானேஷ் சம்பந்தப்பட்ட இந்த கேஸை வேற ஒரு கோணத்திலிருந்து இன்வெஸ்டிகேட் பண்ணிப் பார்த்தா சில உண்மைகள் வெளியே வர வாய்ப்பிருக்கு ஸார்!"

கமிஷனருக்குப் பக்கவாட்டில் நின்றிருந்த இன்னொரு :பாரன்ஸிக் ஆபீஸர் தயக்கமான குரலோடு குறுக்கிட்டார்.

"ஸார்! ரிகார்டிங் வித் திஸ்... ஒன் மோர் இன்:பர்மேஷன்..."

"யெஸ்!"

"ஞானேஷோட செல்போன் நெம்பரை 'ஸ்கை லிங்க்' செல்போன் கம்பெனியின் மானிட்டரிங் செக்‌ஷனுக்கு அனுப்பி, ஸ்க்ரூட்னைஸிங் செய்து பார்த்ததில் ஒரு விஷயம் கசிந்து இருக்கிறது ஸார்."

"என்ன விஷயம்?"

"சென்ற வாரம் ஞானேஷ் டெல்லியில் இருந்தபோது ஒரு குறிப்பிட்ட செல்போன் நம்பருக்கு முப்பத்தி மூணு தடவை போன் பண்ணிப் பேசியிருக்கார். ஒவ்வொரு செல்போன் காலின் டியூரேஷன் இருபது நிமிஷத்திலிருந்து முப்பது நிமிஷம் வரைக்கும் நீடிச்சிருக்கு ஸார்."

"அது யாரோட நெம்பர்?"

"அது வந்து... வந்து... மீராவோட நம்பர் ஸார்."

கமிஷனரின் அகலமான நெற்றியில் கேள்விக் குறி ஒன்று முளைத்தது.

"மீரா...! யூ... மீன்... ஞானேஷ் பெண் பார்க்க இருந்த சந்திரசூடனோட டாட்டர் மீராவா?"

"ஆமா ஸார்..."

"அந்தப் பொண்ணு மீராகிட்ட நான் பேசிப் பார்த்ததில் ஞானேஷை தனக்கு முன்னே தெரியாதுனும், இதுவரைக்கும் ஒரு தடவைகூட பேசினதில்லைனும் சொன்னாளே!"

"நோ ஸார்... அந்தப் பொண்ணு மீரா, ஞானேஷ்கிட்டே பேசினதுக்கான ஆடியோ ஆதாரம் என்கிட்டே இருக்கு!"

"ஈஸிட்?"

"இதைக் கொஞ்சம் கேட்டுப் பாருங்க ஸார்" சொன்ன அந்த ஃபாரன்ஸிக் ஆபீஸர், மேஜையில் இடம் பிடித்திருந்த மானிட்டரிங் வாய்ஸ் ரிக்கார்டரை கையில் எடுத்து வைத்துக் கொண்டு ஒரு பட்டனைத் தட்டினார்.

சில விநாடிகள் மௌனம் சாதித்த அந்த வாய்ஸ் ரிக்கார்டர், பின் அந்தக் குரல்களை காற்றிலே கசியவிட்டது. ஏதோ ஒரு ரகசியத்தைப் பரிமாறிக்கொள்கிற தினுசில் அந்த உரையாடல் பதிவாகியிருந்தது.

"இதோ பார் மீரா...! கடைசி வரைக்கும் இந்த விஷயம் வெளியே வரவே கூடாது."

"நீங்க என்னை நம்பலாம் ஞானேஷ்! ஒரு ரகசியத்தைக் காப்பாத்தற விஷயத்தில் நான் ஒரு சே∴ப்டி லாக்கர்!"

பெங்களூருக்கே உரித்தான அந்தக் குளிரிலும் ரிதன்யாவுக்கு முன் நெற்றியும் பின் கழுத்தும் ஒரு வியர்வைக் குளியலுக்கு உட்பட்டன. செல்போன் மறுமுனையில் இருந்த டி.எஸ்.பி. நம்பெருமாளிடம் சற்றே பதற்றத்தோடு பேசினாள்.

"ஸார்..! அந்த ரூபேஷ் ரூமிலிருந்து வெளிப்பட்டு, என்னையே பார்த்தபடி வந்துட்டிருக்கான். நான் அப்புறமா பேசறேன்."

"ரிதன்யா! நான் சொன்னது ஞாபகம் இருக்கட்டும். அந்த யோகானந்த்கிட்டேயும் சரி, அவரோட மகன் ரூபேஷ்கிட்டேயும் சரி... எந்தவிதமான ஒரு ஆர்க்யூமென்ட்டையும் வெச்சுக்க வேண்டாம். நீ உடனே அந்த இடத்தை விட்டு புறப்பட்டுரு!"

"யெஸ்... ஸார்!" சொன்ன ரிதன்யா செல்போனை அணைக்கவும், ரூபேஷ் பக்கத்தில் வந்து நிற்கவும் சரியாக இருந்தது.

"என்ன மேடம்... டவர் கிடைச்சுதா?"

"ம்... கிடைச்சுது. பேசிட்டேன்..!"

"இங்கேயும் டவர் கிடைக்கலைனா சொல்லுங்க... மொட்டை மாடிக்குப் போயிடலாம்!"

"வேண்டாம்... நான் பேசிட்டேன்!"

"ரொம்பவும் வேர்த்து வழியறீங்களே... செல் போன்ல ஏதாவது வேண்டாத செய்தியோ?"

"நத்திங்..!" ரிதன்யாவின் உள்ளங்கையில் இடம்பிடித்து இருந்த சிறிய பூப்போட்ட கர்ச்சீஃப் அவளுடைய நெற்றிக்கும், பின் கழுத்துக்கும் போய், அங்கே துளிர்த்திருந்த வியர்வைத்துளிகளை ஒற்றியெடுத்தது.

ரூபேஷ் இன்னமும் ஓர் அடி முன்னால் வந்தான்.

"என்ன மேடம்... உங்க 'நள்ளிரவு வானவில்' இன்வெஸ்டிகேஷன் பாதியிலேயே நிக்குது. கண்டினியூ பண்றீங்களா, இல்லை... இன்வெஸ்டிகேஷனை 'டிராப்' பண்ணிட்டு ஒரு கூல்டிரிங் சாப்ட்டுட்டு புறப்படறீங்களா?"

"நோ மோர் இன்வெஸ்டிகேஷன்ஸ்."

"குட்... அப்போ... புறப்படறீங்க?"

"ஆமா..!"

"நீங்க இங்கே வந்தது இதுவே முதல் தடவையாகவும் கடைசி தடவையாகவும் இருக்கட்டும்! யாராவது எதையாவது சொன்னா, அதை வேதவாக்கா எடுத்துகிட்டு இன்வெஸ்டிகேஷன்கிற பேர்ல வந்து இம்சை பண்ண வேண்டாம்! இங்கே நள்ளிரவு வானவில்லும் கிடையாது... பகல் நேர அம்பும் கிடையாது!"

ரிதன்யாவுக்குள் ரத்தம் சூடேறி, கோபம் சுர்ர்ரென்று தலைக்கு ஏறினாலும், சட்டென்று கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்தாள்.

'இவனோடு வாக்குவாதம் செய்ய இது நேரமில்லை. பேசாமல் பின்வாங்கிக் கொண்டு பின்னொரு நாளில் வந்து கார்னர் பண்ணிட வேண்டியதுதான்!'



"என்னை யோசனை... இந்தக் கட்டடத் திலிருந்து வெளியே போக வழி தெரியலையா? அதோ... இப்படியே நேரா போய் லெஃப்ட்ல கட் பண்ணினா லிஃப்ட் இருக்கும்."

"தெரியும்" சொன்ன ரிதன்யா, ரூபேஷை ஓர் அமிலப் பார்வை பார்த்துவிட்டு, வராந்தாவில் வேகமாக நடக்க ஆரம்பித்தாள். இருபதடி நடந்திருப்பாள். அவளுடைய முதுகின் பின்னால் ரூபேஷின் குரல் கேட்டது.

"ஒரு நிமிஷம்..!"

ரிதன்யா திரும்பிப் பார்த்தாள்.

"என்ன?"

"இனிமே இந்த உரசிப் பார்க்கிற வேலை எல்லாம் வேண்டாம். ஏன்னா, நீ ஒரு தீக்குச்சி... நாங்க தீப்பெட்டி. உரசினா யார் சாம்பலாவாங்கனு நீயே முடிவு பண்ணிக்கோ!"

சைபர் க்ரைம் செல்.

டி.எஸ்.பி நம்பெருமாள் முன்பாக ஒரு தீப்பிழம்பாய் உட்கார்ந்திருந்தாள் ரிதன்யா. உதட்டிலிருந்து புறப்பட்ட வார்த்தைகளில் கோபம் வெடித்தது.

"ஸார்..! அப்பன், மகன் ரெண்டு பேருமே சரியில்லை. அவங்ககிட்டே நிறையவே தப்பு இருக்கு. அந்த ரூபேஷ் பகிரங்கமாகவே மிரட்டினான்... 'உரசிப் பாரு.. சாம்பலாயிருவே'னு சவால் விடறான். சந்தேகத்தின் பேர்ல ரெண்டு பேரையுமே அரெஸ்ட் பண்ணி நம்ம கஸ்டடிக்கு கொண்டு வந்துட்டா, அடுத்த ஒரு மணி நேரத்துக்குள்ளே அந்த நள்ளிரவு வானவில்லை நாம பார்த்துடலாம் ஸார்!"

நம்பெருமாள் தன்னுடைய பெரிய நரைமீசைக்குக் கீழே, சின்னதாய் புன்னகை செய்தார். முகம் ஒருவித இறுக்கத்துக்கு உட்பட்டிருந்தது.

"ரிதன்யா! இப்பத்தான் ஒரு விஷயம் எனக்கே தெரியவந்துச்சு. நீயும் சரி, நானும் சரி... தமிழ்நாட்டுக்காரங்க என்கிற ஒரேயொரு காரணத்துக்காகத்தான் இந்த 'நள்ளிரவு வானவில்' கேஸை இன்வெஸ்டிகேட் பண்ணச் சொல்லி எஸ்.பி. உத்தரவு போட்டிருக்கார். ஏன்னா, இந்த கேஸ்ல சம்பந்தப்பட்டிருக்கிற யோகானந்த் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர். இவர் சாதாரண நபர் கிடையாது. ஏதோ காலிமனை வாங்கிப் போடற மாதிரி, பெங்களூரில் இருக்கிற ஒவ்வொரு ஐ.டி. கம்பெனியையும் வாங்கி, தன்னோட ஐ.டி. சாம்ராஜ்யத்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமா விரிவு பண்ணி, ஜெட் வேகத்துல போயிட்டிருக்கார். யோகானந்த் இவ்வளவு பவர்ஃபுல்லா இருக்கிறதுக்குக் காரணம், அவருக்குப் பின்னாடி மத்திய அரசில் இருக்கிற கேபினட் மந்திரிகள்தான். கர்நாடக போலீஸ் அதிகாரிகள் யாருமே இந்த 'நள்ளிரவு வானவில்' கேஸை டீல் பண்ண முன்வரல. டெல்லி சி.பி.ஐ. பிரஷர் கொடுத்ததால, இந்தப் பொறுப்பைத் தூக்கி என்னோட தலையில் வெச்சுட்டார் எஸ்.பி. சந்திர கவுடா. ஒரு நேர்மையான போலீஸ் ஆபீஸர். குற்றம் அரசாங்கத்தின் எந்த டிபார்ட்மெண்ட்டில் நடைபெற்றாலும் அங்கே எட்டிப் பார்த்து நடவடிக்கை எடுக்கக் கூடியவர்."

ரிதன்யா அவர் பேச்சில் குறுக்கிட்டாள்.

"ஸார்! நீங்க சொல்றதை வெச்சுப் பார்க்கும்போது எஸ்.பி. சந்திர கவுடா உங்களை யும் என்னையும் கேடயங்களா பயன்படுத்தி, யோகானந்தோட மோத நினைக்கிறார்னு என்னோட மனசுக்குப் படுது!"

"அதேதான்...!"

"இப்ப என்ன ஸார் பண்றது?"

"அதுதான் எனக்குப் புரியலை. நீ யோகானந்த் கம்பெனிக்குள்ளே அடியெடுத்து வெச்ச அடுத்த நிமிஷம் 'நள்ளிரவு வானவில்' சம்பந்தப்பட்ட போலீஸ் இன்ஃபார்மர் இரண்டாம் நாரதன் உயிரோடு இல்லை. உன்னையும் அந்த ரூபேஷ் மிரட்டியிருக்கான். ஏதோ பொறிக்குள்ளே மாட்டிகிட்ட மாதிரி இருக்கு. எஸ்.பிகிட்டே பேசிப் பார்க்கணும்!"

நம்பெருமாள் பேசிக்கொண்டிருந்தபோதே அவருடைய செல்போன் வைப்ரேஷனில் துடித்தது. எடுத்து, அழைப்பது யார் என்று பார்த்தார்.

ஏ.எஸ்.பி. மல்லிகார்ஜுன் கன்னடத்தில் பேசினார் நம்பெருமாள்.

"சொல்லுங்கள் மல்லிகார்ஜுன்!"

"சார்! ஒரு மோசமான செய்தி!"

"எ... எ... என்ன..?"

"யஷ்வந்த்பூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில் நம்முடைய எஸ்.பி. சந்திர கவுடா ஜீப்பில் போய்க்கொண்டிருக்கும்போது யாரோ ஒரு நபர் பெட்ரோல் குண்டை வீச, ஜீப் வெடித்து சம்பவ இடத்திலேயே உடல் கருகி எஸ்.பி. இறந்துவிட்டார்."

**நள்ளிரவு வானவில்!- 4**

**ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்**

# நள்ளிரவு வானவில்!

நம்பெருமாள் தன் முகத்தில் இருந்த மொத்த ரத்தத்தையும் தொலைத்துவிட்ட தினுசில் செல்போனை அணைத்துவிட்டு, தனக்கு எதிரில் உட்கார்ந்திருந்த ரிதன்யாவைப் பார்த்தார். அவள் அவருடைய முகத்தைப் படித்துவிட்டு உலர்ந்துபோன உதடுகளோடு கேட்டாள்.

"என்ன ஸார்..! ஏதாவது மோசமான செய்தியா?'

"திஸ் இஸ் ஹைலி அன்ஃபார்ச்சுனேட்... எதிரியின் வேகம் ஏவுகணை மாதிரி இருக்கு. 'நள்ளிரவு வானவில்' கேஸை ஒப்படைச்ச எஸ்.பி. சந்திர கவுடா, இப்போ உயிரோடு இல்லை. யஷ்வந்த்பூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில் அவர் போயிட்டிருந்த ஜீப்பை நோக்கி ஒரு பெட்ரோல் குண்டு வீசப்பட்டு, ஜீப் வெடித்து சம்பவ இடத்திலேயே கருகி மரணம்.'

ரிதன்யாவின் கருவிழிகள் ஸ்டில் போட்டது போல் உறைந்தன. நெற்றி ஒரு இன்ஸ்டன்ட் வியர்வை குளியலுக்கு உட்பட்டு ஜிகினாத்தாள் போல் மின்னியது. அவசர அவசரமாக ஒரு மிடறு எச்சிலை விழுங்கிவிட்டு, துக்கம் அடைத்துக்கொண்ட தொண்டையோடு பேசினாள்.

"எ... எ... என்ன ஸார் இது..! இந்த கேஸோட நுனி எங்கே இருக்குன்னு ஸ்மெல் பண்றதுக்குள்ள ரெண்டு பேர் உயிரை விட்டுட்டாங்க. மேற்கொண்டு நாம என்ன பண்ணப் போறோம்?'

நம்பெருமாள் பதில் எதுவும் பேசாமல் தன்னுடைய மேஜையின் ஓரத்தில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த ஃபைல்களில் ஒன்றை எடுத்து ரிதன்யாவிடம் நீட்டினார்.

"என்ன ஸார் இது..?'

''போன மாசம்... ஒயிட்ஸ் ஃபீல்டில் இருக்கிற கங்காவதி மெட்ரிகுலேஷன் ஸ்கூலில் ஒரு பாலியல் பலாத்கார சம்பவம் நடந்ததே... அந்த சம்பவம் தொடர்பான அறிக்கையை மனித உரிமை கமிஷனுக்கு அனுப்பி வைக்கணும். அந்த அறிக்கையை பிரிப்பேர் பண்றது மட்டுமே இனிமே உன்னோட வேலை!'



"ஸார்... அப்படீன்னா... இந்த நள்ளிரவு வானவில்?'

நம்பெருமாளின் உதடுகளில் ஒரு கசப்பான புன்னகை ஜனித்து அந்த கணமே மறைந்தது.

"பகல் நேரத்திலேயே வானவில் ரொம்பவும் அபூர்வம். அப்படியே அது தோன்றினாலும் அதனோட ஆயுள் ரெண்டு நிமிஷம்தான்... நடுராத்திரியில் அதுவும் சாத்தியம் கிடையாது. இதை நீ மறந்துடும்மா... நானும் மறந்துடறேன்!'

"பயப்படறீங்களா ஸார்?'

'பயப்படாம என்னம்மா பண்றது? ஒரு யானைக்கு மதம் பிடிக்கிறபோது, வளர்த்து பழக்கின பாகனே ஒதுங்கிப் போயிடுவான். அது பயம் இல்லை. ஒரு முன்னெச்சரிக்கை நடவடிக்கை. இப்ப நாம ஒதுங்கறதும் அது மாதிரியானதுதான். 'நள்ளிரவு வானவில்' என்கிற வார்த்தை அழகானது. அது ஒரு கோட்வேர்டு. அதுக்குள்ள ஒரு விபரீதம் இருக்குனு எஸ்.பி. சந்திர கவுடா சொன்னபோது அது சாதாரணமா நாம் எதிர்

கொள்கிற ஒரு சைபர் க்ரைம் குற்றமாத்தான் இருக்கும்னு நினைச்சேன். ஆனா, இந்த கோட்வேர்டுக்குள்ளே ஒரு சுனாமி தூங்கிட்டிருக்கிற விஷயம் இப்பத்தான் தெரியுது. வேண்டாம்மா... இந்த விவகாரத்திலிருந்து நீ விலகிடு. உனக்கு உன்னோட குடும்பம் முக்கியம். உன்னோட ஹஸ்பண்ட் ஹரிகிருஷ்ணன் உன்மேல உயிரையே வெச்சிருக்கார். குழந்தை அபிநய் ஊட்டி கான்வென்ட்ல படிச்சிட்டிருக்கான். இந்த சந்தோஷமான சூழல் 'நள்ளிரவு வானவில்' பிரச்னையால நாசமாயிடக்கூடாது...'

ரிதன்யா நீளமான பெருமூச்சொன்றை வெளியேற்றியபடி தன் இரண்டு தோள்களையும் 'ஜெர்க்' செய்தாள்.

"யூ ஆர் கரெக்ட் ஸார்! எதிரிகள் நம்மைக் காட்டிலும் வேகமா இருக்கும்போது நம்ம விவேகம் அங்கே எடுபடாது. சட்டத்தின் பார்வைக்குத் தெரியாம தப்பு பண்றவனெல்லாம், திறமைசாலியாகவும் தெரியறதாலதான் நம்ம போலீஸ் டிபார்ட்மென்ட் இது மாதிரியான பிரச்னைகளை யூனிஃபார்மை மாட்டிக்கிட்டு கையைக் கட்டிகிட்டு வேடிக்கை பார்க்க வேண்டியிருக்கு!'

தன்னுடைய மனதுக்குள் கனன்றுகொண் டிருந்த கோபக்கனலை வார்த்தைகளில் தோய்த்து தெளித்துவிட்டு, அறையிலிருந்து வெறியேறினாள்.

அவள் மாடி வராந்தாவில் நடந்து படியிறங் கும் வரை ஒரு சிலைபோல் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்த டி.எஸ்.பி. நம்பெருமாள். அதற்குப் பிறகு தன்னுடைய செல்போனை எடுத்து அதிலிருந்த சிம்கார்டை எடுத்துவிட்டு,

வேறு ஒரு சிம்கார்டை அங்கே குடியமர்த்தினார். சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு சில எண்களை அழித்துவிட்டு ஹேண்ட்செட்டை இடது துக்குக் கொடுத்தார். மறுமுனையில் ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டது. நம்பெருமாள் குரலைத் தாழ்த்தினார்.

'ரூபேஷ்..!

"சொல்லுங்க டி.எஸ்.பி. ஸார்!'

"இனிமே ரிதன்யா அங்கே வரமாட்டா... கதவை சாத்தி தாழ் போட்டாச்சு...!'

"குட்... இனிமே நாங்க டிராவல் பண்ற ரூட்ல இதுமாதிரியான ஸ்பீட் பிரேக்கர்கள் வரக்கூடாது!'

"வராது ரூபேஷ்!'

"நியூஸ் வந்ததா..! எஸ்.பி. சந்திர கவுடா இப்போ உயிரோடு இல்லை..!'

"தெரியும்! எஸ்.பி. ரொம்பவும் நல்லவர். இன்னும் ரெண்டு வருஷத்துல ரிடையராகப் போகிறவர். அவரை ஸ்மூத்தா ஹேண்டில் பண்ணியிருக்கலாம். ஒரு பெட்ரோல் குண்டுக்கு தீனி போட்டிருக்க வேண்டாம்!'

மறுமுனையில் ரூபேஷ் சிரித்தான்.

'போலீஸ் டிபார்ட்மென்ட்ல நல்லவங்க இருந்தா, நாங்க நல்லா இருக்க முடியாது டி.எஸ்.பி. ஸார். எங்களுக்குத் தேவை உங்க மாதிரியான ஆட்கள்தான்... வர்ற சண்டே வழக்கம்போல் ஜெயநகர் கெஸ்ட் ஹவுஸுக்கு வந்துடுங்க... விருது வழங்கும் விழாவை வெச்சுக்குவோம்.'

"இந்த சண்டே வேண்டாம் ரூபேஷ்...'

"ஏன் ஸார்...?'

'டெல்லியிலிருந்து சி.பி.ஐ. ஆபீஸர்ஸ் 'கோல் மைன்' ஊழல் சம்பந்தமான விசாரணைக்

காக இங்கே வர்றாங்க... நான் அவங்ககூட இருந்தாகணும். அதுவுமில்லாமே எஸ்.பி. சந்திர கவுடா கொல்லப்பட்ட சம்பவம் இன்னும் ரெண்டுவார காலத்துக்காவது சூடா இருக்கும். ஒட்டுமொத்த போலீஸுக்கும் கடமை என்கிற ஜுரம் அதிகமாகவே இருக்கும். பெங்களூர் தன்னோட பழைய நிலைமைக்குத் திரும்பி மக்கள் சொந்தக் கவலைகளோடு ஐக்கியமாகும்போது நாம மீட் பண்ணுவோம்!'

"அதுவும் சரிதான் டி.எஸ்.பி. ஸார்... நான் அப்பாகிட்டே சொல்லிடறேன். பை த பை... உங்களோட அடுத்த நடவடிக்கை என்ன?'

''பூல்வாலே மார்க்கெட்டுக்குப் போய் ஒரு 'ரீத்' வாங்கிட்டு, எஸ்.பி. சந்திர கவுடா உடலுக்கு மரியாதை செலுத்தப் போகணும்..!'

''மொதல்ல அதைப் பண்ணுங்க!' மறுமுனையில் ரூபேஷ் பெரிதாய் சிரித்துவிட்டு செல்போனை அணைத்தான்.

பெங்களூர் மைகோ லேஅவுட்டின் 41வது செக்டாரில் இருந்த தன் வீட்டுக்கு முன்பாக தன்னுடைய ஸ்கூட்டரை நிறுத்திவிட்டு காம்பவுண்ட் கேட்டின் பூட்டைத் திறப்பதற்காக கைப்பையில் சாவியைத் தேடிக்கொண்டிருந்த ரிதன்யா, எதிர்வீட்டு வாசலில் வந்து நின்ற ஆட்டோவைப் பார்த்தாள். ஆட்டோவிலிருந்து ஓர் இளைஞனும், ஒரு பெண்ணும் இறங்கிக்கொண்டிருக்க... அந்த இளைஞனைப் பார்த்ததும் மலர்ந்தாள்.

கோவைக் கல்லூரியில் தான் பி.எஸ்ஸி படித்துக்கொண்டிருந்தபோது, அதே கல்லூரியில் எம்.எஸ்ஸி படித்துக்கொண்டிருந்த திவாகர். அவனும் பார்த்துவிட்டு மலர்ந்தான்... கையை தன் தலைக்கு மேல் உயர்த்தி அசைத்தான்.

'ஹாய்! நீங்க ரிதன்யாதானே?'

''ஆமா!'

திவாகர் ஆட்டோவை அனுப்பிவிட்டு ரிதன்யாவை நோக்கி வேகவேகமாய் வந்தான். ''என்ன ரிதன்யா... நீங்க எங்கே இப்படி?'

''சரியா போச்சு... இதுதான் என்னோட வீடு! நியாயமா நாந்தான் உங்களைக் கேள்வி கேட்கணும். இந்த மைகோ லேஅவுட்டில் யாரைப் பார்க்கணும்!'

திவாகர் சிரித்தான். ''ரிதன்யா! ஷி இஸ் மை வொய்ஃப். பேரு பூங்கொடி. ரெண்டு வாரத்துக்கு முந்திதான் கோயம்புத்தூர்ல கல்யாணம் நடந்தது. சின்னதா ஒரு ஹனிமூன் ட்ரிப் அடிக்க ஆசைப்பட்டு மைசூர் புறப்பட்டோம். நேத்து பூராவும் மைசூர், கூர்க்னு சுத்திட்டு, காலையில்தான் பெங்களூர் வந்தோம். உங்க வீட்

டுக்கு நேர் எதிரில் இருக்கிற வீட்டில் குடியிருக்கிற ஸ்வர்ணலதா, என்னோட கஸின் சிஸ்டர்.'

''மைகுட்னஸ்! இத்தனை நாளும் எனக்கும் தெரியாமே போச்சே!'

'₹இப்பத்தான் தெரிஞ்சு போச்சே! ஸ்வர்ண லதாவுக்கு என் பேர்ல ரொம்பவும் பிரியம். நானும் என்னோட வொய்ஃப் பூங்கொடியும் பெங்களூர் வரும்போது வீட்டுக்கு வரணும்னு சொல்லியிருந்தாங்க, வீட்டு அட்ரஸும் கொடுத்திருந்தாங்க. நாங்களும் ஒரு அரை மணி நேரத்துக்கு முந்தி ஒரு ஆட்டோ பிடிச்சு இங்கே வந்து சேர்ந்தோம். ஆனா, வீடு பூட்டியிருக்கு...''

ரிதன்யா இடைமறித்தாள். ''ஸ்வர்ணலதா ஒரு பேங்க் எம்ப்ளாயீ. அவங்க வேலைக்கு போயிருப்பாங்களே?''

''அது எங்களுக்கும் தெரியும் ரிதன்யா! வீட்ல சித்தியோ, சித்தப்பாவோ இருப்பாங்கனு நினைச்சோம். அவங்களும் இல்லை... அவங்க எங்கே போயிருப்பாங்கனு உங்களுக்கு ஏதாவது தகவல் தெரியுமா?''

"ஸாரி... தெரியலையே..! நானும் இப்பத்தான் வெளியே போயிட்டு வீட்டுக்கு வந்தேன். ஸ்வர்ண

லதாவுக்கு போன் பண்ணிப் பார்த்தீங்களா?"

"ம்... போன் பண்ணினேன்... ஸ்வர்ணலதா பேசினா.₹அம்மாவும் அப்பாவும் பக்கத்தில் இருக்கிற ஏதாவது ஒரு கோயிலுக்குப் போயிருப் பாங்க. வெயிட் பண்ணுங்க'னு சொன்னா. இங்கே பக்கத்துல என்ன கோயில் இருக்குனு சொல்ல முடியுமா?"

"இங்கிருந்து ஒரு கிலோ மீட்டர் தூரத்துல ஸ்ரீவசிஷ்டேஸ்வரா கோயில் இருக்கு. ஆனா, இந்நேரத்துக்கு கோயில் நடை சாத்தியிருக்கும். ஒருவேளை அவங்க கோயிலுக்குப் போயிருந்தா இந்நேரம் வந்துட்டிருப்பாங்க..!"

"ஓ.கே... ரிதன்யா! நாங்க வெயிட் பண்ணிப் பார்க்கிறோம்" சொல்லிவிட்டு நகர முயன்ற திவாகரையும் பூங்கொடியையும் ₹₹ஒரு நிமிஷம்!" என்று சொல்லி நிறுத்தினாள் ரிதன்யா.

"அவங்க வீடு பூட்டியிருக்கு... எங்கே வெயிட் பண்ணுவீங்க... இப்படி உள்ளே வந்து உட்காரலாமே?"

"வேண்டாம் ரிதன்யா..! நாங்க அந்த மரத்து நிழல்ல உட்கார்ந்து பத்து நிமிஷம் பேசிட்டிருந்தா அவங்க வந்துடப் போறாங்க... உங்களுக்கு எதுக்கு சிரமம்..?"

"இதுல எனக்கென்ன சிரமம்..? ஸ்வர்ண லதா ரொம்பவும் நல்ல டைப். என்கூட ஜோவியலா பேசுவாங்க... அவங்க வீட்டுக்கு நீங்க கெஸ்ட்டா வந்துட்டு, வீதியில நின்னு வெயிட் பண்ணலாமா? உள்ளே வந்து உட்காருங்க. டீ போட்டுத் தர்றேன். அதை சாப்பிட்டு முடிக்கிறதுக்குள்ளே கோயிலுக்குப் போயிருக்கிற சித்தியும் சித்தாப்பாவும் வந்துடுவாங்க... ப்ளீஸ்!"

ரிதன்யா சொல்லிக்கொண்டே காம்பவுண்ட் கேட்டைத் திறந்துகொண்டு உள்ளே போக... திவாகரும், பூங்கொடியும்

பின்தொடர்ந்தார்கள். வாசல் கதவின் லாக் விடுபட்டதும் விரிந்து பரந்த ஹாலும் அதன் மையத்தில் போடப்பட்டிருந்த பீட்ரூட் நிற சோபாக்களும் பார்வைக்குக் கிடைத்தன. ரிதன்யா சுவரில் இருந்த ஃபேன் சுவிட்ச்சைத் தேய்த்துவிட்டு சொன்னாள்.

"உட்காருங்க... நான் ரெண்டு நிமிஷத்துல டிரெஸ் சேஞ்ச் பண்ணிட்டு வந்துடறேன்." சொல்லிவிட்டு திரும்பிய ரிதன்யாவின் முதுகில் அந்தக் குரல் கேட்டது.

"நில்லு..! இந்த டிரெஸ்ஸே உனக்கு நல்லாத்தான் இருக்கு...!"



உடம்பின் ஒட்டுமொத்தமும் உறைந்து போனவளாய் ஸ்லோ மோஷனில் திரும்பினாள் ரிதன்யா.

அந்தப் பெண் பூங்கொடி கதவைச் சாத்திக் கொண்டிருந்தாள். திவாகரின் வலது கையில் ஒரு இஸ்ரோ மேக் பிஸ்டல் முளைத்திருக்க... அது, தன் ஒற்றைக் கண்ணால் ரிதன்யாவையே பார்த்தது.

**சென்னை.**

போலீஸ் கமிஷனர் ராஜகணேஷ், சைபர் க்ரைம் ஆபீஸருடன் இன்னர்செல்லில் இருந்து வெளிப்பட்டு, தன்னுடைய அறைக்குள் இறுகிய முகத்தோடு நுழைந்தார். 'யூ' வடிவத்தில் நாற்காலிகளைப் போட்டுக்கொண்டு கலக்கமாக உட்கார்ந்திருந்த பார்த்தசாரதி, சந்திரசூடன், அபிராமி, மீரா, மணிகண்டன் ஐந்து பேரும் ரத்தம் தொலைந்து போன முகங்களோடு அவரை ஏறிட்டார்கள்.

கமிஷனர் எல்லோரையும் பொதுப்படையாக சலனமில்லாத பார்வையில் நனைத்துக் கொண்டே சொன்னார்.

"மண் சட்டியில் இருந்த அந்த அஸ்தி சாம்பல் மனித உடம்பின் சாம்பல்தான்!"

பார்த்தசாரதி கண்களில் மின்னும் நீரோடு... ஏதோ பதற்றமாக சொல்ல முயல, அவரிடம் திரும்பினார் கமிஷனர்.

"ஸார், இது முதல் கட்ட சோதனைதான். டோன்ட் பி எமோஷனல். அந்த சாம்பலில் இருக்கிற எலும்புத் துணுக்குகளின் மூலமாக டி.என்.ஏ. டெஸ்ட் பண்ணி, அதை உங்க டி.என்.ஏவோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போதுதான் அது ஞானேஷா இல்லையானு தெரிய வரும். நீங்க ஒரு ரிடையர்ட் ஜட்ஜ். உங்களுக்கு நான் எதுவும் சொல்ல வேண்டியது இல்லை."

பார்த்தசாரதி அழுகையில் வெடித்தார்.

"அது ஞானேஷா இருக்காது!"

"இருக்கக் கூடாது என்பதுதான் என்னோட ஆசையும்! நீ என்னம்மா சொல்றே மீரா?"

கமிஷனரின் பார்வையும், கேள்வியும் ஒரு கத்திக் குத்து மாதிரி தன் மீது பாய... ஒரு சில விநாடிகளுக்கு நிலைகுலைந்து போனாள் மீரா.

"ஸ...ஸ... ஸார்..!"

கமிஷனரின் உதடுகளில் ஒரு மைக்ரோ விநாடி நேரத்துக்குள் ஒரு புன்னகை அரும்பி, அதே விநாடிக்குள் அஸ்தமனமாயிற்று. நிறுத்தி நிதானமான குரலில் பேசினார்.

"மீரா..! நீ கொஞ்சம் மனசு வெச்சா அது ஞானேஷோட சாம்பலா இல்லை... வேற யாரோடாவது சாம்பலானு டி.என்.ஏ. டெஸ்ட்டுக்குப் போகாமலேயே கண்டு பிடிச்சுடலாம்மா. நீ என்னம்மா சொல்றே?"

மீராவின் அப்பா சந்திரசூடன் இப்போது உஷ்ணமானார்.

"கமிஷனர் ஸார்! வாட் நான்சென்ஸ் யூ ஆர் டாக்கிங்? அவ சின்னப் பொண்ணு. மாப்பிள்ளை ஞானேஷை அவ போட்டோவில் பார்த்ததோடு சரி. நேர்ல ஒரு தடவை கூட பார்த்தது இல்லை. போன்ல பேசினதும் கூட கிடையாது. நடந்த சம்பவம் எங்களுக்கு எப்படி அதிர்ச்சியா இருக்கோ அதே மாதிரிதான் மீராவுக்கும். நீங்க என்னமோ அவளுக்கு எல்லா விஷயமும் தெரிஞ்ச மாதிரி பேசிட்டு இருக்கீங்க!"

கமிஷனர் கையமர்த்தினார். "ஸாரி மிஸ்டர் சந்திரசூடன்! நான் மீராகிட்டே கேள்வி கேட்டேன். ஆனா, நீங்க பதில் சொல்லிட்டு இருக்கீங்க. மீரா இன்னும் பேசலை... மீரா பேசட்டும்."

எல்லோருடைய பார்வைகளும் அம்புகளாய் மாறி மீராவை நோக்கிப் பாய, அவள் சன்ன மான குரலில் முனகினாள்.

"எனக்கு என்ன ஸார் தெரியும்?"

"நீ ஞானேஷைப் பார்த்ததில்லைன்னு உங்க அப்பா சொல்றார். அது உண்மையாம்மா?"

"ஆமா..."

"போன்ல பேசினது உண்டா?"

"இல்லை..."

"மீரான்னு பேர் வெச்சுகிட்டு பொய் சொல்லலாமா... அது ஒரு 'டிவைன் நேம்'மா!"

"என்ன ஸார்... என்னோட பொண்ணை மிரட்டறீங்களா?"

சந்திரசூடன் மறுபடியும் கோபாவேசமாய்க் கத்த, கமிஷனர் அவரை உன்னிப்பாக பார்த்த படி சொன்னார்.

"உங்க பொண்ணுகிட்டே ஏதோ ஒரு தப்பு இருக்கு. அந்தத் தப்புதான் இவ்வளவு பெரிய விபரீதத்துக்குக் காரணம்!"

"என்ன தப்பு..?"

"அது என்ன தப்புனு உங்க பொண்ணுதான் சொல்லணும்."

அபிராமி, மகள் மீராவின் தோள் பட்டையை இறுகப் பற்றி உலுக்கினாள். "என்னடி! அவர் பாட்டுக்கு ஏதேதோ சொல்லிட்டிருக்கார். நீ பதில் பேசாமே தலை குனிஞ்சுட்டு இருக்கே!"

மீரா முகம் வியர்ந்து வாய் உலர்ந்தாள். கமிஷனரிடம் திரும்பி ஏதோ பேச முயன்ற விநாடி... அவளுடைய கைப்பைக்குள் இருந்த செல்போன் வைப்ரேஷனில் அதிர்ந்தது. அந்த செல்போன் அழைப்பை மீரா தவிர்க்க முயல, கமிஷனர் சொன்னார்.

"எடுத்துப் பேசும்மா... ஏதாவது முக்கியமான போனா இருக்கப் போகிறது!"

மீரா கை நடுக்கத்தோடு செல்போனை வெளியே எடுத்து 'அழைப்பது யார்' என்று பர்த்துக்கொண்டிருக்கும்போதே எதிர்பாராத ஒரு விநாடியில் அதைத் தட்டிப் பறித்தார் கமிஷனர்.

செல்போனை உயர்த்திப் பிடித்துப் பார்த்தார்.

அவருடைய இரண்டு கண்களும் அனல் துண்டுகளாய் மாறின.

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

# நள்ளிரவு வானவில்!

கமிஷனர் ராஜகணேஷ் தன் கையில் இருந்த மீராவின் செல்போன் டிஸ்ப்ளேயில் ஒளிர்ந்த வாக்கியத்தை மறுபடியும் ஒரு தடவை உன்னிப்பாக பார்த்தார்.

'உன் இதயம் பேசுகிறேன்!'

மீராவிடம் காட்டி கேட்டார்.

'யார் இது..?'

அவளுடைய முகம் இப்போது அடியோடு மாறியிருந்தது.

"எ...எ... என்னோட ஃப்ரெண்ட் ஸார்.'

"பாய் ஃப்ரெண்ட்னு நினைக்கிறேன்..!'

'ஆமாம்' என்பது போல் தலையசைத்தாள்.

"பேரு...?'

"ப்ரணவ்."

சந்திரசூடனும் அபிராமியும் திகில் பரவிய முகங்களோடு ஒருத்தரையொருத்தர் பார்த்துக்கொள்ள... ராஜகணேஷ், மீராவிடம் செல்போனைக் கொடுத்தார்.

'ஸ்பீக்கரை ஆன் பண்ணிட்டு பேசு..!'



மீரா வியர்த்து வழிந்துகொண்டு ஸ்பீக்கரை 'ஆன்' செய்துவிட்டு ஈனஸ்வரமான குரலில் 'ஹலோ' என்றாள்.

மறுமுனையில் ஆண்குரலொன்று பதற்ற மாய் கேட்டது. 'மீரா! என்னாச்சு... என்னோட போன்காலை அட்டெண்ட் பண்ண ஏன் இவ்வளவு நேரம்?'

'அது... அது... வந்து... போனை வைப்ரேஷன்ல வெச்சிருந்தேன்.'

'சரி... நீ இன்னும் கமிஷனர் ஆபீஸ்லதான் இருக்கியா..?'

'ஆமா!'

'போன காரியம் என்னாச்சு... கமிஷனர் என்ன சொல்றார்?'

'பேசிட்டிருக்கோம்...'

'உன்னோட வாய்ஸ் ஏன் டல்லடிக்குது... ரொம்பவும் பயந்துட்டே போலிருக்கு..?'

'நா... நான்... அப்புறமா பேசறேன்!'

'புரியுது...! பக்கத்துல யாரோ இருக்காங்க போலிருக்கு. நாம எப்போ மீட் பண்ணலாம்...?'

'ஒரு வாரம் போகட்டும்..!'

'போலீஸ் அமளியெல்லாம் ஓயட்டும்னு சொல்றியா? அதுவும் சரிதான். இனிமே நான் உனக்கு போன் பண்ணமாட்டேன். ஃப்ரீயா இருக்கும்போது நீயே போன் பண்ணு!' மறு முனையில் இணைப்பு அறுந்துபோக, மீராவும் செல்போனை அணைத்தாள்.

எல்லோருடைய பார்வைகளும் குத்தீட்டி களாய் மாறியிருக்க, மீரா தலைகுனிந்திருந்தாள். சந்திரசூடன் தளர்ந்த நடையோடு எழுந்து பக்கத்தில் வந்தார்.

'என்னம்மா மீரா..! போன நிமிஷம் வரைக்கும் உன்னை ஒரு குழந்தை மாதிரி நினைச்சுட்டிருந்தேன். நீயோ என்னோட முதுகுக்குப் பின்னாடி ஒரு ருத்ரதாண்ட வத்தையே நடத்தியிருக்கே! யாரம்மா அந்த ப்ரணவ்..? நீ அந்தப் பையனைத்தான் காதலிக்கறேன்னு சொல்லியிருந்தா, எனக்கும் உங்கம்மாவுக்கும் உனக்காக வரன் பார்க்கிற வேலையே இருந்திருக்காதேம்மா...'

இரண்டு கண்களிலும் பாதரசம் போல் நீர் பளபளக்க சந்திரசூடனை நிமிர்ந்து பார்த்தாள் மீரா.

'அப்பா..! நான் காதலிக்கிற ப்ரணவ்வுக்கு அப்பா அம்மா கிடையாது. ஒரு சி.எஸ்.ஐ. அநாதை விடுதியில் வளர்ந்தவர். எப்படியோ படிச்சு முன்னுக்கு வந்து இன்னிக்கு ஒரு இன்ஷூரன்ஸ் கம்பெனியில் ஃபீல்ட் ஆபீஸரா வேலை பார்த்துட்டிருக்கார். எனக்கு வரப் போகும் மாப்பிள்ளை 'அப்படி இருக்கணும், இப்படி இருக்கணும்'னு நீங்களும் அம்மாவும் பேசும்போது நான் காதலிக்கிற ப்ரணவ் அவ்வளவு உயரத்தில் இல்லையேன்னு எத் தனையோ ராத்திரிகள் மனசு உடைஞ்சுபோய்

அழுதிருக்கேன். ஏதாவது ஒரு சந்தர்ப்பத்துல ப்ரணவ் பற்றி உங்ககிட்டே சொல்லிடணும்னு நினைச்சிருக்கும்போதுதான் ஞானேஷோட போட்டோவை கொண்டு வந்து என்கிட்டே காட்டி 'இவர்தான் உனக்குப் பார்த்து இருக்கிற மாப்பிள்ளை. அடுத்த மாசம் உன்னைப் பெண் பார்க்க டெல்லியிலிருந்து வரப்போறார்'னு சொன்னீங்க. அம்மாவும், நீங்களும் அப்போ ஒரு சந்தோஷமான மனநிலையில் இருந்ததால உடனடியா என்னோட எதிர்ப்பைத் தெரிவிக்க முடியலை. அம்மா தனியா இருக்கும்போது மொதல்ல அம்மாக்கிட்டே விஷயத்தை சொல்லிட்டு. அப்புறமா உங்ககிட்டே சொல்ல லாம்னு இருந்தேன். அதுக்குள்ளே டெல்லியில் இருந்து ஞானேஷ் எனக்கு போன் பண்ணிப் பேசினார்.'

மீரா பேசுவதை உன்னிப்பாக கேட்டுக் கொண்டிருந்த கமிஷனர் ராஜகணேஷ் இடை மறித்துக் கேட்டார்.

"ஞானேஷ் எதுக்காக போன் பண்ணினார்?"

ஒரு சில விநாடிகள் மௌனம் சாதித்த மீரா, பிறகு பெருமூச்சொன்றை வெளியேற்றிவிட்டு, பேச்சைத் தொடர்ந்தாள். 'பொதுவா அவர்க்கு யாரையும் கல்யாணம் பண்ணிக்கிறதுல இஷ்டமில்லைனு சொன்னார். அப்பாவோட கட்டாயத்துக்காகத்தான் அடுத்த மாசம் பெண் பார்க்க வரப்போவதாகவும், அப்படி வரும்போது என்னைப் பெண் பார்த்துட்டு, 'பெண்ணை எனக்கு பிடிக்கலை'ன்னு சொல்லப் போறதாகவும் அவர் சொன்னபோது எனக்கு ரொம்பவும் சந்தோஷமா இருந்தது. ஞானேஷோடு கல்யாணமில்லை என்று ஊர்ஜிதமானதும் நான் வீட்ல இயல்பா இருக்க ஆரம்பிச்சேன். ஞானேஷ் வந்துட்டு போனபிறகு என்னோட காதலை அப்பா அம்மாகிட்ட டிக்ளேர் பண்ற முடிவிலும் இருந்தேன். அவர் டெல்லியிலிருந்து சென்னைக்கு வர நடுவில் ஒரு மாத காலம் இருந்ததால அடிக்கடி எனக்கு போன் பண்ணுவார். அவர் அப்படி போன் பண்றது என்னோட வீட்டுக்கோ அவரோட அப்பாவுக்கோ தெரியக்கூடாதுன்னும் கண்டிஷன் போட்டார்.'

'தினமும் போன் பண்ணுவாரா?'

'ஆமா... குறைந்தபட்சம் இருபது நிமிஷ மாவது பேசுவார். ஆரம்பத்துல எனக்கு அது ஒரு பெரிய தொந்தரவா இருந்தது. ஆனா, அவர் வரம்பு மீறாம ஒரு ஃப்ரெண்ட் கிட்டே பேசற மாதிரி நாட்டில் நடக்கிற பிரச்னைகள், அரசியல், சினிமா, இலக்கியம்னு பேசவும், எனக்கும் அது பிடிச்சிருந்தது. அவரோட போன் எனக்கு வந்ததுமே நான் வீட்ல யாருக்கும் தெரிஞ்சுடக் கூடாதுங்கிறதுக்காக மொட்டை மாடிக்குப் போயிடுவேன்...'

'அவர் உனக்கு தினமும் ஏன் போன் பண்ணணும்?'

'இதே கேள்வியைத்தான் நானும் அவர்கிட்டே கேட்டேன்.'

'என்ன சொன்னார்?'

'என்கிட்டே பேசிட்டிருந்தா அவர்க்கு ஒரு 'ரிலாக்ஸ் ஃபீல்' ஏற்படறதா சொன்னார்."

'ஞானேஷ் ஏதாவது மனக் குழப்பத்துல இருந்தாரா?'

'அது மாதிரி தெரியல!'

'ரெண்டு நாளைக்கு முன்னாடியே ஞானேஷ் சென்னைக்கு வந்து அவருடைய நண்பர் மணிகண்டனுடன் தங்கி ஒரு ஹைடெக் மீட்டிங்கில் கலந்துகொள்ள ஏதோ ஒரு ஹோட்டலுக்கும் போயிருக்கார். இந்த விவரங்கள் எல்லாம் உனக்குத் தெரியாதா?'

'தெரியாது.'

'சரி! உன்னோட காதலன் ப்ரணவ்வுக்கு போன் போட்டு இங்கே வரச் சொல்லு..!'

'இங்கே அவர் எதுக்கு?'

'விசாரிக்கத்தான்.'

'அவரை எதுக்காக விசாரிக்கணும்... ஞானேஷுக்கும் அவருக்கும் எந்த சம்பந்தமும் இல்லை..!'

'சம்பந்தம் இருக்கா இல்லையான்னு ப்ரணவ்வை விசாரிக்கும்போதுதானே தெரியும்?'

'அவர் மேல சந்தேகப்படறீங்களா?'

'கொஞ்சம்.'

'ஸார்... ஹி ஈஸ் ஹார்ம்லஸ்..!'

'இதோ பாரம்மா..! ஒரு நபர் குற்றவாளியா இல்லையா என்கிற உண்மை அந்த நபர் போலீஸ் கஸ்டடிக்குள் வரும்போது மட்டுமே தெரியவரும்! நீ ப்ரணவ்க்கு போன் பண்ணி இங்கே வரச் சொல்லு...'

மீரா தயக்கமாய் நிற்க, அபிராமி சீறினாள். 'ஏய்! என்னடி... பெரிசா யோசனை பண்ணிட்டிருக்கே! கடந்த ஒருமாச காலமா நீயே எங்களை ஏமாத்திட்டு வந்திருக்கே... அந்த ப்ரணவ் இந்த விவகாரத்துல என்ன பண்ணியிருக்கான்னு தெரிய வேண்டாமா? போன் போடு... அந்தப் பையன் இங்கே வரட்டும்!'

மீரா தன் செல்போனை உயிர்ப்பித்து ப்ரணவ் எண்ணைத் தொடர்பு கொண்டாள். உடனே ரிக்கார்டட் வாய்ஸ் கேட்டது.

'நீங்கள் தொடர்புகொள்ள நினைக்கும் எண் தற்போது 'சுவிட்ச் ஆஃப்' செய்யப்பட்டுள்ளது!'

நான்கைந்து தடவை தொடர்புகொண்டும் அதே ரிக்கார்டட் வாய்ஸ் கேட்கவே கமிஷனரை ஏறிட்டாள் மீரா.

'போன் 'சுவிட்ச் ஆஃப்'ல இருக்கு ஸார்'

"அது எப்படிம்மா... இப்பத்தானே பேசினாரு?"

"என்னன்னு தெரியலை ஸார்."

'நீ ப்ரணவ்வோட நம்பர் சொல்லு... நான் என்னோட செல்போனிலிருந்து ட்ரை பண்றேன்..!"

மீரா நம்பர் சொல்ல, கமிஷனர் தன்னுடைய செல்போனில் எண்களைத் தட்டினார். மறுமுனை 'சுவிட்ச்டு ஆஃப்' என்றது.

"வேற நம்பர் இருக்கா?"

"இல்ல ஸார்... இந்த ஒரு நம்பர்தான்!"

"அவர் எங்கே வேலை பார்க்கிறார்னு சொன்னே?"

"ஒரு இன்ஷூரன்ஸ் கம்பெனியில்."

"கம்பெனியோட பேரு..?"

"டேடூடே லைஃப் இன்ஷூரன்ஸ். இப்ப அவர் கம்பெனியில்தான் இருப்பார்."

"கம்பெனியோட லேண்ட் லைன் டெலிபோன் நம்பர் இருக்கா..?"

"என்கிட்டே இல்ல ஸார்! நான் இதுவரைக்கும் அவர் வேலை செய்யற கம்பெனி நம்பருக்கு போன் பண்ணிப் பேசினது இல்லை..."



கமிஷனர் தனக்குப் பக்கத்தில் நின்றிருந்த உதவியாளரிடம் திரும்பினார். "அந்த இன்ஷூரன்ஸ் கம்பெனியோட டெலிபோன் நம்பர்ஸை கலெக்ட் பண்ணுங்க..."

"யெஸ்... ஸார்" என்று சொல்லி பக்கத்து அறைக்குள் நுழைந்த உதவியாளர், அடுத்த இரண்டு நிமிடத்துக்குள் டேடூடே இன்ஷூரன்ஸ் கம்பெனியின் லேண்ட் லைன் டெலிபோன் எண்களோடு வந்தார்.

"ஸார்! அந்த இன்ஷூரன்ஸ் கம்பெனி 'க்ரீன்வேஸ்' ரோட்ல இருக்கு. சென்னையில் வேற எங்கும் கிளைகள் கிடையாது. லேண்ட்லைன் நம்பர் மொத்தம் அஞ்சு இருக்கு!"

"அந்த நம்பர்களுக்கு போன் பண்ணி ப்ரணவ்வை பிடிங்க... உடனே கமிஷனர் ஆபீஸுக்குப் புறப்பட்டு வரச் சொல்லுங்க."

தலையசைத்த உதவியாளர் அங்கிருந்த படியே டேடூடே இன்ஷூரன்ஸ் கம் பெனியைத் தொடர்பு கொண்டார். கம்பெனி யின் பி.ஆர்.ஓ. செக்ஷனிலிருந்து ஒரு பெண் பேசினாள்.

"திஸ் ஈஸ் டேடூடே இன்ஷூரன்ஸ் கம்பெனி."

"கமிஷனர் ஆபீஸிலிருந்து பேசறோம்..."

"யெஸ்..!"

"வீ நீட் ஒன் இன்ஃபர்மேஷன்..."

"ப்ளீஸ்..."

"உங்க கம்பெனியில் ஃபீல்ட் ஆபீஸரா வொர்க் பண்ற ப்ரண்வ்கிட்டே கொஞ்சம் பேசணும்..."

"ப்ரணவ்..?"

"யெஸ்..."

"அந்தப் பேர்ல இங்கே யாரும் வேலை பார்க்கலையே!"

"ஃபீல்ட் ஆபீஸர்?"

"ஃபீல்ட் ஆபீஸர் என்கிற டெஸிக்னேஷனே இந்த கம்பெனியில் இல்லாதபோது ப்ரணவ் மட்டும் எப்படியிருப்பார்? ஸார்... வீ ஆர் ஹெல்ப்லஸ்!"

பெங்களூர்

ரிதன்யா அசையாமல் அப்படியே நின்றாள். திவாகரின் கையில் இருந்த பிஸ்டல் ஏதோ ஒரு பரம வைரியைப் போல் அவளையே பார்க்க... பூங்கொடி கதவைச் சாத்தி தாழிட்டுவிட்டு ரிதன்யாவை நெருங்கி, அவள் தோள் மீது கையை வைத்தாள்.

"அப்படி சோபாவில் போய் உட்கார்..."

"இப்ப... உங்க ரெண்டு பேருக்கும் என்ன வேணும்?"

"சொல்றோம்... நாங்க இந்த வீட்டுக்குள்ளே வந்தது வெறும் டீ சாப்பிட்டுப் போறதுக்காக மட்டுமில்லை. ஒரு வாரம் பத்து நாள் தங்கி டீடெய்லா சில விஷயங்களைப் பத்தி பேசிட்டு போகவும்தான் வந்திருக்கோம். மொதல்ல அப்படி போய் உட்கார்!"

ரிதன்யா வியர்த்து வழிந்துகொண்டு தயக்கமாக நடந்து போய் சோபாவின் நுனியில் உட்கார்ந்தாள். திவாகரும் பூங்கொடியும் அவளுக்கு எதிரேயிருந்த சோபாவில் சாய்ந்தார்கள். பிஸ்டல் மட்டுமே கருமமே கண்ணாய் குறி பார்த்தது. சில விநாடி மௌனத்துக்குப் பிறகு திவாகர் நிதானமான குரலில் பேசினான்.

"இதோ பார்..! இந்நேரம் உன்னோட போலீஸ் மூளை விதவிதமாய் யோசனை பண்ணி எங்களை எப்படி சமாளிக்கலாம்னு திட்டம் போட்டு கொடுத்துட்டு இருக்கும். அது மாதிரியான முட்டாள்தனத்தையெல்லாம் பண்ணிடாதே! அப்புறம் துபாயில் ஒரு ஹைடெக் அதிகாரியா வேலை

பார்க்கிற உன்னோட கணவரும், ஊட்டி கான்வென்ட்டில் படிக்கிற உன்னோட ஒன்பது வயசு பையனும் இந்த ஹால் சுவர்ல போட்டோக்களா மாறி ஊதுவத்தி வாசனையோடு மாலைகளைப் போட்டுக்கிட்டு..."

ரிதன்யா பயத்திலிருந்து விடுபட்டு துணிச்சலாக குரல் கொடுத்தாள்.

"திவாகர்! எதுக்காக இந்த அராஜகம்?"

"இன்னும் முன்னுரையே முடியலை... அதுக்குள்ளே இப்படி 'முணுக்'குன்னு கோபம் வந்தா எப்படி? நாங்க யாரு... எங்க பலம் என்னான்னு தெரிஞ்சாத்தானே உன்னால எங்களுக்கு முழு ஒத்துழைப்பு கிடைக்கும். பூங்கொடி... உன்னோட செல்போனை ஆன் பண்ணி, இப்ப துபாயில் மேடத்தோட ஹஸ்பண்ட் ஹரிகிருஷ்ணன் என்ன பண்ணிட்டிருக்கார்னு காட்டு."

ரிதன்யா மிரட்சியோடு பார்த்துக்கொண்டிருக் கும் போதே பூங்கொடி தன்னிடம் இருந்த உயர்ந்த ஜாதி செல்போனின் உடம்பைத் தேய்த்துவிட்டு காதுக்கு கொடுத்து பேசினாள்.

"உமர்! இப்ப எங்கே இருக்கே..?"

"கலீதா மாலில் இருக்கிற 'செகண்ட் பாரடைஸ்' ரெஸ்டாரன்ட்ல."

"ஹரிகிருஷ்ணன்?"

"ரெண்டு டேபிள் தள்ளி சிக்கன் ஃப்ரைடு ரைஸ் சாப்பிட்டுக்கிட்டு இருக்கார்."

"அவரை 'வாட்ஸ் ஆப்' பண்ணி எனக்கு அனுப்பு" பேசிவிட்டு செல்போனை அணைத்தாள் பூங்கொடி. ரிதன்யாவிடம் திரும்பினாள்.

"இந்த நிமிஷம் உன்னோட புருஷன் தன்னோட 'லஞ்ச் ஃபுட்' சிக்கன் ஃப்ரைடு ரைஸை சாப்பிட்டுகிட்டு இருக்கார். ராத்திரிக்கு அவர் டின்னர் சாப்பிட உயிரோட இருப்பாரா இல்லையாங்கிறது நீ இங்கே எங்ககிட்டே

நடந்துக்கிற விதத்துலதான் இருக்கு..." பூங்கொடி சொல்லிக்கொண்டிருக்கும்போதே அவளுடைய செல்போனில் அந்த 'வாட்ஸ் ஆப்' படம் வந்தது.

ரிதன்யாவிடம் காட்டினாள்.

"இதோ... உன் புருஷன்! சிக்கன் லெக் பீஸை என்னமா கடிச்சு இழுக்கறாரு பாரு..."

ரிதன்யா பார்த்துவிட்டு கலக்கமாய்க் கேட்டாள். "இப்ப உங்களுக்கு என்கிட்ட இருந்து என்ன வேணும்?"

"பொறு ரிதன்யா..! இப்படி அவசரப் பட்டா... எப்படி? எங்களோட பலம் என்னாங்கிறதை நீ முழுசா புரிஞ்சுக்க வேண்டாமா..? இந்த நிமிஷம் உன்னோட பையன் ஊட்டி கான்வென்ட்ல என்ன பண்ணிட்டிருக்கான்னு 'வாட்ஸ் ஆப்' எடுத்து அனுப்ப சொல்லட்டுமா..?"

"வேண்டாம்... நான் இப்போ எது மாதிரியான நிலைமையில் இருக்கேன்னு எனக்கு நல்லாவே புரியுது!"

"ஸோ... இந்த நிமிஷத்திலிருந்து நீ போலீஸ்காரி கிடையாது. ஒரு சாதாரணப் பெண். நாங்க எந்த நோக்கத்துக்காக இங்கே வந்தோமோ அந்த நோக்கம் நிறைவேறுகிற வரைக்கும் எங்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கணும். நாங்க இங்கே இருக்கிறதை நீ வெளியுலகத்துக்குத் தெரியப்படுத்த எந்த வகையில் முயற்சி பண்ணினாலும் சரி, துபாய்ல வேலை பார்க்கிற உன் புருஷனும், ஊட்டியில் படிச்சிட்டிருக்கிற உன்னோட பையனும்..."

முகம் சிவந்து ஆவேசமான ரிதன்யா தன்னுடைய இரண்டு காதுகளையும் பொத்திக்கொண்டு கத்தினாள்.

"புரியுது... புரியுது... புரியுது! உங்க டிமாண்ட் என்ன சொல்லுவாங்க..!"

"நள்ளிரவு வானவில்!" என்றான் திவாகர்.

# நள்ளிரவு வானவில்!- 6

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

நள்ளிரவு வானவில்!

ரிதன்யா சர்வாங்கமும் அதிர்ந்து போனவளாய் திவாகரைப் பார்த்தாள். அவளுடைய சிறிய நெற்றியில் வியப்பு வரி ஒன்று உற்பத்தியாயிற்று.

"நீ.. நீ... இப்போ... என்ன கேட்டே?'

"நள்ளிரவு வானவில்..."

"அப்படீன்னா..?"

திவாகரின் உதடுகளில் கோணல் புன்னகை நெளிnய... அவனுடைய கண்களில் சிரிப்பு தெறித்தது.

"உன்னோட பேரு ரிதன்யாதானே?" அவன் கேட்ட கேள்விக்கு ரிதன்யா பதில் சொல்லாமல் அப்படியே நின்றாள்.

"இதோ பார்..! நான் என்ன கேள்வி கேட்டாலும் சரி, பதில் உடனடியா வரணும்... அப்படி பதில் வரலைன்னா, என்னோட நடவடிக்கைகள் தமிழ் சினிமாவில் வர்ற வில்லன் ரேஞ்ச்சுக்கு இருக்கும்... ஒண்ணு சாம்பிளுக்கு பண்ணிக் காட்டவா..?"

"வே... வேண்டாம்!"

"அப்படீன்னா கேட்ட கேள்விக்குப் பதில். உன்னோட பேர் ரிதன்யாதானே..?"

"ஆ... ஆமா!"

"சைபர் க்ரைம் பிராஞ்சில் விஜிலன்ஸ் செகண்ட் கிரேடு ஆபீஸரா நீ வேலை பார்க்கிறே... சரிதானே?"

"ஆமா!"

"இப்ப நான் கேட்டதெல்லாம் எவ்வளவு சுலபமான கேள்விகளோ அதைவிட சுலபமான கேள்விதான் நள்ளிரவு வானவில். இதைப்பத்தி உனக்குத் தெரியுமா... தெரியாதா?"

"தெரியாது!"

திவாகர் பூங்கொடியிடம் திரும்பி அவளிடம் ஒரு ரூபாய் நாணயத்தைக் கொடுத்தான்.



"டாஸ் பண்ணு!"

அவள் நாணயத்தை மேல் நோக்கி சுண்டி விட்டாள். மேலே போய் சுழன்று கொண்டே கீழே வந்த நாணயத்தை சட்டென்று தாங்கிப் பிடித்து தன் உள்ளங்கையில் வைத்து மூடிக் கொண்டான் திவாகர். ரிதன்யாவிடம் திரும்பினான்.

"சொல்லு... பூவா... தலையா?"

ரிதன்யா பதில் சொல்லாமல் மௌனம் சாதிக்க, திவாகரின் அந்த கோணல் சிரிப்பு சற்றே பெரிதாயிற்று."சரி, நீ சொல்ல வேண்டாம். நானே சொல்றேன். தலை விழுந்து இருந்தா உன்னோட புருஷன் ஹரிகிருஷ்ணன் உயிரோடு இருக்க மாட்டான். பூ விழுந்து இருந்தா உன்னோட மகன் உயிரோடு இருக்க மாட்டான். கையை ஓப்பன் பண்ணிப் பார்த்துடலாமா?"

ரிதன்யா இதயம் இடிந்து போனவளாய் பின்னுக்கு நகர்ந்து சுவரில் சாய்ந்துகொண்டாள். உதடுகள் தன்னிச்சையாய் முனகின.

"வே... வேண்டாம்"

"என்ன வேண்டாம்.?"

"அ.... அ... அவங்களை ஒண்ணும் பண்ண வேண்டாம்."

"அதாவது, அவங்க ரெண்டு பேரும் உனக்கு வேணும்!"

"ஆமா!"

"அவங்க உனக்கு வேணும்னா எனக்கு அந்த நள்ளிரவு வானவில் வேணும்! அதைப் பத்தி எனக்கு எதுவுமே தெரியாதுன்னு நீ ரொம்ப நேரத்துக்கு சொல்லிட்டு இருக்க முடியாது. ஏன்னா, உன்னோட டிபார்ட்மென்ட்ல உனக்கு கொடுக்கப்பட்டு இருக்கிற வேலையே 'நள்ளிரவு வானவில்' சம்பந்தப்பட்டதுதான்!"

ரிதன்யா அவனையே பார்த்தாள். மனதின் ஓர் ஓரத்தில் எச்சரிக்கை வாசகங்கள் 'ஸ்க்ராலிங்'கில் ஓடின.

'இவனுக்கு எல்லாமே தெரிந்து இருக்கிறது. எதையும் மறைக்க முடியாது!'

திவாகர் இப்போது ரிதன்யாவுக்கு வெகு அருகில் வந்து அவனுடைய மூச்சுக் காற்று அவளுடைய முகத்தில் மோதும்படியாய் பேசினான். பான்பராக்கும் விஸ்கியும் கூட்டணி போட்டுக்கொண்டு நாறின.

"இதோ பார் ரிதன்யா..! நீ காலேஜ் டேஸ்ல பார்த்த திவாகர் கிடையாது நான்... படிச்ச படிப்புக்கு ஏற்ற வேலை கிடைக்காத காரணத்தால திசை மாறிப் பறந்த பறவை! இன்டர்நெட் உலகம் புத்திசாலியான ஆட்களுக்கு ஒரு அட்சயப்பாத்திரம். என்னை மாதிரியான ஆட்களுக்கு அது ஒரு திருட்டுச் சாவி. நம் நாட்டுல இருக்கிற பெரிய பெரிய ஐ.டி கம்பெனிகளில் எது மாதிரியான மோசடிகள் திரைமறைவில் அரங்கேற்றப்பட்டு, கோடிகளைக் கொட்டிகிட்டு இருக்குன்னு எனக்கு நல்லாவே தெரியும். என்னைக் காட்டிலும் பூங்கொடிக்கு நல்லாவே தெரியும். ஏன்னா, மெல்போர்னிலும், நியூஜெர்ஸியிலும் உள்ள ஐ.டி கம்பெனிகளில் தலா ரெண்டு வருஷம் வேலை பார்த்தவள். இந்த நிமிஷம் இந்தியாவில் இருக்கிற எல்லா ஐ.டி கம்பெனிகளைப் பற்றியும் அவளுக்குத் தெரியும். அந்தக் கம்பெனியோட லாப நஷ்டக் கணக்குகளும் தெரியும். எது பந்தயக் குதிரை, எது நொண்டிக் குதிரை என்கிற லிஸ்ட் அவளுக்கு மனப்பாடம்.

அதே மாதிரி போலீஸோட சைபர் க்ரைம் பிராஞ்சில் எது மாதிரியான இன்வெஸ்டிகேஷன்ஸ் 'ஹாட்' டா இருக்குங்கிற விவரமும் பூங்கொடிக்கு தெரியும். அப்படி ஹாட்டான விஷயங்களில் ஒண்ணுதான்... நள்ளிரவு வானவில்!"

அதுவரைக்கும் ஒன்றும் பேசாமல் தள்ளி நின்றிருந்த பூங்கொடி ரிதன்யாவைப் பார்த்துக் குரல் கொடுத்தாள்.

"இப்ப சொல்லு... அந்த 'நள்ளிரவு வானவில்' பற்றி உனக்குத் தெரியுமா... தெரியாதா..?"

ரிதன்யாவின் முகம் ஒரு வியர்வைக் குளியலுக்கு உட்பட்டிருக்க, உதடுகள் உப்புத்தாளாய் வறண்டு போயிருந்தன.

'இனி இவர்கள் விடமாட்டார்கள்... சொல்லிவிட வேண்டியதுதான்!'

'தெரியும்' என்பது போல் மெல்ல தலையாட்டினாள்.

"இது புத்திசாலித்தனம்..! இந்த புத்திசாலித் தனம் கடைசி வரைக்கும் இருக்கணும். இனி உன்னோட வாயிலிருந்து ஒரு எழுத்துகூட பொய்யா வரக் கூடாது. நீ எந்த அளவுக்கு ஒத்துழைப்பு தர்றியோ அந்த அளவுக்கு உன்னோட புருஷனும் மகனும் சேஃப்பா இருப்பாங்க... சரி, அது என்ன 'நள்ளிரவு வானவில்'..?"

"அது ஒரு சட்டவிரோதமான சைபர் குற்றம்..".

"இதை நீ சொல்லணுமா என்ன..? அதுக்கு என்ன அர்த்தம்னுதான் கேட்டேன்!"

"அதைக் கண்டுபிடிக்கிற பொறுப்பைத்தான் என்கிட்டே குடுத்திருந்தாங்க. என்னால கண்டுபிடிக்க முடியலை... இன்னும் வெளிப் படையா சொல்லணும்னா ஒரு மணி நேரத்துக்கு முன்னாடி அந்தப் பொறுப்பிலிருந்து நான் விலகிட்டேன்!"

திவாகர் திகைப்பில் அவளைப் பார்த்தான்.

"என்னது...! பொறுப்பிலிருந்து விலகிட்டியா!"

"ஆமா!"

"ஏன்?"

"இந்த 'நள்ளிரவு வானவில்' விசாரணையை இன்னிக்குக் காலையில்தான் ஆரம்பிச்சேன். ஆரம்பிச்ச அடுத்த சில மணி நேரத்துக்குள்ளாகவே ரெண்டு பேர் உயிரோடு இல்லை. முதலாவது நபர் இரண்டாம் நாரதர். அவர் ஒரு டி.வி ரிப்போர்ட்டர். 'நள்ளிரவு வானவில்' மேட்டரை முதன்முதலா போலீஸ் க்ரைம் பிராஞ்சுக்கு இன்ஃபார்ம் பண்ணினது அவர்தான். ரெண்டாவது நபர் கர்நாடகாவின் சூப்பிரெண்

டென்ட் ஆஃப் போலீஸ் சந்திர கவுடா. இவர் ஒரு நேர்மையான போலீஸ் ஆபீஸர். இந்த கேஸை இன்வெஸ்டிகேட் பண்ணி உண்மைகளை வெளியே கொண்டு வரணும்னு சொல்லி எனக்கும் கமிஷனர் நம்பெருமாளுக்கும் ஆர்டர் இஷ்யூ பண்ணினது இவர்தான். இவரும் இப்போ உயிரோடு இல்லை. யஷ்வந்த்பூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில் அவர் போயிட்டிருந்த ஜீப்பை நோக்கி ஒரு பெட்ரோல் குண்டு வீசப்பட்டு ஜீப் வெடித்து சம்பவ இடத்திலேயே உடல் கருகி மரணம்!"

திவாகர் திகைத்த விழிகளோடும் ஒரு உஷ்ணமான பெருமூச்சோடும் தன் தாடையை இடது கை விரல்களால் வருடினான்.

"இந்த விஷயத்துக்குள்ளே இவ்வளவு பெரிய வீரியமான விபரீதமா?'

"இன்வெஸ்டிகேஷனை ஆரம்பிச்ச முதல் நாளே இந்த விஷயத்தோட சம்பந்தப்பட்ட இரண்டு பேர் அடுத்தடுத்து இறந்து போனதில் டி.எஸ்.பி. நம்பெருமாள் அதிர்ச்சியடைந்து என்னை இந்தப் பொறுப்பிலிருந்து விலகச் சொல்லிட்டார்."

"நீயும் விலகிட்டே?"

"ஆமா... வேற வழி..! என்னுடைய மேலதிகாரியே பயப்படும்போது நான் என்ன செய்ய முடியும்..?"

"அப்படீன்னா... அந்த 'நள்ளிரவு வானவில்' விவகாரம்?"

"சைபர் க்ரைம் பிராஞ்சில் இருக்கிற வேற எந்த ஒரு அதிகாரியாவது கொஞ்சநாள் கழிச்சு அந்த இன்வெஸ்டிகேஷனை ஸ்டார்ட் பண்ணலாம்னு நினைக்கிறேன்!"

"கொஞ்சநாள்னா எவ்வளவு?"

"ரெண்டு அல்லது மூணு வாரம்."

"வேறு எந்த ஒரு அதிகாரியாவது வந்து அதை இன்வெஸ்டிகேட் பண்ணி 'நள்ளிரவு வானவில்' சம்பந்தப்பட்ட உண்மைகளைத் தோண்டி எடுக்கிறதுக்கு முந்தி அந்த உண்மைகள் எனக்கு வேணும்! அதுக்கு உன்னோட ஒத்துழைப்பு வேணும்!"

"என்னது..! என்னோட ஒத்துழைப்பா... நாந்தான் அந்த இன்வெஸ்டிகேஷன் பொறுப்பிலிருந்து விலகிட்டேனே?"

திவாகர் சிரித்தான்.

".எஸ்.பி. நம்பெருமாள் சொன்ன துக்காக நீ விலகியிருக்கலாம் ஆனா, எனக்காக நீ அந்த இன்வெஸ்டிகேஷனை கண்டினியூ பண்ணணும்..."

ரிதன்யா உறைந்தாள்.

"உனக்கு என்ன பைத்தியமா...? டி.எஸ்.பி. நம்பெருமாளே கதிகலங்கிப் போய் அந்த விஷயத்திலிருந்து பின்வாங்கிட்டார். என்னையும் நீ இதுல இன்வால்வ் பண்ண வேண்டாம்னு சொல்லிட்டார். அவர் என்னோட பாஸ். அவரோட பேச்சைத்தான் கேட்கணும்!"

திவாகர் குரலை உயர்த்தினான் "இதோ பார் ரிதன்யா! நீ இனிமே என்னோட பேச்சைத்தான் கேட்கணும். உனக்கு ரெண்டு வாரம் அவகாசம். இந்த ரெண்டு வாரத்துக்குள்ளே அந்த நள்ளிரவு வானவில் என்னோட கண்ணுக்குத் தெரியணும். தெரிய வைக்கணும். உன்னால அது முடியாத பட்சத்துல நீ நிரந்தரமா உன்னோட ரெண்டு உறவுகளையும் இழக்க வேண்டி வரும்..."

திவாகர் உதிர்த்த உக்கிரமான வார்த்தைகளில் உருக்குலைந்து போன ரிதன்யா தன்னிச்சையாய் தளர்ந்து சுவரில் சாய்ந்து உட்கார்ந்தாள்.

**சென்னை.** ராத்திரி மணி ஏழு.

அடையாறின் மையத்தில் இருந்த 'ஸ்கை வ்யூ' ஹோட்டலின் கார் பார்க்கிங்கில் தன்னுடைய 'சான்ட்ரோ' காரை நிறுத்திவிட்டு சந்தன நிற

ச:ஃபாரியில் இறங்கினார் கமிஷனர் ராஜகணேஷ். ஏழு மாடிகளோடு பிரமாண்டம் காட்டிய ஹோட்டலின் ரிசப்ஷன் ஹால் ஏதோ ஒரு ஏர்போர்ட்டின் லவுஞ்ச் போல பரபரப்பாய் இருந்தது. பெரிய டி.வி. திரைகளில் கிரிக்கெட் மேட்ச் நடந்து கொண்டிருக்க, இந்தியாவிடம் பாகிஸ்தான் தோற்றுக் கொண்டிருந்தது.

ராஜகணேஷ் ரிசப்ஷன் கவுண்ட்டரில் சித்தனவாசல் ஓவியம் போல உட்கார்ந்திருந்த அந்த 19 வயது சொர்க்கத்துக்கு முன்பாக போய் நின்றார். கம்ப்யூட்டர் ஸ்க்ரீனில் ஒரு பில்லை ப்ரிப்பேர் செய்துகொண்டிருந்த அந்தப் பெண். நிமிர்ந்தாள். பென்சில் கோடு புருவங்களுக்கு கீழே இரண்டு அலையடிக்காத கடல்கள் தெரிய, பீட்ரூட்டின் சிவப்பு சதைபிடிப்பான உதடுகளில் உறைந்து போயிருந்தது.

’யெஸ்...!” சொல்லி அவள் புன்னகைத்த போது முத்துச்சரம் ஒன்று விநாடி நேரம் தெரிந்து உடனே மறைந்தது.

ராஜகணேஷ் குரலைத் தாழ்த்தினார்.

"ஒரு தகவல் வேண்டும்.”

"ப்ளீஸ்...”

ராஜகணேஷ் தன் சட்டைப் பையில் வைத்து இருந்த ஞானேஷின் போட்டோவை எடுத்துக் காட்டினார்.

’இவரை உங்களுக்குத் தெரியுமா?’

அவள் போட்டோவை வாங்கிப் பார்த்துவிட்டு அந்த விநாடி மறைவதற்கு முன் தலையாட்டினாள். காதுகளில் தொங்கிக் கொண்டிருந்த தங்கத்துணுக்குகள் ரம்மியமாய் அசைந்தன.

’ஸாரி... தெரியலை.’

'இட்ஸ் ஓ.கே... நேற்றைக்கு ராத்திரி இந்த ஹோட்டலில் ஏதாவது 'ஹைடெக்' மீட்டிங் நடந்ததா?'

அந்த ரிசப்ஷனிஸ்ட் பதில் சொல்வதற்குமுன் பக்கவாட்டில் அந்தக் குரல் கேட்டது. 'எக்ஸ்க்யூஸ்மீ ஸார்...'

ராஜகணேஷ் திரும்பினார்.

நடுத்தரவயதில் வழுக்கைத் தலையோடு டை அடித்த மீசையுடன் ஃபுல்சூட்டில் அந்த நபர் தெரிந்தார். ஒரு மெல்லிய புன்முறுவலோடு சொன்னார்.



'ஸார்... ஐயாம் புவனேந்திரன்... இந்த ஹோட்டலின் மானேஜர். போலீஸ் கமிஷனரே எங்க ஹோட்டலுக்கு வந்திருக்கீங்க... பர்ப்பஸ் என்னனு தெரிஞ்சுக்கலாமா ஸார்?'

'ஒரு என்கொயரி...'

'என்னோட ரூமுக்குப் போயிட

லாம் ஸார்... ப்ளீஸ் கம்!' சொன்ன புவனேந்திரன் ரிசப்ஷன் ஹாலின் கோடியில் இருந்த தன்னுடைய அறையை நோக்கிப் போனார். ராஜகணேஷ் பின்தொடர்ந்தார்.

ஒரு நிமிட நடைக்குப் பின் இருவரும் அறைக்குள் நுழைந்தார்கள். புவனேந்திரன் கமிஷனருக்கு இருக்கையை காட்டிவிட்டு, எதிரில் இருந்த இருக்கையில் சாய்ந்தார்.

'என்ன என்கொயரி ஸார்?'

'நேத்து உங்க ஹோட்டலில் ஐ.டி பீப்பளோட ஹைடெக் மீட்டிங் ஏதாவது நடந்ததா?'

'இல்லையே!'

'நல்லா யோசனை பண்ணி சொல்லுங்க...!'

'இதுல யோசனை பண்ண ஒண்ணுமேயில்லை... கடந்த ஒரு வார காலமா இந்த ஹோட்டலில் ஒரு ஃபங்க்ஷன்கூட நடக்கலை ஸார்...'

'ஆர் யூ ஷ்யூர்?'

'நோ டவுட் ஸார்!'

'இந்த போட்டோவைப் பாருங்க..!' ஞானே ஷின் போட்டோவை எடுத்து நீட்டினார் ராஜகணேஷ். புவனேந்திரன் வாங்கிப் பார்த்துவிட்டு தன் பரந்த நெற்றியில் நான்கைந்து வியப்பு வரிகளை உற்பத்தி செய்தார்.

'யார் ஸார் இந்தப் பையன்?'

'பேரு ஞானேஷ். டெல்லியில் இருக்கிற ஒரு பெரிய ஐ.டி கம்பெனியில் நல்ல வேலை. நேத்து ராத்திரி உங்க ஹோட்டலில் ஒரு ஹைடெக் மீட்டிங் நடக்க இருக்கிறதா சொல்லி இந்த ஞானேஷ் ஒரு கால்டாக்ஸியில் புறப்பட்டு

வந்து இருக்கான். அந்த டாக்ஸி எதுன்னு ட்ரேஸ் அவுட் பண்ணி டிரைவரையும் புடிச்சுட்டோம். டிரைவரோட ஸ்டேட்மென்ட்படி ஞானேஷ் இந்த ஹோட்டலுக்குத்தான் வந்திருக்கான். அதுக்கப்புறம் ஞானேஷ் வீடு திரும்பலை. இன்னிக்குக் காலையில் ஒரு மண் சட்டியில் இது ஞானேஷோட அஸ்தி என்கிற ஒரு குறிப்போடு யாரோ சாம்பலை அனுப்பி வெச்சிருக்காங்க... சாம்பலை முதற்கட்ட பரிசோதனைக்கு உட்படுத்திப் பார்த்ததில் அது மனித சாம்பல்தான்னு தெரிய வந்திருக்கு!'

புவனேந்திரனின் விழிகளில் மருட்சி பரவியது. 'என்ன ஸார்! விஷயம் விபரீதமா இருக்கு!'

'அதனால்தான் இந்த கேஸ்ல நானே 'இன்வால்வ்' ஆகியிருக்கேன். பையன் பெரிய இடம். ரிட்டையர்ட் ஹைகோர்ட் ஜட்ஜ் பார்த்தசாரதியோட ஒரே பையன். அவன் டெல்லியிலிருந்து இன்னிக்குத்தான் சென்னைக்கு வந்து இருக்கணும். ஆனா, ரெண்டு நாளைக்கு முன்னாடியே வந்திருக்கான். வீட்டுக்கு தெரியாமே ஒரு ஃப்ரெண்ட்டோட வீட்ல தங்கிகிட்டு உங்க ஹோட்டலுக்கு வந்திருக்கான். இங்கே ஒரு ஹைடெக் மீட்டிங் நடக்கிறதா சொல்லியிருக்கான்.'

'ஸார்...! ஞானேஷ் பொய் சொல்லியிருக் கார்னு நினைக்கிறேன். நேத்து ராத்திரி அவர் இங்கே வந்திருந்தா இந்த ஹோட்டலில் பொருத்தப்பட்டு இருக்கிற சி.சி.டி.வி. கேமராக்கள் ஏதாவது ஒண்ணுல பதிவாகி இருப்பார். இப்பவே அதை 'செக்' பண்ணிப் பார்த்துடலாம்!' சொன்ன புவனேந்திரன் தனக்கு முன்னால் இருந்த இன்டர்காமின் ரிஸீவரை எடுத்து ஒரு பட்டனை அழுத்திவிட்டு பேசினார்.

'கிறிஸ்டோபர்...'

'ஸார்...'

'நேத்து சாயந்தரம் ஆறுமணியிலிருந்து ராத்திரி பத்து மணி வரைக்கும் சி.சி.டி.வியில் பதிவான பதிவுகளை டி.வி.டிக்கு ஃபார்மட் பண்ணியாச்சா?'

'பண்ணியாச்சு ஸார்!'

'அந்த டி.வி.டியை எடுத்துகிட்டு என்னோட ரூமுக்கு உடனடியா வாங்க!'

'இதோ...ரெண்டு நிமிஷத்துல வர்றேன் ஸார்.'

புவனேந்திரன் ரிஸீவரை வைத்துவிட்டு டி.வி.டியோடு வரப்போகும் கிறிஸ்டோ பருக்காக காத்திருக்க ஆரம்பித்தார்.

இரண்டு நிமிடம் ஐந்து நிமிடமாகி, பத்து நிமிடமாக மாறி, இருபது நிமிடமாக வளர்ந்து, முப்பது நிமிடமாக உருவெடுத்த பின்பும் கிறிஸ்டோபர் வரவில்லை.

## நள்ளிரவு வானவில்!- 7

**ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்**

# நள்ளிரவு வானவில்!

**போலீஸ்** கமிஷனர் ராஜகணேஷ் ஒட்டுமொத்த பொறுமையையும் இழந்தவராய் ஹோட்டல் மானேஜர் புவனேந்திரனை ஏறிட்டார்.

'என்னாச்சு... அந்த கிறிஸ்டோபருக்கு?'

'தெரியலை ஸார்...'

'ரெண்டு நிமிஷத்துல வர்றேன்னு சொன்னவர் இவ்வளவு நேரம் எடுத்துக்க வேண்டிய அவசியம் என்ன..?'

''அவரோட செல்லுக்கு போன் பண்ணிப் பார்த்தா 'நாட் ரீச்சபிள்'னு ரிக்கார்டட் வாய்ஸ் வருது. நான் போய் நேர்ல பார்த்துட்டு வரட்டுமா ஸார்..?'

'கேமரா யூனிட்டோட ஆபரேஷன் சிஸ்டம் எங்கேயிருக்கு?'

'அண்டர் கிரவுண்ட் செல்லர்ல இருக்கு ஸார்.'

'வாங்க, போய்ப் பார்க்கலாம்... முடிஞ்சா அங்கேயே வியூ பண்ணிடலாம்...'

இருவரும் அறையிலிருந்து வெளிப்பட்டார்கள். ஹோட்டலின் பக்கவாட்டில் இருந்த நீச்சல் குளத்தில் ஸ்விம் சூட்டில் இளம் பெண்கள் தெரிந்தார்கள். சிரிப்பும் கூச்சலும் விட்டு விட்டுக் கேட்டன.

ராஜகணேஷ் நடந்து கொண்டே கேட்டார். 'சி.சி.டி.வி. கேமரா யூனிட்டில் எத்தனை பேர் வேலை செய்யறாங்க?'

’மொத்தம் மூணு பேர் ஸார்... அதுல ரெண்டு பேர் லீவு போட்டிருக்காங்க. இப்போதைக்கு கிறிஸ்டோபர் மட்டும்தான்...’

’அந்த ரெண்டு பேரும் எத்தனை நாளா லீவு..?’



’அஞ்சு நாளா ஸார்... நாளைக்கு வந்துடுவாங்க. ப்ளீஸ் கம் திஸ் சைட் ஸார்’

- சொன்ன புவனேந்திரன் ஜெனரேட்டர் அறைக்குப் பக்கத்தில் இருந்த படிக்கட்டுகளில் இறங்கினார். செல்லர் அரைகுறை வெளிச்சத்தில் நிறைய பில்லர்களோடு தெரிந்தது.

இருவரும் பில்லர்களுக்கு நடுவே நடந்து செல்லரின் மையத்தில் இருந்த அந்தச் சிறிய அறைக்கு முன்பாக நின்றார்கள். சாத்தியிருந்த கதவில் 'C.C.T.V. UNIT - ENTRY RESTRICTED' என்கிற வாசகங்களோடு ஸ்டிக்கர் ஒட்டப்பட்டு இருந்தது. கதவைத் தள்ளிப் பார்த்தார் புவனேந்திரன். பூட்டப்பட்டிருப்பதற்கு அடையாளமாய் அது அசைய மறுத்தது.

'ஸார்... ரூம் லாக் ஆகியிருக்கு!'

'அப்படீன்னா கிறிஸ்டோபர் உங்களைப் பார்க்கிறதுக்காக ரூமைவிட்டு வெளியே வந்து இருக்கணும்... இல்லையா..?'

'ஆமா ஸார்...'

'பட்... அவர் வரலை... இங்கேயிருந்து உங்க ரூமுக்கு ரெண்டு நிமிஷ நடைதான். பை த பை... கிறிஸ்டோபர் எப்படிப்பட்ட ஆள்? அவர் பேர்ல ஏதாவது பிளாக் மார்க்ஸ் உண்டா?'

'இல்ல ஸார்... ஹி இஸ் எ நைஸ் பர்சன். வேலைக்கு சேர்ந்து அஞ்சு வருஷமாச்சு... டியூட்டி கான்ஷியஸ் அதிகம். வருஷத்துல ஒருநாள் ரெண்டுநாள் லீவு எடுத்தாலே பெரிய விஷயம்...'

''அப்படிப்பட்டவர் உங்களை வந்து பார்க்கலை... ஸோ, அவர்கிட்டே ஏதோ தப்பு இருக்கு. ஞானேஷ் மேட்டரோடு இந்த கிறிஸ்டோபர் ஏதோ ஒரு வகையில் சம்பந்தப்படறார்னு நினைக்கிறேன். நீங்க சி.சி.டி.வி. சம்பந்தப்பட்ட டி.வி.டிகளைக் கேட்டதும் உஷாராகியிருக்கணும். நான் இந்த ஹோட்டலுக்கு வந்திருக்கிற விஷயமும் கிறிஸ்டோபருக்கு தெரிஞ்சிருக்கணும். உடனே ஹோட்டலைவிட்டு வெளியேறிட்டார்.'

'ஸார்! அப்படி அவர் ஹோட்டலை விட்டு வெளியே போயிருந்தா சென்ட்ரிகளோட பார்வையில் பட்டிருப்பார். ஹோட்டலுக்கு முன்புறம் இருக்கிற கேட்டிலும் சரி, பின்புறம் இருக்கிற கேட்டிலும் சரி... அஞ்சு சென்ட்ரீஸ் இருக்காங்க. அவங்க பார்வையில் படாம யாரும் வெளியே போக முடியாது. இந்த ஹோட்டலில் பணிபுரியற நபர் யாராக இருந்தாலும் சரி,

டியூட்டி நேரத்துல வெளியே போனா, அது சென்ட்ரியோட 'டைம் கீப்பிங்' கம்ப்யூட்டர்ல பதிவாயிடும். மறுபடியும்

அந்த நபர் உள்ளே வரும்போது 'என்ட்ரி' போட்டுடும்.'

'தென் நோ பிராப்ளம்..! நீங்க உடனடியா அந்த சென்ட்ரிகளை போன்ல காண்டாக்ட் பண்ணி கிறிஸ்டோபர் வெளியே போனாரா, இல்லையாங்கிறதை கன்ஃபார்ம் பண்ணிக்குங்க!'

'இதோ..!' என்று சொன்ன புவனேந்திரன் தன்னுடைய செல்போன் மூலம் ஹோட்டலின் முன்புறமும் பின்புறமும் பாதுகாப்பு பணியில் ஈடுபட்டிருந்த சென்ட்ரிகளை தொடர்புகொண்டு பேசிவிட்டு கமிஷனரிடம் திரும்பினார். குரலில் உறுதி தொனிக்கச் சொன்னார்.

'ஸார்! கிறிஸ்டோபர் ஹோட்டலைவிட்டு வெளியே போகலை.'

'ஸோ... அவர் இந்த ஹோட்டலுக்குள்ளேயேதான் இருக்கிறார்..?'

'மே பி..!'

'இப்படியொரு கண்ணாமூச்சி விளையாட்டை கிறிஸ்டோபர் ஏன் விளையாடணும்..? மறுபடியும் அவரோட செல்போன் நம்பருக்கு ட்ரை பண்ணிப் பாருங்க!'

'பண்ணிப் பார்த்துட்டேன் ஸார்... ஸேம் ரிக்கார்டட் வாய்ஸ் தான் கேட்குது!'

'இவ்வளவு பெரிய ஹோட்டலில் அவர் எங்கே இருப்பார்ங்கிறதை எப்படி டிரேஸ் அவுட் பண்ணப் போறோம்.'

'இந்த ஹோட்டலில் இருக்கிற எல்லா செக்ஷன்களுக்கும் தகவல் குடுத்துட்டா ஒட்டுமொத்த ஸ்டாஃப்பும் ஒரே நேரத்துல தேடிப் பார்த்து கிறிஸ்டோபர் இருக்கிற இடத்தை 'ஸ்பாட் அவுட்' பண்ணிருவாங்க ஸார்...'

சொல்லிவிட்டு நகர முயன்ற ஹோட்டல் மானேஜரை கையமர்த்தினார் கமிஷனர்.

'ஒரு நிமிஷம் மிஸ்டர் புவனேந்திரன்!'

'ஸார்...'

'இந்த சி.சி.டி.வி. ஆபரேஷன் யூனிட்டோட ரூமை கிறிஸ்டோபர் 'லாக்' பண்ணிட்டுப் போயிருக்கார். இந்த ரூமுக்கு டூப்ளிகேட் சாவி ஏதாவது இருக்கா?'

'இருக்கு ஸார்..!'

'அந்த சாவியைக் கொண்டு வந்து இந்த ரூமை ஓபன் பண்ணுங்க... உள்ளே டி.வி.டி. ஏதாவது இருக்கலாம்!'

'ஒன் மினிட் ஸார்...' புவனேந்திரன் தன் செல்போன் மூலம் யாரிடமோ தொடர்புகொண்டு பேச, அந்த நிமிடம் முடிவதற்குள், நீலநிற யூனிஃபார்ம் அணிந்த ஹோட்டல் ஊழியர் ஒருவர் மூலமாக சாவி வந்து சேர்ந்தது.

'ரூமை ஓபன் பண்ணுங்க!'

புவனேந்திரன் அந்த மேக்னடிக் லாக்கரை தன் கையில் இருந்த சாவியின் உதவிகொண்டு திறந்தார்.

இருவரும் உள்ளே நுழைந்தார்கள். அறைக்குள் ஸ்பிலிட் ஏ.ஸி. ரீங்காரம் செய்துகொண்டிருக்க, ஊட்டியின் டிசம்பர் குளிர் உடம்புக்குள் ஊடுருவியது. அறையின் சுவரோரமாக போடப்பட்டு இருந்த நீளமான ஃபைபர் மேஜையின் மேல் வரிசையாக உட்கார்ந்திருந்த கம்ப்யூட்டர்களின் திரைகளில் சி.சி.டி.வி. கேமராக்கள் அனுப்பிய ஹோட்டலின் நிகழ்வுகள் செக்ஷன் வாரியாக மெதுவாக நகர்ந்து கொண்டிருந்தன.

'மிஸ்டர் புவனேந்திரன்!'

'ஸார்...'

’நீங்க போன் பண்ணிக் கூப்பிட்டதுமே கிறிஸ்டோபர் தேவையான டி.வி.டிக்களை எடுத்துகிட்டு உடனடியா அறையை விட்டு வெளியேறி இருக்கார்னு எனக்குத் தோணுது’ கமிஷனர் சொல்ல, அதற்கு பதில் சொல்லாத புவனேந்திரன் மேஜையின் மேல் இருந்த பேனாவையும் பேப்பரையும் எடுத்துக்கொண்டு வேகவேகமாய் ஏதோ எழுதி கமிஷனரிடம் நீட்டினார்.

அவர் வாங்கிப் படித்தார்.

வாக்கியங்கள் முழுமையாயில்லாமல் துண்டு துண்டாய் தெரிந்தன.

ஸார்!

எச்சரிக்கை அவசியம்.

கிறிஸ்டோபர் வெளியே போகவில்லை.

இதே அறையில் மூலையில் உள்ள பெரிய பீரோவுக்குப் பின்னால் ஒளிந்துகொண்டு இருக்கிறான்.

உடனடியாக திரும்பிப் பார்த்துவிடாதீர்கள்.

நமக்குத் தெரியாதது போலவே காட்டிக்கொள்வோம்.

அவனை எப்படி மடக்குவது என்பதை நீங்கள்தான் முடிவு செய்ய வேண்டும்.’

கடிதத்தைப் படித்து முடித்த கமிஷனர் லேசாக முகம் மாறினார். புவனேந்திரனுக்கு வெகு அருகே போய் நின்றபடி அவருக்கு மட்டும் கேட்கும்படியான ஹஸ்கி வாய்ஸில் பேசினார்.

’அது கிறிஸ்டோபர்தானா?’

புவனேந்திரனும் அதே வாய்ஸில் பேசினார்.

’அவன்தான் ஸார்... கையில் கட்டியிருக்கிற வாட்ச் வெளியே தெரியுது.’

’பூட்டியிருக்கிற இந்த அறைக்குள்ளே அவன் எப்படி... பூட்டினது யாரு?’

’ஸார்... பேசிட்டிருக்க நேரமில்லை. மொதல்ல அவனை மடக்கணும்!’

’சரி... நான் இந்த அறையை சுத்திப் பார்க்கிற மாதிரி மெல்ல நடந்து பீரோவுக்குப் பக்கத்துல போறேன். நீங்க இந்த கம்ப்யூட்டர்களுக்கு முன்னாடி உட்கார்ந்து ’மானிட்டரிங்’ செய்யற மாதிரி பாவ்லா பண்ணிட்டு இருங்க. நான் கிறிஸ்டோபரை அவனே எதிர்பார்க்காத ஒரு விநாடியில் மடக்கறேன்.’

சொன்ன கமிஷனர், பீரோவுக்கு எதிர் திசையில் சில அடி தூரம் நடந்துவிட்டு திரும்பினார். கடைக்கண்ணால் பார்த்தார்.

பீரோவின் மறைவில் நின்றிருந்த கிறிஸ்டோபர் பத்து சதவிகிதம் தெரிந்தான். கொஞ்சம் நீலநிற பேண்ட், கொஞ்சம் மஞ்சள் நிற ஷர்ட். இடது கை மணிகட்டில் கறுப்பு டயலோடு ஸ்மார்ட் வாட்ச்.

தன்னுடைய இடுப்பில் இடம்பிடித்திருந்த ஸ்பானிஷ் மினி பிஸ்டலைத் தொட்டுப் பார்த்துக்கொண்ட கமிஷனர் பீரோவை நோக்கி நடந்தார்.

பெங்களூரின் எல்லா கன்னட சேனல்களிலும் இரவு எட்டு மணி நியூஸில் அந்த செய்தி போய்க் கொண்டிருந்தது...

"யஷ்வந்த்பூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில் நடந்த ஒரு பெட்ரோல் குண்டு வீச்சில் எஸ்.பி. சந்திரகவுடா சம்பவ இடத்திலேயே உடல் கருகி உயிரிழந்த சம்பவம் கர்நாடக போலீஸ்துறையை பெரும் அதிர்ச்சியில் ஆழ்த்தியுள்ளது. எஸ்.பி. சந்திரகவுடா ஒரு நேர்மையான போலீஸ் அதிகாரி. ஊழல் செய்கிற நபர் ஒரு கவுன்சிலராக இருந்தாலும் சரி, ஒரு ஐ.ஏ.எஸ் அதிகாரியாக இருந்தாலும் சரி... பாரபட்சம் பாராமல் நடவடிக்கை எடுக்கக் கூடியவர். பல்வேறு வகைகளில் ஊழல் செய்து முறைகேடாக பணம் சம்பாதிக்கும் பல மாநில அமைச்சர்களுக்கு இவர் ஒரு நரசிம்ம மூர்த்தியாய் காட்சியளித்து வந்தார். இந்த நிலைமையில் சந்திரகவுடா கொடூரமான முறையில் கொல்லப்பட்டது பொதுமக்களிடையே பெரிய அளவில் கொந்தளிப்பை ஏற்படுத்தியுள்ளது.’

டைனிங் டேபிளில் உட்கார்ந்து சப்பாத்தியை குருமாவில் குளிப்பாட்டி வாயில் திணித்துக்கொண்ட திவாகர், ரிமோட் கன்ட்ரோலின் உதவியால் டி.வி. சேனலை மாற்ற... ஆஸ்திரேலியாவின் சிட்னி டென்னிஸ் கோர்ட்டில் சானியா மிர்ஸா வெற்றியின் மகிழ்ச்சியில் துள்ளிக் குதிப்பது தெரிந்தது.



சமையலறையைப் பார்த்துக் குரல் கொடுத் தான் திவாகர். 'ரிதன்யா... ஒன் மோர் சப்பாத்தி!'

ரிதன்யா முகத்தில் எந்தவிதமான சலனத்தையும் காட்டாமல் சமையலறை யிலிருந்து வெளிப்பட்டு, திவாகர் சாப்பிட்டுக் கொண்டிருந்த தட்டில் ஒரு சப்பாத்தியை போட்டுவிட்டு திரும்பவும் சமையலறையை நோக்கி நடக்க முற்பட்டாள்.

'நில்லு ரிதன்யா..!'

ரிதன்யா நின்று, 'என்ன?' என்பது போல் பார்த்தாள்.

"சப்பாத்தியும் குருமாவும் சூப்பர்... இவ்வளவு சாஃப்ட்டா சப்பாத்தி செய்யற பக்குவத்தை எங்கேயிருந்து கத்துக்கிட்டே?'

'இதோ பார்! இந்த தேவையில்லாத பேச்செல்லாம் என்கிட்டே வேண்டாம்!'

'சரி... எனக்கு எது தேவையோ அதை மட்டும் இப்ப பேசுவோம்... டி.வி.யில் நியூஸ் கேட்டியா..?₹எஸ்.பி. சந்திரகவுடாவோட மரணத்துக்குக் காரணம் அவர் ஊழல் அரசியல் தலைவர்களுக்கு எதிரானவர். அதனால்தான் இந்தக் கொலை சம்பவம் நடந்து இருக்கும்'னு சத்தம் போட்டு நியூஸ் படிக்கறாங்க.. ஆனா, உண்மையான காரணம் எதுன்னு உனக்கும் எனக்கும்தான் தெரியும்.'

ரிதன்யா மௌனமாக இருந்தாள்.

'என்ன பேசாமே இருக்கே..? நான் எந்தக் கேள்வியைக் கேட்டாலும் நீ ஏதாவது ஒரு பதிலைச் சொல்லித்தான் ஆகணும். இப்படி வேண்டா வெறுப்பா முகத்தைத் தூக்கி வெச்சிட் டிருந்தா எனக்குப் பிடிக்காது. எதிர்காலத்துல நீ உன் குடும்பத்தோடு சந்தோஷமா இருக் கணும்னா அந்த நிகழ்காலத்துல நீ என்னை அனுசரித்துப் போகணும். அந்த நள்ளிரவு வானவில்லை...'

ஏறக்குறைய சீறினாள் ரிதன்யா. 'இதோ பார் திவாகர்... நீ கானல் நீர்ல மீன் பிடிக்க நினைக்கிறே! அது ஒரு சைபர் க்ரைம் குற்றம். அதுக்குப் பின்னாடி இருக்கிறவங்க அமேசான் காட்டில் இருக்கிற அனகொண்டா பாம்புகளுக்கு சமமானவங்க... அசுரத்தனமான அரசியல் பின்னணியும் அவங்களுக்கு இருக்கு. நீயும் சரி, நானும் சரி... அவங்களை எதிர்த்து இந்த விஷயத்தில் ஜெயிக்க முடியாது!'

திவாகர் சப்பாத்தி வாயோடு சிரித்தான்.

''ரிதன்யா! உனக்கு போலீஸ் மூளை. எனக்கு கிரிமினல் மூளை. முள்ளை முள்ளால்தான் எடுக்க முடியும். அந்த அனகொண்டா பாம்புகளை

எப்படி ஜெயிக்கணும்ங்கிற வித்தை எனக்குத் தெரியும். நீ மட்டும் எனக்கு சரியான முறையில் ஒத்துழைப்பு கொடுத்து நான் சொன்னபடி நடந்துகிட்டா போதும்!'

திவாகர் சொல்லிக்கொண் டிருக்கும்போதே பூங்கொடி பக்கத்து அறையிலிருந்து ரிதன்யாவின் செல்போனோடு வெளிப்பட்டாள்.

'ரிதன்யா! உனக்குப் போன். துபாயிலிருந்து உன்னோட புருஷன் பேசறார். நீ அவர்கிட்டே எப்பவும் பேசற மாதிரி இயல்பா பேசணும். அவர் சந்தேகப்படற ஒரு வார்த்தை உன்னோட உதட்டிலிருந்து உதிர்ந்தாலும் சரி... அதனோட விளைவுகள் நீ சந்தோஷப்படற மாதிரி இருக்காது. இந்தா, ஸ்பீக்கரை ஆன் பண்ணிட்டு பேசு!'

ரிதன்யா கைநடுக்கத்தோடு செல்போனை வாங்கி ஸ்பீக்கரை ஆன் செய்துவிட்டு பேசினாள். ஈனஸ்வரமான குரலில் 'ஹலோ' என்றாள்.

மறுமுனையில் அவளுடைய கணவன் ஹரிகிருஷ்ணன் உற்சாகமாக பேச ஆரம்பித்தான்.

'ரிதன்யா! வீட்ல ஏதாவது ஸ்வீட் இருக்கா..?'

'ஏன்... எதுக்காக கேட்கறீங்க?'

'இருந்தா... கொஞ்சம் ஸ்வீட் எடுத்து வாய்ல போட்டுக்க. ஸ்வீட் ஏதும் இல்லைன்னா ஒரு ஸ்பூன் சர்க்கரையையாவது வாயில் போட்டுக்கோ!"

'ஏன்... என்ன விஷயம்?'

'நான் இன்னும் ரெண்டுநாள்ல பெங்களூர் வரப்போறேன். கம்பெனி சார்பாக ஒரு 'புரொமோட்டர்ஸ் மீட்'. அதை அரேன்ஜ் பண்ண வேண்டிய வேலை எனக்கு! ஒரு மணிநேரத்துக்கு முன்னாடிதான் இந்த விஷயம் எனக்கு கன்ஃபார்ம் ஆச்சு.'

ரிதன்யா சரேலென்று பார்வையை உயர்த்தி திவாகரையும் பூங்கொடியையும் பார்க்க, அவர்கள் இருவரும் வெகுவாக முகம் மாறியிருந்தார்கள். என்ன பேசுவது என்று தெரியாமல் ரிதன்யா சில விநாடிகளை தாமதப்படுத்த, மறுமுனையில் ஹரிகிருஷ்ணன் குரலில் வியப்பு காட்டினான்.

'என்ன ரிதன்யா..! நீ 'வாவ்'ன்னு கத்தி சின்னதா ஒரு ஹோலிப் பண்டிகை கொண்டாடுவேன்னு நினைச்சா... ஏதோ 'பந்த்' நடக்கிற மாதிரி 'கம்'ன்னு இருக்கே! என்னாச்சு உனக்கு..? உடம்பு ஏதும் சரியில்லையா?'

'அதெல்லாம் ஒண்ணுமில்லீங்க.'

'பின்னே..?'

'வேலை டென்ஷன்...'

'என்ன ஏதாவது புது ஆபரேஷனா?'

'ஆமா..!'

'ரிதன்யா! நான் ஆரம் பத்திலேயே சொன்னேன்... இந்த சைபர் க்ரைம் விஷயங்கள் ஒரு ஆறு மாசத்துக்குள்ளே உன்னை ஒரு வழி பண்ணிடும்னு! நீ கேட்கலை. இப்பப் பார்த்தியா... நான் உனக்கு போன் பண்ணினாலே சிரிப்பும் கும்மாளமுமா பேசற நீ, இன்னிக்கு காய்ச்சலில் விழுந்த குழந்தை மாதிரி முக்கலும் முனகலுமா பேசறே..!'

'அது... வந்து...'

'நீ எதையும் சொல்லவேண்டாம். உடனடியா நீ பண்ண வேண்டிய காரியம் என்ன தெரியுமா..?'

'சொல்லுங்க...'

'நீ உன்னோட வேலையை ராஜினாமா பண்ண வேண்டியதுதான்!'

'எப்படீங்க திடீர்னு..?'

'இதோ பார் ரிதன்யா..! உனக்கு இந்த போலீஸ் வேலை வேண்டாம்னு முதலிலிருந்தே சொல்லிட்டிருக்கேன். இப்ப நான் சொல்றதுதான் கடைசி தடவை. நான் நாளை கழிச்சு மறுநாள் பெங்களூர் வரும்போது நீ உன்னோட வேலையை ராஜினாமா பண்ணியிருக்கணும்!'

சுவாசிக்கத் திணறினாள் ரிதன்யா.

## நள்ளிரவு வானவில்!- 8

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

# நள்ளிரவு வானவில்!

ரிதன்யா எதுவும் பேசத் தோன்றாமல் அப்படியே நின்றாள்.

மறுமுனையில் கணவன் ஹரிகிருஷ்ணனின் குரல் மறுபடியும் அதே கண்டிப்போடு ஒலித்தது.

“என்ன ரிதன்யா, பேசாமே இருக்கே? நான் சொன்னது உன்னோட காதுல விழுந்ததா?”

“அ... அ.... அது... வந்து...”




“நீ எந்த ஒரு பதிலையும் சொல்லி என்னை கன்வின்ஸ் பண்ண வேண்டாம். போலீஸ் டிபார்ட்மெண்ட்டெல்லாம் இப்போ முன்னே மாதிரி

இல்லை. அங்கேயும் ஏகப்பட்ட பாலிடிக்ஸ், கோல்ட் வார்ஸ். உன்னை மாதிரியான பெண் களால் அதையெல்லாம் தாக்குப் பிடிக்க முடியாது.''

"நீங்க சொல்றது சரிதான்! எனக்கும் இந்த வேலை பிடிக்கலை.'
'

"அப்புறம் என்ன! ஒரு 'ஏ ஃபோர்' ஷீட்டை ரிசைன் லெட்டரா மாத்தி உன்னோட டிபார்ட்மெண்ட் ஹெட்டுக்கு அனுப்பி வெச்சுட வேண்டியது தானே?"

"அதை உடனடியா பண்ண முடியாதுங்க..."

"ஏன்..?"

"நான் இப்போ ஒரு கேஸ்ல 'இன்வால்வ்' ஆகியிருக்கேன். அதை இன்வெஸ்டிகேட் பண்ணி ஒரு பாஸிட்டிவ் ரிப்போர்ட்டை கொடுக்கிற வரைக்கும் இருந்தாகணும்.''

"நான் சொன்னதை நீ என்னிக்குத்தான் கேட்டிருக்கே? நீ ஏதாவது ஒரு பிரச்னையில் மாட்டிக்கும்போதுதான் நான் சொன்ன வார்த்தைகள் எல்லாம் வேதவாக்கா தெரியும்!''

"சரி... சரி... நமக்குள்ளே இப்போ எதுக்காக செல்போன் சண்டை? நீங்க துபாயிலிருந்து என்னிக்கு பெங்களூர் வர்றீங்க?"

"இன்னும் ரெண்டு நாள்ல."

"இப்படி மொட்டையா சொன்னா எப்படிங்க... எப்போ, எத்தனை மணி ஃப்ளைட்?"

"ஃப்ளைட் டிக்கெட் கன்ஃபார்ம் ஆனதும் போன் பண்றேன். நீ அதுக்குள்ளே ஒரு வேலை பண்ணணும் ரிதன்யா..."

"என்ன..?"

“இன்னியிலிருந்து ஒரு வாரத்துக்கு லீவு போட்டுடு! நான் எப்படியும் பெங்களூர்ல ஒரு வாரமாவது இருக்க வேண்டி வரும். அந்த சமயத்துல ஊட்டிக்குப் போய் நம்ம அபிநய்யைப் பார்த்துட்டு வருவோம்.”

“வே... வே... வேண்டாங்க..!” - ரிதன்யாவின் குரல் அவளையும் அறியாமல் ஒரு நடுக்கத்துக்கும் பயத்துக்கும் உட்பட, மறுமுனையிலிருந்த ஹரிகிருஷ்ணன் திகைத்தான்.

“ரிதன்யா! வாட் ஈஸ் ராங்க் வித் யூ? நான் இப்ப என்ன சொல்லிட்டேன்னு இவ்வளவு பதற்றப்படறே?”

“ஸாரிங்க! அபிநய்க்கு இப்போ மிட் டெர்ம் டெஸ்ட். இந்த நேரத்துல பேரன்ட்ஸ் வந்து குழந்தைகளைப் பார்க்கிறதை அந்த கான்வென்ட்ல விரும்பமாட்டாங்க.”

“அவங்க விரும்பினாகூட நீ விரும்பமாட்டே போலிருக்கே! நீ இன்னிக்கு ரொம்பவுமே சரியில்ல ரிதன்யா. நேத்து ராத்திரி நான் போன் பண்ணினபோது என்கிட்ட பேசின ரிதன்யா வேற... இப்ப என்கூட பேசிட்டிருக்கிற ரிதன்யா வேற!”

“அப்படியெல்லாம் ஒண்ணும் இல்லீங்க!”

“என்ன ஒண்ணுமில்லை... நேத்து ராத்திரி நான் உனக்கு போன் பண்ணினபோது நீ என்ன சொன்னே?”

“என்ன சொன்னேன்?”

“இப்படியே தினமும் போன் பண்ணி பேசிப் பேசியே நம்ம குடும்ப வாழ்க்கையை ஓட்டிடலாம்னு பார்க்கறீங்களா? ‘பொண் டாட்டியையும், குழந்தையையும் பார்த்து ஆறு மாசமாச்சே... போய் பார்த்துட்டு வரலாமேனு உங்களுக்குத் தோணவே தோணாதா?’னு நீ நேத்து கேட்கல?”

“சும்மா விளையாட்டுக்கு அப்படி கேட்டேன்!”

"நான் அதை உன் அடிமனசோட ஆதங்கமாத் தான் எடுத்துக்கிட்டேன். உன்னோட அந்த வார்த்தைகள்தான் நேத்து ராத்திரி என்னைச் சரியா தூங்கவிடவில்லை."

"நான் சொன்னதை சீரியஸா எடுத்துக் காதீங்க... உங்களைப் பத்தி எனக்குத் தெரியாதா என்ன? ஒரு வாரம் ஆபீஸுக்கு லீவு போடறேன். நீங்க வந்ததும் ஊட்டிக்குப் போவோம். அபிநய்யோடு ரெண்டு மூணு நாளாவது 'ஸ்பெண்ட்' பண்ணிட்டு வருவோம்!"

"இப்பத்தான் நீ ரிதன்யா மாதிரி பேசறே! இதே மூடை கன்டினியூ பண்ணு. காலையில உனக்கு போன் பண்றேன்."

மறுமுனையில் பேச்சு நின்று செல்போன் தன்னுடைய மூச்சை நிறுத்திக்கொள்ள... ரிதன்யாவும் செல்போனை அணைத்தாள். பூங்கொடி உடனே அதைப் பறித்துக்கொண்டு ஒரு கோபப் பார்வை பார்த்தாள்.

"உன்னோட புருஷன் வரப்போறதை நினைச்சு ரொம்பவும் சந்தோஷப்பட்டுக்காதே... அவன் துபாயிலிருந்து வர்றதுக்கு இன்னும் ரெண்டு நாள் இருக்கு. அதுக்குள்ளே எங்க கைக்கு MNR வந்தாகணும்."

"எம்.என்.ஆர்-னா?"

"மிட் நைட் ரெயின்போ! எல்லாத்தையும் தெரிஞ்சு வெச்சுக்கிட்டு எதுவுமே தெரியாதது போல் நடிக்கிறதுக்கும் ஒரு திறமை வேணும். அது உன்கிட்டே நிறையவே இருக்கு." பூங்கொடி சொல்லிக்கொண்டிருக்கும் போதே, ரிதன்யா பக்கத்தில் வந்து நின்றான், திவாகர்.

"உனக்கு இன்னும் 48 மணி நேரம்தான் டைம். உன் புருஷன் இந்த வீட்டு வாசற்படியை மிதிக்கும்போது அவன் உயிரோடு இருக்கிறதும், இல்லாததும் உன்னோட கையிலதான் இருக்கு. என்ன அப்படி பார்க்கிற? எங்களுக்கு நீ மட்டும்தான் முக்கியம். உன் புருஷன் கிடையாது. அவன் இந்த பெங்களூர் மண்ணை மிதிக்கும்போது எங்க கையில் MNR இருக்கணும். அப்படி

இல்லாத பட்சத்துல உன்னோட ரெண்டு பிரியமான உறவுகளை நீ இழந்து ஒரு தனிமரமா வாழ வேண்டியிருக்கும்!"

திவாகர் தன்னுடைய ஆட்காட்டி விரலை உயர்த்தி ஏற்றஇறக்கத்தோடு பேச, சூடுபட்ட பாலித்தீன் பேப்பராய் சுருண்டாள் ரிதன்யா.

சென்னை.

போலீஸ் கமிஷனர் ராஜகணேஷ், இடுப்பில் இடம் பிடித்திருந்த ஸ்பானிஷ் மினி பிஸ்டலைத் தொட்டு கையில் எடுத்துக்கொண்டு பூனைநடை போட்டு பீரோவை நெருங்கினார்.

பீரோவின் மறைவில் நின்றிருந்த கிறிஸ்டோ பரின் உருவம், இப்போது இருபத்தைந்து சதவிகிதம் தெரிந்தது. இரண்டடி முன்னால் நடந்து, ஒரு ஜாக்கிரதை உணர்வோடு நின்று கொண்டு குரல் கொடுத்தார்.

"கிறிஸ்டோபர்! நாங்க பார்த்துட்டோம்... அந்த பீரோவோட இடைவெளியில் உன்னால ரொம்ப நேரத்துக்கு நின்னுட்டு இருக்க முடி யாது. வெளியே வா!"

குரல் கொடுத்துவிட்டு காத்திருந்தார் கமிஷனர். பதில் எதுவும் வராமல் போகவே, இன்னமும் இரண்டடி முன்னால் நடந்து பிஸ்டலை உஷார் நிலையில் வைத்துக்கொண்டு, இடது கையை மட்டும் சரேலென்று நீட்டி, ஒரு மைக்ரோ விநாடிக்கும் குறைவான நேரத்தில் கிறிஸ்டோபரின் ஷர்ட் காலரைப் பிடித்து பலங்கொண்ட மட்டும் இழுத்தார்.

கிறிஸ்டோபர், பிடிப்பில்லாமல் அப் படியே ஒரு பக்கமாக சாய்ந்து சுவருக்கு முதுகைத் தேய்த்துக்கொண்டு சரிந்தான். நாசித்துவாரங்களிலும், கடைவாயிலும் ரத்த இழைகள் வழிந்து உறைந்திருந்தன.

ஒரு கணம் அதிர்ச்சியோடு பின்னுக்கு நகர்ந்த கமிஷனர், மண்டியிட்டு கிறிஸ்டோபருக்குப் பக்கத்தில் உட்கார்ந்தார். அவனுடைய நாடித்

துடிப்பையும், சுவாசத்தையும் சோதித்தவர், ஆறுதல் பெருமூச்சை வெளியேற்றியபடி புவனேந்திரனிடம் நிமிர்ந்தார்.



'ஆள் உயிரோடுதான் இருக்கான்... உடனடியா ஹாஸ்பிடலைஸ் பண்ணினா காப்பாத்திடலாம்னு நினைக்கிறேன்.''

மானேஜர் புவனேந்திரன் செல்போனைத் தேய்த்து ஆம்புலன்ஸை தொடர்புகொண்டு பேச, கமிஷனர் ராஜகணேஷ், கிறிஸ்டோபரின் பேண்ட் பாக்கெட்டுகளிலும் ஷர்ட் பாக்கெட்டு களிலும் கையை நுழைத்து கிடைத்த பொருட் களை வெளியே எடுத்தார்.

ஒரு சாவிக்கொத்து, ஃபார்மஸி பில்லோடு ஒரு மாத்திரைப் பட்டை, 'ஸ்ரீ அரவிந்த அன்னையும், மலர்களின் மகிமையும்' என்ற தலைப்பில் ஒரு

கையடக்கப் புத்தகம். கசங்கிய ரூபாய் நோட்டுகள். உடனடியாக துவைக்கப்பட வேண்டிய நிலைமையில் ஒரு கைக்குட்டை.

"என்ன... புவனேந்திரன்!"

"ட்ரை பண்ணிட்டிருக்கேன் ஸார்... டவர் கிடைச்சாலும் வாய்ஸ் பிரேக் ஆகுது... காரணம், இது செல்லர் ரூம். நான் வெளியே போய் பேசிட்டு வந்துடறேன் ஸார்!"

"சீக்கிரம்... ஆம்புலன்ஸ் வரட்டும்... அப்பதான் உயிரைக் காப்பாற்ற முடியும். யாரோ மூர்க்கமா தாக்கியிருக்காங்க. உதடும் மூக்கும் வீங்கியிருக்கு!"

புவனேந்திரன், செல்லருக்கு மேலே வந்ததும் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு தன்னிடம் இருந்த இன்னொரு செல்போனை எடுத்தார். அதை உசுப்பி ஒரு எண்ணைத் தட்டிவிட்டு பேசினார்.

"நான் புவன்!"

மறுமுனையில் ஓர் ஆண் குரல்.

"அங்கே நிலைமை எப்படி?"

"சந்தோஷப்படும்படியா இல்லை!"

"ஏன்.. என்னாச்சு?"

"கிறிஸ்டோபர் சாகலை. உயிரோடு இருக்கான்!"

'எப்படி?"

"எப்படினு என்னைக் கேட்காதே! உன்னோட ஆட்கள்கிட்டே கேளு. ஒரு கரப்பான்பூச்சியை அடிக்கிறதா இருந்தாலும் அதுல ஒரு துல்லியம் இருக்கணும்."

"கிறிஸ்டோபருக்கு சுய உணர்வு இருக்கா?"

“இந்த நிமிஷம் இல்லை... ஆனா, ஹாஸ்பிட லுக்கு கொண்டு போயிட்டா ஒரு மணி நேரத்துக்குள்ளே ரெக்கவர் ஆயிடுவான்னு தோணுது!”

“கமிஷனர் இப்போ எங்கே?”

“செல்லர் ரூம்ல கிறிஸ்டோபருக்குப் பக்கத்துல இருக்கார். ஆம்புலன்ஸுக்கு போன் பண்ணாம இருந்தா, கமிஷனருக்கு என் மேல சந்தேகம் வந்துடும்.”

“புவன்!”

“சொல்லு..!”

“கிறிஸ்டோபர் ஹாஸ்பிடலுக்குப் போற துக்கு முன்னாடி சாகணும்... அதுக்கு நீதான் ஏதாவது செய்யணும்!”

“என்ன விளையாடறியா! இங்கே வந்து இருக்கிறவர் கான்ஸ்டபிள் இல்லை... கமிஷனர்!”

“அவரை டைவர்ட் பண்ண முடியாதா?”

“முடியும்னு தோணல!”

“சரி... நீ ஆம்புலன்ஸுக்கு போன் பண்ணிடு. கிறிஸ்டோபரை எந்த ஹாஸ்பிடலுக்கு கொண்டு போறாங்கனு மட்டும் சொல்லிடு போதும். மத்ததை நான் பார்த்துக்கிறேன்”

“கமிஷனர், சாமான்யப்பட்டவர் இல்லை!”

“பட்... அவரும் மனுஷன்தானே! கமிஷனர் ஒரு பத்து நிமிஷம் ஏமாந்தாகூட போதும். கிறிஸ்டோபரை இளைப்பாறுதல் பண்ணிடலாம்.”

“சரி... ஆம்புலன்ஸுக்கு போன் பண்ணிட்டு மறுபடியும் அடுத்த அஞ்சு நிமிஷத்துக்குள்ளே உன்னோட லைனுக்கு வர்றேன்!”

புவனேந்திரன் அந்த செல்போனை அணைத்துவிட்டு இன்னொரு செல்போனை எடுத்து ஆம்புலன்ஸ் சர்வீஸுக்கு தகவல் கொடுத்துவிட்டு செல்லர் படிகளில் இறங்கி உள்ளே போனார். சாத்தப்பட்ட கதவோடு செல்லர் அறை வந்தது. கதவின் மேல் கையை வைத்து தள்ள முயன்ற விநாடி... உள்ளே பேச்சுக்குரல் கேட்டது. கமிஷனரின் குரல்.

'கமிஷனர் யாரோடு பேசுகிறார்?

கதவைத் தள்ளினார் புவனேந்திரன்.

கிறிஸ்டோபர் எழுந்து உட்கார்ந்திருக்க, கமிஷனர் அவனிடம் பேசிக்கொண்டிருந்தார்.

# நள்ளிரவு வானவில்!- 1

### ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

**நள்ளிரவு வானவில்!**

புவனேந்திரன் செல்போனை அணைத்த அடுத்த விநாடி அவருடைய தோளில் கைவிழுந்தது. அதிர்ந்துபோய் திரும்பினார்...

புவனேந்திரன் ஸ்தம்பித்து போனவராய் நிற்க, கமிஷனர் ராஜகணேஷ் குரல் கொடுத்தார்.

"என்ன புவனேந்திரன்... ஆம்புலன்ஸுக்கு போன் பண்ணிட்டீங்களா?"

"பண்ணிட்டேன் ஸார்!"

"இப்போதைக்கு கிறிஸ்டோபரோட உயிருக்கு ஆபத்து ஏதும் இருக்கிற மாதிரி தெரியலை... முகத்துல தண்ணி தெளிச்சேன். கண்ணிமைகளில் லேசா அசைவு தெரிந்தது. கொஞ்சமா தண்ணி குடிக்க வெச்சேன். தட்டுத் தடுமாறி எந்திரிச்சு உட்கார்ந்துட்டார். பட்... அவரால பேச முடியலை. ஏதோ சொல்ல முயற்சி பண்றார். நீங்க அவர்கிட்டே பேசிப் பாருங்க!"

புவனேந்திரன் லேசாக வியர்த்த முகத்தோடு பயந்த நடைபோட்டு கிறிஸ்டோபரை நெருங்கினார். தோளின் மேல் கையை வைத்து மெலிதான குரலில் கூப்பிட்டார்.

"கிறிஸ்டோபர்..!"

கிறிஸ்டோபரின் கண்ணின் பாவைகள் ஒரு சின்ன அசைவுக்கு உட்பட்டன. உதடுகள் ஏதோ சொல்ல முயற்சித்து வாய் ஒரு பக்கமாய் கோணியது. கடைவாயோரம் உமிழ்நீர் கோடாய் வழிய, வலதுகை ஓர்

அங்குலம் உயர்ந்து உடனே தாழ்ந்தது. கமிஷனர் அவனுடைய கன்னங்களைத் தட்டியபடி கேட்டார்.




"கிறிஸ்டோபர்! உங்களை இப்படித் தாக்கினது யாரு?"

பதிலுக்கு உடம்பு மட்டும் அசைந்தது.

கமிஷனர் நிமிர்ந்தார்.

"புவனேந்திரன்!"

"ஸார்..."

"கிறிஸ்டோபருக்கு சுய உணர்வு இருக்கு. பட்... அவரால ஒரு வார்த்தைகூட பேச முடியலை... யாரோ அவரை வித்தியாசமான முறையில் தாக்கியிருக்காங்க. நீங்க போன் பண்ணிப் பேசும்போது மறுமுனையில் அவருடைய ரியாக்ஷன் எப்படியிருந்தது?"

"வெரி நார்மல் ஸார்."

"பேசினது அவர்தானா?"

"அவர்தான் ஸார்..."

"உங்க ரெண்டுபேருக்கும் இடையில் நடந்த டெலிபோனிக் கான்வர்சேஷன் எது மாதிரியிருந்ததுனு உங்களால் ரீ-கலெக்ட் பண்ணிச் சொல்ல முடியுமா?"

"தாராளமா சொல்ல முடியும் ஸார்... நான் இன்டர்காம் டெலிபோன் மூலமா கிறிஸ்டோபரை கான்டாக்ட் பண்ணி 'நேத்து சாயந்தரம் ஆறு மணியிலிருந்து ராத்திரி பத்து மணி வரைக்கும் சி.சி.டி.வி-யில் பதிவான பதிவுகளை டி.வி.டி-க்கு ஃபார்மட் பண்ணியாச்சா'ன்னு கேட்டேன். அவர் பண்ணியாச்சுன்னு சொன்னார். உடனே அந்த டி.வி.டி-யை எடுத்துட்டு என்னோட ரூமுக்கு வாங்கன்னு சொன்னேன். அவரும் 'இதோ... ரெண்டு நிமிஷத்துல வர்றேன் ஸார்'னு சொன்னார்."

"பேசினது கிறிஸ்டோபர்தானா..?"

"அவர்தான் ஸார்... நோ டவுட்!"

“உங்ககூட போன்ல பேசின பிறகுதான் கிறிஸ்டோபரை யாரோ தாக்கியிருக்காங்க.”

“மே பி... ஸார்!”

“ஸோ... நான் ஞானேஷ் விஷயமா இந்த ஹோட்டலுக்கு வந்து விசாரணை பண்ணினது, யாரோ ஒரு எக்ஸுக்குப் பிடிக்கலை. என்னோட கெஸ் வொர்க் சரிதானா?”

“என்னோட கெஸ் வொர்க்கும் அதுதான் ஸார்.”

“யார் அந்த எக்ஸ்? உங்க ஹோட்டலில் இருக்கிற நபரா... இல்லை, வெளியிலிருந்து வந்த நபரா?

“இந்த ஹோட்டலில் இருக்கிற நபரா அந்த ‘எக்ஸ்’ இருக்க வாய்ப்பில்லை ஸார்.”

“எப்படி சொல்றீங்க?”

“ஞானேஷ் இந்த ஹோட்டலோடு சம்பந்தப்பட்ட நபர் கிடையாது, அதேபோல் ரெகுலர் கஸ்டமரும் கிடையாது. ஞானேஷ் சம்பந்தமான ஒரு இன்வெஸ்டிகேஷனோட நீங்க இந்த ஹோட்டலுக்கு வந்ததை யாரோ ஸ்மெல் பண்ணி பின் தொடர்ந்து வந்திருக்காங்க... அவங்கதான் கிறிஸ்டோபரைத் தாக்கியிருக்கணும்!”

“கிறிஸ்டோபர் தாக்கப்பட்ட இந்தச் சம்பவத்திலிருந்து ஒரு விஷயம் மட்டும் க்ரிஸ்டல் க்ளியரா புரியுது!”

“என்ன ஸார்?”

“ஞானேஷ் இந்த ஹோட்டலுக்கு வந்திருக்கணும். அவர் பதிவுகள் போலீஸ் கைக்கு போய்விடக்கூடாதே என்கிற எண்ணத்துல கிறிஸ்டோபரைத் தாக்கி டி.வி.டி-க்களைப் பறிச்சுட்டு ஓடியிருக்கணும்.”



"என்னோட கணிப்பும் இதுதான் ஸார்" - புவனேந்திரன் சொல்லிக்கொண்டிருக்கும் போதே அவருடைய செல்போன் முணுமுணுத் தது. எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தார்.

ஹோட்டல் ரிசப்சனிஸ்ட்.

"என்ன தாரிணி?"

"ஸார்... ஆம்புலன்ஸுக்கு போன் பண்ணியிருந்தீங்களா?"

"ஆமா!"

"வேன் வந்தாச்சு... யாருக்கு என்ன பிரச்னை ஸார்?"

"வந்து சொல்றேன்..!" - செல்போனை அணைத்த புவனேந்திரன் கமிஷனரிடம் நிமிர்ந்தார்.

"ஸார்... ஆம்புலன்ஸ் வந்து வெயிட்டிங்கில் இருக்கு. கிறிஸ்டோபரை வேனுக்குக் கொண்டு போயிடலாமா?"

"கொண்டு போயிடலாம். இப்போதைக்கு இந்த விஷயம் வெளியே யாருக்கும் தெரிய வேண்டாம். நீங்க வேனுக்குப் போய் மெடிக்கல் அட்டெண்ட்டர்ஸை ஸ்ட்ரெச்சரோடு வரச் சொல்லுங்க!"

"யெஸ் ஸார்!" - தலையசைத்துவிட்டு செல்லர் அறையிலிருந்து வெளியேறிய புவனேந்திரன் காரிடாரில் நடக்கும்போது வேறொரு செல் போனை எடுத்து கான்டாக்ட்ஸில் இருந்த ஒரு எண்ணை ஆட்காட்டி விரலால் தேய்த்துவிட்டு காதுக்கு ஒற்றினார். சுற்றும்முற்றும் பார்வையை அலையவிட்டவர் குரலைத் தாழ்த்தி குறைவான டெசிபலில் பேச ஆரம்பித்தார்.

"இங்கேயிருக்கிற நிலைமை சந்தோஷப் படும்படியாக இல்லை! கிறிஸ்டோபர் உயிர் பிழைக்க வாய்ப்பு அதிகம்."

மறுமுனையில் குரல் கவலைப்பட்டது...

"கிறிஸ்டோபர் ஏதாவது பேசினானா?"

“அவனுக்கு சுய உணர்வு இருக்கு. ஆனா, இப்போதைக்கு அவனால பேச முடியாதுங்கிற விஷயம்தான் நமக்கு கிடைச்சிருக்கக்கூடிய ஒரே சந்தோஷம். இந்த சந்தோஷமும் அதிக நேரம் நிலைக்கப் போறது இல்லை. ஏன்னா, அவனை ஹாஸ்பிடலுக்குக் கொண்டு போகும் பட்சத்தில் டாக்டர்கள் அவனை பேச வைக்க வாய்ப்பு இருக்கு!”

“அது நடக்கப்போறது இல்லை. கிறிஸ்டோபர் எந்த ஹாஸ்பிடலில் அனுமதிக்கப்பட்டாலும் சரி, அவன் வாயைத் திறந்து முழுசா ஒரு வார்த்தை பேசறதுக்குள்ளே அவன் உடம்புல உயிர் இருக்காது!”

“இது வெறும் வார்த்தையா இருக்கக் கூடாது. நடக்கக்கூடிய காரியமா இருக்கணும்.”

“இருக்கும்!” - மறுமுனை தீர்க்கமாக சொல்லிவிட்டு செல்போனை அணைத்துவிட, புவனேந்திரனும் செல்போனை அணைத்தார்.

அதே விநாடி - அவருடைய தோளில் கை விழுந்தது. சற்றே அதிர்ந்து போனவராய் திரும்பினார் புவனேந்திரன்.

போலீஸ் கமிஷனர் ராஜகணேஷ் தன் இதழோரம் கசியவிட்ட ஒரு புன்னகையோடு நின்றிருந்தார்.

பெங்களூர் தோல் சீவிய கேரட் நிறத்தில் விடிந்துகொண்டிருக்க, ரிதன்யா குளித்து முடித்து பூஜையறைக்குள் போய் விளக்கேற்றிவிட்டு சமையலறையை நோக்கி நடந்தாள். முதுகில் குரல் கேட்டது.

“ரிதன்யா!”

அவள் நின்று திரும்பிப் பார்க்க... படுக்கை அறையிலிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்த பூங்கொடி பார்வைக்கு கிடைத்தாள். ‘என்ன?’ என்று கேட்பது போல் தன் இரு புருவங்களையும் உயர்த்தினாள் ரிதன்யா.

“என்ன... இவ்வளவு சீக்கிரத்துல குளிச்சுட்டே?”

"இது என்னோட வழக்கம்."

"சரி... இன்னிக்குக் காலையில் ஃப்ரேக்பாஸ்ட் என்ன?"

"இனிமேதான் யோசிக்கணும்."

"வீட்ல ரவை இருக்கா?"

"இருக்கு."

"உப்புமா பண்ணிடு! அப்புறம் மத்தியான சமையலை பத்து மணிக்குள்ளே முடிச்சுடு!"

"ஏன் அவ்வளவு சீக்கிரத்துல..?"

"நீயும் நானும் வெளியே கிளம்பிப் போறோம்."

"எங்கே?"

"அதையெல்லாம் இப்பவே உன்கிட்டே சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. உன்னோட புருஷன் இன்னும் ரெண்டு நாள்ல இங்கே வந்துடுவான். அதுக்குள்ளே நாங்க சில வேலைகளை மின்னல் வேகத்துல பண்ண வேண்டியிருக்கு. அதனால நாங்க எப்ப கூப்பிட்டாலும் நீ புறப்படறதுக்குத் தயாரா இருக்கணும். ஏன், எதுக்குங்கிற கேள்விகள் உன்னோட வாயிலிருந்து வரவே கூடாது."

ரிதன்யா தன்னுடைய பெரிய கண்களால் பூங்கொடியை முறைத்த விநாடி, வாசலில் இருந்த அழைப்பு மணியின் பட்டன் அழுத்தப்பட்டதற்கு அடையாளமாக 'டிடிங்' என்ற சத்தம் கேட்டது.

"இந்நேரத்துக்கு யாரு..?"

"போய்ப் பார்த்தாத்தானே தெரியும்?"

"போய்ப் பாரு...! யாரா இருந்தாலும் பேச்சு சுருக்கமா இருக்கணும். அவங்களை வீட்டுக்குள்ளே கூப்பிடக்கூடாது." - பூங்கொடி சொல்லிவிட்டு

ஒதுங்கி நின்று கொள்ள, ரிதன்யா வாசல் கதவை நோக்கி வேகவேகமாய்ப் போனாள். இதயம் ஒரு சிறிய படபடப்புக்கு உட்பட்டிருக்க, கதவின் தாழ்ப்பாளை விலக்கினாள்.

வெளியே எதிர்வீட்டு ஸ்வர்ணலதா, ராத்திரி அணிந்து இருந்த நைட்டியோடும் லேசாக கலைந்து போயிருந்த தலைமுடியோடும் தெரிந்தாள்.

“ஸாரி ரிதன்யா! இவ்வளவு காலை நேரத்துல உங்களை டிஸ்டர்ப் பண்றேன்.”

“நோ பிராப்ளம்.. என்ன விஷயம்ன்னு சொல்லுங்க.”

“உங்களுக்கு பால் பாக்கெட் வந்துடுச்சா?”

“வந்துடுச்சே!”

“எனக்கு வரலை. ராஜப்பன் போட மறந்துட்டான் போலிருக்கு. உங்ககிட்டே எக்ஸ்ட்ரா பால் பாக்கெட் ஏதாவது இருக்குமா?”

“ஸாரி... இல்லையே!”

“என்னோட மாமனாருக்கும் மாமியாருக்கும் காபி சாப்பிடாட்டி பொழுது விடியாது. ஒரு டம்ளர் பால் இருந்தா குடுங்களேன்.”

“ஒரு நிமிஷம்..!” என்று சொன்ன ரிதன்யா அந்த ஹாலின் மூலையில் இருந்த ஃப்ரிட்ஜ்ஜை நோக்கிப் போக, ஸ்வர்ணலதா உரிமையோடு சோபாவில் வந்து உட்கார்ந்தாள். டீபாயின் மேல் கொஞ்சமும் கசங்காமல் இருந்த அன்றைய நாளிதழை எடுத்து இரண்டு பக்கங்களைப் புரட்டி தலைப்புச் செய்திகளை மேய்ந்துகொண்டிருக்கும்போதே ரிதன்யா ஒரு டம்ளர் பாலோடு வந்தாள்.

“இது போதுமா பாருங்க ஸ்வர்ணலதா!”

பேப்பரை மடித்து வைத்துவிட்டு எழுந்த ஸ்வர்ணலதா பால் டம்ளரை வாங்கிக் கொண்டாள்.

"இது போதும்... அந்த ரெண்டுக்கும் காபி என்கிற பேர்ல எதையாவது கொடுத்தாத்தான் என் புருஷனோட வாய்ல விழாம இருப்பேன்" - சொல்லிக்கொண்டே நகர முயன்ற ஸ்வர்ணலதா சட்டென்று நின்று உள்ளே பார்த்தபடி கேட்டாள்.

"வீட்டுக்கு கெஸ்ட் வந்திருக்காங்க போலிருக்கு..?"

"ஆ... ஆமா"

"யாரு?"

"அது வந்து... என் சித்தியோட பொண்ணும் அவளோட ஹஸ்பண்ட்டும். நியூலி மேரீட். ரெண்டு நாள் 'ஸ்டே' பண்ணிட்டு மைசூர் போயிடுவாங்க" - ரிதன்யா சொல்லிக்கொண்டிருக்கும்போதே பக்கத்து அறையிலிருந்து பூங்கொடி ஒரு சின்ன சிரிப்போடு வெளிப்பட்டாள். ஸ்வர்ணலதாவை நோக்கி கையை நீட்டினாள்.

"ஐயாம் பூங்கொடி! போன்ல பேசும்போது அக்கா உங்களைப் பத்தி சொல்லுவாங்க... நீங்க நல்ல நெய்பராம். ரொம்பவும் அனுசரணையா இருப்பீங்களாம்."

ஸ்வர்ணலதா சிரித்தாள். "உங்க அக்கா அநியாயத்துக்கு பொய் சொல்லியிருக்காங்க... அவங்கதான் எனக்கு நல்ல நெய்பர். ஒரு போலீஸ் ஆபீஸர் என்கிற பந்தா இல்லாமே அந்நியோன்யமா இருப்பாங்க... எப்போ எதைக் கேட்டாலும் இல்லேன்னு சொல்லாம குடுப்பாங்க. உதாரணம், இப்போ என் கையில் இருக்கிற ஒரு டம்ளர் பால்."

"ரிதன்யா அக்கா சின்ன வயசிலிருந்தே அப்படித்தான்."

"பூங்கொடி! நீங்க ஏதாவது வேலைக்குப் போயிட்டிருக்கீங்களா... இல்லை ஹவுஸ் வொய்ஃப்பா?"

"நான் சென்னையில் இருக்கிற ஒரு ஐ.டி. கம்பெனியில் வேலை பார்க்கிறேன். அவரும் ஒரு ஐ.டி. எம்ப்ளாயீதான்! ஆறு மாசத்துக்கு முன்னாடிதான் கல்யாணம் நடந்தது."

"விஷ் யூ எ ஹேப்பி மேரீட் லைஃப்!"

"தேங்க்யூ!"

"இங்கே எத்தனை நாள் ஸ்டே?"

"ரெண்டு நாள்தான்... நாளன்னிக்குக் காலையில் மைசூர் கிளம்பிடுவோம்!"

"சாயந்தரம் லீஷராய் இருக்கும்போது நீங்களும் உங்க ஹஸ்பண்ட்டும் என் வீட்டுக்கு வாங்களேன்..!"

"கண்டிப்பா வர்றோம்!" - பூங்கொடி சொல்ல, ஸ்வர்ணலதா ஒரு டம்ளர் பாலுக்காக ரிதன்யாவுக்கு மறுபடியும் ஒரு நன்றியைச் சொல்லிவிட்டு தன்னுடைய வீட்டை நோக்கிப் போனாள்.

ரோட்டை கிராஸ் செய்து வீட்டுக்குள் நுழைந்து, கண்ணாடி முன் நின்று முகத்தை ரேஸரால் உழுதுகொண்டிருந்த தன்னுடைய கணவன் லீலாகிருஷ்ணனை நெருங்கினாள். சுற்றும்முற்றும் பார்த்துவிட்டு குரலைத் தாழ்த்தினாள்.

"என்னங்க..!"

"சொல்லு..."

"நான் சந்தேகப்பட்டது சரிதான்!"

## *நள்ளிரவு வானவில்!- 10*

*ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்*

# நள்ளிரவு வானவில்!



ஸ்வர்ணலதாவின் கணவன் லீலாகிருஷ்ணன், முகத்தில் ஓர் அணுவின் அளவுக்குக்கூட ஆச்சர்யம் காட்டாமல் ரேசரால் மோவாயை உழுதுகொண்டே கேட்டான்.

“நீ என்ன சந்தேகப்பட்டே?”

“எதிர்வீட்டு ரிதன்யா நேத்து சாயந்தரம் முதலே என் பார்வையில படலைங்க. சாயந்தரம் ஆறு மணியிலிருந்து ஆறரை மணி வரைக்கும் முன்னாடி இருக்கிற குரோட்டன்ஸ் தொட்டிகளுக்கு வாட்டரிங் பண்ணிட்டிருப்பா. நேற்றைக்கு அதுவும் மிஸ்ஸிங்... வீட்டுக்குள்ளே ரிதன்யா என்னதான் பண்றானு தெரிஞ்சுக்கிறதுக்காக நம்ம மொட்டை மாடியின் மேலே நின்னுகிட்டு...”

“வேவு பார்த்தியாக்கும்..!”

“ஆர்வம்தான்...”

“சரி... என்னதான் ஆச்சு..?”

“ரிதன்யா வீட்டுக்கு யாரோ ரிலேட்டிவ்ஸ் வந்திருக்காங்க.”

“இதிலென்ன ஆச்சர்யம்?”

“ஆச்சர்யம்தாங்க! ரிதன்யா நம்ம வீட்டுக்கு எதிரில் குடிவந்து அஞ்சு வருஷமாச்சு. இந்த அஞ்சு வருஷத்துல ஒரு நாளாவது ஒரு சொந்த ஜனம்கூட எட்டிப் பார்த்தது இல்லை. நான் இதைப்பத்தி அவகிட்டே பேசும்போது அவ என்ன சொன்னா தெரியுமா?”

“என்ன சொன்னா..?”

“எனக்கும் சரி, என்னோட ஹஸ்பெண்ட்டுக்கும் சரி... கண்ணுக்கெட்டின தூரம் வரைக்கும் எந்த ஒரு சொந்தபந்தமும் கிடையாது. இது ஒருவகையில் நிம்மதியா இருக்குனு சொன்னா.”

ஷேவிங்கை முடித்துக்கொண்ட லீலாகிருஷ்ணன், அசுவாரசியமாக டூத் பிரஷ்ஷின் மேல் பட்டாணி சைஸுக்கு பேஸ்ட்டை பிதுக்கிக்கொண்டே கேட்டான்.

"சரி... இப்போ வந்திருக்கிறது யாராம்?"

"சித்திப் பொண்ணுனு சொல்றா! ஆனா, நம்பற மாதிரியில்லை."

"ஏன்..?"

"ரெண்டு பேருக்கும் முகஜாடை ஒரு பர்சன்ட்கூட ஒத்துப்போகலைங்க."

"எனக்கு இது ஒரு சரியான காரணமா படலை. ரிதன்யாவோட ஜீன் ஃபேக்டரும் வந்த பெண்ணோட ஜீன் ஃபேக்டரும் திசை மாறி பயணம் பண்ணியிருக்கலாம். உன்னோட குடும்பத்தையே எடுத்துக்க... உன் தங்கச்சியோட நிறமும், அழகும் உன்கிட்டே இருக்கா?"

ஸ்வர்ணலதா தன் கணவனை ஓர் அனல் பார்வையோடு முறைத்தாள். "இப்போ எதுக் காக இந்த கம்பேரிசன்..?"

"உதாரணத்துக்கு சொன்னேன்!"

"அதுக்கு உங்க குடும்பத்தை உபயோகப்படுத் திக்கலாமே?"

"சரி... சரி... விடு! பொழுது விடிந்ததும் விடியாத இந்த நேரத்துல நமக்குள்ளே எதுக்கு இந்த உள்நாட்டுப் போர்? ரிதன்யா சைபர் க்ரைம் பிராஞ்ச் போலீஸ். அவளைப் பார்க்க அவளோட டிபார்ட்மென்ட்டை சேர்ந்த நபர்களும் வந்திருக்கலாம். ரிதன்யா சம்பந்தப்பட்ட விவகாரம் நமக்கு எதுக்கு? அவ வீட்டுக்கு யார் வந்தா என்ன... போனா என்ன..?"

"ஒரு ஆர்வம்தான். ஆனா, ஒரு விஷயத்தை என்னாலே கன்ஃபார்மா சொல்ல முடியும்..."

"என்ன...?"

“ரிதன்யா நல்ல ‘மூட்’ல இல்லை!”

“நீ இப்போ என்ன சொல்ல வர்றே..?”

“அவளுக்கு ஏதோ பிரச்னை...”

“இதோ பார் ஸ்வர்ணா! ரிதன்யா ஒரு சாதாரண ஹவுஸ் வொய்ஃப் கிடையாது. போலீஸ் டிபார்ட்மென்ட்டில் பொறுப்பான உத்யோகம் பார்க்கிற ஒரு பெண். ஹஸ்பண்ட் துபாய்ல... பையன் ஊட்டி கான்வென்ட்ல! இது மாதிரியான சூழ்நிலையில் இருக்கிற ஒரு பெண் எல்லா நேரங்களிலும் சந்தோஷமா இருக்க முடியாது.”

“நீங்க என்ன சொன்னாலும் சரி... இன்னிக்கு ரிதன்யா நான் என்னிக்கும் பார்க்கிற ரிதன்யா மாதிரியில்லை. என்னைப் பார்த்ததுமே ஒரு ‘ஹாய்’ சொல்லி, தலையை ஒரு பக்கமா சாய்ச்சு ‘ஹவ் ஆர் யூ ஸ்வர்ணா’னு கேட்கிற ரிதன்யாவை இன்னிக்குக் காணோம். ஏதோ ஒரு ராத்திரியில் ரொம்பவும் வயசாயிட்ட மாதிரி தெரியறா... அதுவுமில்லாமே...”

- ஸ்வர்ணலதா மேற்கொண்டு பேசும் முன்பு வாசல் கதவுக்குப் பக்கத்திலிருந்து அந்தக் குரல் கேட்டது.

“நீங்க சொல்றது சென்ட் பர்சன்ட் கரெக்ட்!”

குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள் ஸ்வர்ண லதா. வலது கையில் ஒரு ஒயர் பேக் தெரிய, பூங்கொடி வாசல் கதவருகே நின்றிருந்தாள். அவளுடைய உதடுகள் ஒரு ஐம்பது பர்சன்ட் புன்னகையை உற்பத்தி செய்து வைத்திருக்க, ஸ்வர்ணலதா முகம் மாறினாள்.

“ஸ... ஸ... ஸாரி!”

பூங்கொடி உரிமையோடு உள்ளே வந்தாள்.

“இப்ப எதுக்காக ஸாரி சொல்றீங்க..? என் னோட அக்கா ரிதன்யாவைப் பற்றின உங்க ‘கெஸ் வொர்க்’ ரொம்பவும் சரி. நானும் நேற்றைக்கு

வந்ததிலிருந்து எத்தனையோ தடவை ‘ஏன்க்கா... இப்படி இருக்கீங்க?’னு கேட்டுட்டேன். சரியான பதில் வரலை. ரொம்பவும் வற்புறுத்தி கேட்டப்போ, ‘டிபார்ட்மென்ட்ல இருக்கிற ஹை அஃபீஷியல்ஸ் ரொம்பவும் டார்ச்சர் தர்றாங்க. வேலையை ரிசைன் பண்ண மனசு இடம் கொடுக்கலை. ஏன்னா, நான் விரும்பி ஏத்துக்கிட்ட வேலை இது. என்ன பண்றதுன்னு தெரியாமே இந்த விஷயத்துல தடுமாறிக்கிட்டிருக்கேன். மற்றபடி எனக்கு குடும்ப வாழ்க்கை ரீதியா எந்தப் பிரச்னையும் இல்லை’னு சொல்லிட்டாங்க.”

ஸ்வர்ணலதாவின் கணவன் லீலாகிருஷ்ணன் ஒரு சின்ன புன்னகையோடு பூங்கொடியை ஏறிட்டான்.



“நான் என்ன சொன்னேனோ... அதைத்தான் நீங்களும் சொல்றீங்க. போலீஸ் டிபார்ட்மென்ட் டில் வேலை பார்க்கும் ரிதன்யாவுக்கு உட னடியா தீர்வு காணமுடியாத பிரச்னைகள் எவ்வளவோ இருக்கும். அதன் விளைவா டென்ஷன் ஏற்பட்டு தன்னோட இயல்பான நிலைமையிலிருந்து மாறியிருக்கலாம். ஒருத்தர் ஒரு வாரத்தோட எல்லா நாட்களிலும் சந்தோஷமா இருப்பாங்கன்னு நாம எதிர்பார்க்க முடியாதே!”

“வாட் யூ ஆர் ஸேயிங் ஈஸ் அப்சல்யூட்லி கரெக்ட் ஸார்!”

- சொல்லிவிட்டு சிரித்த பூங்கொடி தன் கையில் வைத்திருந்த ஒயர் பேக்கிலிருந்து பால் நிரம்பிய பாக்கெட்டை எடுத்தாள். ஸ்வர்ண லதாவிடம் நீட்டினாள்.

“நீங்க கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி வந்து ஒரு டம்ளர் பால் வாங்கிட்டு போனப்புறம், அக்கா மறுபடியும் ஃப்ட்ரிஜ்ஜைத் திறந்து பார்த்தப்ப... ஃப்ரீஸர்ல எக்ஸ்ட்ராவா ஒரு பால் பாக்கெட் இருந்தது தெரியவந்தது. உடனே அதை எடுத்துகிட்டு உங்க வீட்டுக்கு வரப் பார்த்தாங்க. அதுக்குள்ளே டிபார்ட்மென்ட்டிலிருந்து ஒரு முக்கியமான போன்கால் வரவும் என்கிட்ட கொடுத்து விட்டாங்க!”

ஸ்வர்ணலதாவின் மேல் ஒரு சந்தோஷ வெளிச்ச வட்டம் விழ, அந்தப் பால் பாக் கெட்டை பரவசமாய் வாங்கிக்கொண்டாள்.

“எங்க வீட்ல எல்லாரும் காபி வாசனையோடு தான் கண் விழிப்பாங்க. இன்னிக்கு என்ன பண்ணப் போறோம்னு தெரியாமத்தான் ரிதன்யாகிட்டே வந்தேன். ஒரு டம்ளர் பால் கொடுத்தாங்க. இதை வெச்சுகிட்டு என்ன பண்றதுன்னு விழிபிதுங்கிட்டிருக்கும்போதே முழுசா அரை லிட்டர் பால் பாக்கெட்டையும் கொண்டு வந்து கொடுத்துட்டீங்க... ரொம்பவும் தேங்க்ஸ்!”

பூங்கொடி சிரித்தாள். “என்னங்க... இதுக்கெல்லாம் போய் ‘தேங்க்ஸ்’ சொல்லிக்கிட்டு! நான் என்ன ஒரு பால் பண்ணையையா உங்க பேருக்கு எழுதி வெச்சேன்... ஒரு பால் பாக்கெட்டைத்தானே கொடுத்தேன்!”

“சரி... உட்காருங்க... முதல் டிகாக்ஷன்ல நல்ல காபியா போட்டுத் தர்றேன்.”

“வேண்டாங்க..! இன்னும் ஒரு மணி நேரத்துக்குள்ளே நாங்க மூணு பேரும் குளிச்சு, சாப்பிட்டு தயாராகி, வெளியே கிளம்பிடணும். ரெண்டு நாளைக்குள்ளே ‘சைட் ஸீயிங்’ஸை முடிச்சுகிட்டு ஊருக்குப் புறப்பட்டுப் போனால்தான் அங்கேயிருக்கிற வேலைகளைப் பார்க்க முடியும்! அடுத்த

தடவை இன்னும் ஆறு மாசத்துக்குள்ளே அக்கா வீட்டுக்கு நான் வருவேன். அப்ப வந்து உங்க வீட்டுல பிரேக்ஃபாஸ்ட்டே சாப்பிடறேன்!"

- சிரிக்கச் சிரிக்கச் சொல்லிவிட்டு வெளியே வந்த பூங்கொடி பதற்றம் இல்லாமல் ரோட்டைக் கடந்து ரிதன்யாவின் வீட்டுக்குள் நுழைந்தாள். கதவைச்சாத்தினாள். சோபாவில் சாய்ந்து உட்கார்ந்திருந்த திவாகர் கேட்டான்.

"என்ன நிலவரம்?"

"திவாகர்! உன்னோட கணிப்பு சரிதான். அந்த எதிர்வீட்டு ஸ்வர்ணலதாவுக்கு ஏதோ பொறி தட்டியிருக்கு. வீட்ல யார் இருக்காங்கன்னு பார்க்கத்தான் பால் கிடைக்குமானு கேட்டுக் கிட்டு காலங்கார்த்தால இங்கே வந்திருக்கா. நீ சொன்னபடி நான் வலியப் போய்ப் பேசி பால் பாக்கெட்டைக் கொடுத்துட்டு வந்ததால அவ மனசுக்குள்ளே இருந்த நெருடல் இப்போ காணாம போயிருக்கும்னு நினைக்கிறேன்."

"அப்படி ஒரேயடியா நம்பிடாதே... எதுக்கும் ஸ்வர்ணலதா மேல ஒரு கண்ணு இருக்கட்டும்!"

"சரி.... ரிதன்யா எங்கே?"

"கிச்சன்ல இருக்கா... ரவா உப்புமா தயாராயிட்டிருக்கு. உனக்கு வாசனை வரலை?"

"நல்லாவே வருது!"

- பூங்கொடி சொன்ன விநாடி, டீபாயின் மேல் வைத்திருந்த ரிதன்யாவின் செல்போன் வைப்ரேஷனில் 'கிர்ர்ர்'ரென்று அதிர்ந்தது.

"யார் கூப்பிடறாங்கன்னு டிஸ்ப்ளேயில் பாரு!"

"ரிதன்யாவோட புருஷன்தான் மறுபடியும் துபாயிலிருந்து போன் பண்றான்னு நினைக்கிறேன்..!

- பூங்கொடி சொல்லிக்கொண்டே போய் செல்போனை எடுத்து அழைப்பது யாரென்று பார்த்தாள்.

அவளுடைய முகம் தடாலடியாய் மாறியது.

சென்னை.

போலீஸ் கமிஷனர் ராஜகணேஷ் புன்னகை கசியும் உதடுகளோடு ஹோட்டல் மானேஜர் புவனேந்திரனின் தோளைத் தொட்டார்.

"போன்ல யார் கூட பேசிட்டிருந்தீங்கன்னு நான் தெரிஞ்சுக்கலாமா...?"

புவனேந்திரனின் முகம் வியர்த்திருந்தது.

"அது... வந்து... என்னோட ஃப்ரெண்ட் ஒருத்தர் போன் பண்ணியிருந்தார்... ஸார்!"

"அந்த செல்போனைக் கொண்டாங்க!"

"எ... எ.... என்ன ஸார்.... எம்மேல சந்தேகப் படறீங்களா..?"

"கொஞ்சம்..."

"ஏன் ஸார்..?"

"உங்ககிட்டே ஏதோ ஒரு தப்பு இருக்கிற மாதிரி தெரியுது... அந்த செல்போனை கொண் டாங்க!"

"ஸார்... திஸ் ஈஸ் டூ மச்.... நீங்க இந்த ஹோட் டலுக்கு வந்த நிமிஷத்திலிருந்து இந்த நிமிஷம் வரைக்கும் ஞானேஷ் விவகாரம் விஷயமா முழு ஒத்துழைப்பு கொடுத்துட்டிருக்கேன்."

"இதோ பாருங்க மிஸ்டர் புவனேந்திரன்! நீங்க கொடுத்தது முழு ஒத்துழைப்பு கிடை யாது. நானே எதிர்பார்க்காத அளவுக்கு கொஞ்சம் கூடுதலான ஒத்துழைப்பு. ஞானேஷ் விஷயத்துல என்னோட இன்வெஸ்டிகேஷன் இப்படித்தான் இருக்கணும்னு நீங்க என்னை கைடு

பண்ற மாதிரி நான் ஃபீல் பண்ணினேன். அது என்ன நீங்க செல்லர்ல இருக்கும்போது உங்க செல்போனுக்கு டவர் கிடைக்காதா? நீங்க செல்லரிலிருந்து வெளியே போனதும் நான் அங்கிருந்தபடியே என்னோட செல் போனிலிருந்து அசிஸ்டென்ட் கமிஷனருக்கு போன் பண்ணிப் பேசினேன். டவரோட 'பிக்-அப்' ரொம்பவும் துல்லியமா இருந்ததே!"

புவனேந்திரன் இப்போது அதிகமாக வியர்ந்து வழிந்தார்.

"ஸ... ஸ... ஸார்... ஐயாம் ஹார்ம்லஸ்... வீணா என் மேல..."

"சஸ்பீஷன் வேண்டாம்னு சொல்ல வர்றீங்களா? வாங்க... உங்க ரூமுக்குப் போயிடலாம். ஒரு அஞ்சு நிமிஷம் உங்க கூட பேசறேன். அந்த அஞ்சு நிமிஷத்துல நீங்க பிள்ளைப்பூச்சியா... இல்லை,

விஷப்பூச்சியானு எனக்குத் தெரிஞ்சுடும்!"

"ஸார்! ஆம்புலன்ஸ் வந்திருக்கு! காயம்பட்டிருக்கிற கிறிஸ்டோபரை ஹாஸ்பிடலுக்கு மொதல்ல அனுப்பிடலாம். அதுக்கப்புறம் நாம பேசலாம்."

"கிறிஸ்டோபர் பற்றின கவலை இனிமே உங்களுக்கு வேண்டாம். நான் போன் பண்ணி அசிஸ்டென்ட் கமிஷனரை வரவழைச் சுட்டேன். அந்த வேலையை அவர் பார்த்துக்கு வார். நடங்க... உங்க ரூமுக்கு!"

புவனேந்திரன் இருண்டு போன தன்னுடைய முகத்தில் அரும்பியிருந்த வியர்வைத் துளிகளை கர்ச்சீப்பால் ஒற்றிக்கொண்டே காரிடாரில் நடந்து தன்னுடைய அறையை நோக்கிப் போனார். கமிஷனர் ராஜகணேஷ் இரண்டடி இடைவெளியில் தொடர்ந்தார். மௌனமாய் ஒரு நிமிஷ நடை.

இருவரும் அறைக்குள் நுழைந்து, அங்கே போடப்பட்டிருந்த சோபா - நாற்காலிகளில் எதிரெதிரே உட்கார்ந்தார்கள்.

"ஸார்... தேவையில்லாமே என் மேல சந்தேகப்படறீங்க. பின்னாடி இதுக்காக நீங்க ஒரு பெரிய 'ஸாரி' சொல்ல வேண்டியிருக்கும்!"

“மொதல்ல உங்க ரெண்டு செல்போனையும் எடுத்து டீபாய் மேல வையுங்க!”

புவனேந்திரன் எடுத்து வைத்தார். கமிஷனர் அதில் ஒரு செல்போனை எடுத்தார்.

“நான் செல்லர் ரூமிலிருந்து வெளியே வரும்போது நீங்க இந்த செல்போன்லதான் பேசிட்டிருந்தீங்க. பேசினது உங்க ஃப்ரெண்ட் ன்னு சொன்னீங்க... யார் அந்த ஃப்ரெண்ட்?”

புவனேந்திரன் மௌனம் சாதிக்க, கமிஷனர் அந்த செல்போனை உசுப்பி கான்டாக்ட்ஸ் ஆப்ஷனுக்குப் போய் கடைசியாக வந்த இன் கம்மிங் கால் யாருடையது என்று பார்த்தார்.

‘NO NAME’ என்கிற ஆங்கில வாசகத்துக்கு கீழே செல்போன் எண் தெரிந்தது.

00000-00000

பத்து பூஜ்யங்கள்

# நள்ளிரவு வானவில்!- 11

## ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

# நள்ளிரவு வானவில்!

**போலீஸ்** கமிஷனர் ராஜகணேஷின் சதைப்பிடிப்பான சதுர முகத்தில் அதிர்ச்சி அலைகள் ஸ்லோமோஷனில் பரவின. செல்போனின் டிஸ்ப்ளேயில் ஒளிர்ந்த எண்களை மறுபடியும் ஒரு தடவை உற்றுப் பார்த்தார்.

சந்தேகமேயில்லாமல் பத்து பூஜ்யங்கள்.

‘இப்படியும் ஒரு செல்போன் எண்ணா?’

புவனேந்திரனிடம் செல்போனைக் காட்டிக் கேட்டார்... “இது யாரோட நம்பர்?”

“தெ... தெரி... தெரியாது ஸார்!”



"புவனேந்திரன்! இதுவரைக்கும் நீங்க விளையாடின விளையாட்டு போதும்... இனிமேலும் இந்த தப்பான விளையாட்டை நீங்க கண்டினியூ பண்ண முடியாது. ஞானேஷ் விஷயத்தில் எனக்கு உடனடியா உண்மைகள் வேணும். இந்த அறைக்குள்ளே உட்கார்ந்து உங்களால உண்மையைப் பேச முடியாத பட்சத்தில் உங்களை லாக்கப்புக்கு கொண்டு போய் அந்த இடத்துக்கு உரிய மரியாதைகளோடு விசாரிக்க வேண்டியிருக்கும்!"

புவனேந்திரனின் விழிகள் பீதியில் உறைந்து போயின. கைகூப்பினார்.

"ப்ளீஸ் ஸார்... லாக்கப் எல்லாம் வேண்டாம். நடந்த உண்மைகளைச் சொல்லிடறேன்!"

"ம்... சொல்லுங்க! இந்த பத்து பூஜ்யம் யாரோட நம்பர்..?"

"அது யார்னு எனக்குத் தெரியாது ஸார். இன்னிக்கு மத்தியானம் ரெண்டு மணி சுமாருக்கு எனக்கு ஒரு போன்கால் வந்தது. கால் பண்ணினது யார்னு தெரிஞ்சுக்கிறதுக்காக செல்போனின் டிஸ்ப்ளேயைப் பார்த்தபோது அதுல NO NAME என்கிற வார்த்தையும் அதுக்கு கீழே பத்து பூஜ்யங்களும் இருந்துச்சு. அட்டெண்ட் பண்ணி, 'பேசறது யார்'னு கேட்டேன். அதுக்கு மறுமுனையிலிருந்து பேசின நபர் 'நான் யார்னு உனக்குத் தெரிய வேண்டியது முக்கியமில்லை. செய்ய வேண்டிய வேலைதான் முக்கியம். அந்த வேலையை செஞ்சு முடிச்சா உனக்குக் கிடைக்கப் போகிற தொகை பத்து லட்சம். அந்தத் தொகை இப்போ உன்னோட அறையில் மேஜைக்குக் கீழே ஒரு ஃப்ரீப்கேஸில் நாசிக் கரன்ஸிகளாய் மாறி உனக்காக காத்திட்டிருக்கு. போய்ப் பாரு. சரியா ரெண்டு நிமிஷம் கழிச்சு நான் மறுபடியும் போன் பண்றேன். அப்ப மேற்கொண்டு பேசுவோம்'னு சொல்லி லைனை கட் பண்ணிட்டான்."

"ம்... அப்புறம்..?"

"நான் அரண்டு போனவனாய் என் னோட ரூமுக்குப் போய் மேஜைக்குக் கீழே பார்த்தேன். ஒரு ப்ரீஃப்கேஸ் இருந்தது. அதை ஓப்பன் பண்ணினேன்.

கட்டுக்கட்டா கரன்ஸி. ஒரு நிமிஷம் ஆடிப் போயிட்டேன். என்ன செய்யறதுனு யோசனை பண்ணிட்டிருக்கும்போதே மறுபடியும் பத்து சைபர் போன் வந்தது... 'என்ன புவன்! ப்ரீஃப்கேஸைப் பார்த்துட்டியா..? அதுல இருக்கிற பத்து லட்ச ரூபாய் உனக்கு அட்வான்ஸ் அமௌன்ட். நான் சொன்ன வேலையை செஞ்சு முடிச்சா இன்னும் ஒரு பத்து லட்சம் உன்னோட மேஜை மேல இருக்கும். உன்னோட பதில் என்ன?' இப்படி ஒரு அதிரடி போன் அழைப்பால நான் ஆடிப்போயிருந்தாலும் கொஞ்சம் துணிச்சலை வரவழைச்சுக்கிட்டு நான் பண்ண வேண்டிய வேலை என்னனு கேட்டேன். அதுக்கு செல்போன் மறுமுனையில் இருந்த அந்த நபர் 'ரொம்பவும் சிம்பிளான வேலைதான்... நேத்து சாயந்தரம் அஞ்சு மணியிலிருந்து ராத்திரி பத்து மணி வரைக்கும் உங்க ஹோட்டல் சி.சி.டி.வி. கேமரா பதிவு பண்ணியிருக்கிற எல்லா நிகழ்வுகளையும் டெலிட் பண்ணிட்டா போதும்'னு சொன்னான். 'அப்படி டெலிட் பண்றதால யாருக்கு என்ன லாபம்?'னு நான் கேட்டேன். 'அதெல்லாம் உனக்கு தேவையில்லாத விஷயம். உனக்கு இருபது லட்சம் வேணுமா... வேண்டாமா?'னு கேட்டான். நான் சில விநாடிகள் அரை மனசோடு யோசனை பண்ணிட்டு அந்த வேலையை செய்ய ஒப்புக்கிட்டேன். அப்படி நான் ஒப்புக்கிட்டதுக்குக் காரணம்... இந்த ஹோட்டலில் இருக்கிற சி.சி.டி.வி. கேமராக்களில் அடிக்கடி பழுது ஏற்பட்டு, பதிவான நிகழ்ச்சிகள் தானாகவே டெலிட் ஆகிற சம்பவங்கள் சர்வ சாதாரணம். ஹோட்டல் நிர்வாகம் அதை ஒரு பெரிய விஷயமா எடுத்துக்காது."

"ஒரு சின்ன வேலையைச் செய்யறதுக்காக ஒருத்தன் இருபது லட்ச ரூபாய் தர்றானேன்னு உங்களுக்கு சந்தேகம் வரலையா?"

"வந்தது ஸார்... ஆனா, ஒரு பெரிய தொகை எனக்குக் கிடைக்கப் போகிற சந்தோஷத்துல அது ஒரு சீரியஸ் விஷயமாவே என்னோட மனசுக்குப் படலை."

"சரி... கிறிஸ்டோபருக்கு இந்த விஷயத்தில் எப்படி சம்பந்தம்? அவர் இப்படி மூர்க்கத்தனமா தாக்கப்பட என்ன காரணம்?"

“இந்த ஹோட்டலில் இருக்கிற சி.சி.டி.வி. கேமரா யூனிட்டை ஆபரேட் பண்றதும், அப்ஸர்வ் பண்ணி ரிப்போர்ட் தர்றதும் கிறிஸ்டோபரின் வேலை. கிறிஸ்டோபருக்குத் தெரியாம கேமராவில் பதிவான நிகழ்ச்சிகளை டெலிட் பண்றது அவ்வளவு சுலபமில்லை. இருந்தாலும் கிறிஸ்டோபர் லஞ்சுக்கு போயிருந்த நேரத்துல நான் மாற்றுச் சாவியை உபயோகப்படுத்தி யூனிட் அறைக்குள்ளே நுழைஞ்சு, நேத்து சாயந்தரம் ஆறு மணியிலிருந்து ராத்திரி பத்து மணி வரைக்கும் கேமராவில் பதிவான நிகழ்ச்சிகளை டெலிட் பண்ணி மறுபடியும் ரூமை லாக் பண்ணிட்டு வந்துட்டேன். அடுத்த அரை மணி நேரத்துக்குள்ளேயே கிறிஸ்டோபர் என்னோட அறைக்கு வந்தான். ‘நான் லஞ்சுக்குப் போயிருந்த நேரத்துல எதுக்காக யூனிட் அறையைத் திறந்தீங்க... அங்கே உங்களுக்கு என்ன வேலை?’னு கேட்டான். எனக்கு அதிர்ச்சியா இருந்தாலும் அதை வெளியே காட்டிக்காம ‘காணாம போன ஒரு ஃபைல் அங்கே இருக்குமானு பார்க்க வந்தேன்’னு சொன்னேன். அதை நம்பாதவனாக சந்தேகப் பார்வையை வீசிட்டு, இறுகிய முகத்தோடு வெளியே போனான். அது என் மனசை உறுத்திக்கிட்டே இருந்தது. அந்த பத்து சைபர் செல்போன் பேர்வழி மறுபடியும் எனக்கு போன் பண்ணினபோது என்னோட மன உறுத்தலை அவன்கிட்டே சொன்னேன். அந்த சமயத்துலதான் அவன் அந்தக் குண்டைத் தூக்கி போட்டான்... ‘போலீஸ் கமிஷனர் ராஜகணேஷ் எந்த நிமிஷமும் ஹோட்டலுக்கு வரலாம். ஞானேஷைப் பத்தி விசாரிக்கலாம். கேமராவில் பதிவான நிகழ்ச்சிகளைப் பார்க்க விரும்பலாம். நீ எந்தவிதமான டென்ஷனையும் காட்டிக்காம ஒத்துழைப்பு கொடு. அதுக்குள்ளே கிறிஸ்டோபரோட கதையை என்னோட ஆட்களில் ஒருத்தன் முடிச்சுருவான். அவன் உயிரோடு இல்லைனா கேஸ் வேற டைரக்ஷன்ல டிராவல் பண்ண ஆரம்பிச்சுடும். இந்த பிரச்னையிலிருந்து நீயும் தப்பிச்சுக்கலாம். நானும் தப்பிச்சுக்குவேன்.”

“வரப்போற இருபது லட்ச ரூபாய் பணத்துக் காக நீங்க கிறிஸ்டோபரை பலி கொடுக்க தலையை ஆட்டிட்டீங்க?”

“எனக்கு வேற வழி தோணலை ஸார்... கிறிஸ்டோபர் என்னைக் கண்டிப்பா காட்டிக் கொடுக்காம இருக்க மாட்டான். சுலபமா பணத்தை சம்பாதிக்க ஆசைப்பட்டு இப்போ சுருக்குக் கயித்துக்குள்ளே மாட்டிக்கிட்டேன்.”



“சரி... இனிமேலாவது நீங்க உண்மையைப் பேசணும்.”

“கண்டிப்பா ஸார்!” புவனேந்திரன் தலையை ஆட்டிக்கொண்டிருக்கும்போதே மேஜையின் மேல் இருந்த அவருடைய செல்போன் ‘திடும்’ என்று விழித்துக்கொண்டு ரிங்டோனை வெளியிட்டது.

கமிஷனர் ராஜகணேஷ் செல்போனின் டிஸ்ப்ளேயைப் பார்த்தார்.

NO NAME என்கிற வார்த்தைக்குக் கீழே பத்து பூஜ்யங்கள் விட்டு விட்டு ஒளிர்ந்தன.

“அவன்தான்..! லைன்ல வர்றான். ஸ்பீக்கரை ஆன் பண்ணிட்டு பேசுங்க...” - செல்போனைத் தள்ளி வைத்தார் கமிஷனர்.

புவனேந்திரன் மைக்கை ஆன் செய்துவிட்டுப் பேசினார்.

“நான் புவன்..!”

“என்ன புவன்... உனக்கு முன்னாடி கமிஷனர் உட்கார்ந்திட்டிருக்கார் போலிருக்கு?”

பெங்களூரு.

பூங்கொடியின் முகத்தில் பரவிய அதிர்ச்சி அலைகளைக் கவனித்துவிட்ட திவாகர் அவளுடைய தோளை மெல்லத் தொட்டான்.

“போன்ல யாரு பூங்கொடி..?”

“ ‘லிட்டில் ரோஸஸ் கான்வென்ட், ஊட்டி’னு டிஸ்ப்ளேயில் வருது. அங்கிருந்து யாரோ ரிதன்யாவைக் கூப்பிடறாங்க...”

பூங்கொடி சொன்னதைக் கேட்டு கிச்சனில் ரவா உப்புமாவைக் கிளறிக்கொண்டிருந்த ரிதன்யா பதற்ற நடையோடு வேகவேகமாய் வந்தாள்.

“என்னோட சன் அபிநய் படிக்கிற கான்வென்ட் அது. அங்கிருந்து எனக்கு போன் வருதுன்னா ஏதாவது ஒரு முக்கியமான விஷயமாத்தான் இருக்கும்” -சொல்லிக்கொண்டே பூங்கொடியின் கையில் இருந்த

செல்போனை வலுக்கட்டாயமாக வாங்க முயன்றாள். திவாகர் கையமர்த்தினான்.

“பொறு... பொறு! அந்த முக்கியமான விஷயம் என்னான்னு நானும் பூங்கொடியும் தெரிஞ்சுக்க வேண்டாமா... ஸ்பீக்கரை ஆன் பண்ணிட்டு பேசு.”

ரிதன்யா செல்போனை வாங்கி ஸ்பீக்கரை ஆன் செய்துவிட்டு நடுக்கமாக குரல் கொடுத்தாள்.

“ஹலோ..!”

மறுமுனையில் ஒரு பெண் குரல் கேட்டது.

“மிஸஸ் ரிதன்யா..?”

“ஆமா...”

“மதர் ஆ∴ப் அபிநய்?”

“யெஸ்!”

“நான் லிட்டில் ரோஸஸ் கான்வென்ட் பிரின்சிபால் மரிய புஷ்பம் பேசறேன்...”

“சொல்லுங்க மேடம்... இவ்வளவு காலையில் போன் பண்ணியிருக்கீங்க... எனிதிங்க் இம்பார்ட்டன்ட்..?”

“யெஸ்..! நான் சொல்றதைக் கேட்டு நீங்க டென்ஷன் பட வேண்டாம். உங்க சன் அபிநய்க்கு கடந்த ரெண்டு நாட்களா விடாத காய்ச்சல். மாத்திரை கொடுத்துப் பார்த்தோம்... ∴பீவர் கட்டுப்படலை. ஹாஸ்பிடல்ல இப்போ அட்மிட் பண்ணியிருக்கோம்... ட்ரீட்மென்ட் ஈஸ் கோயிங் ஆன்.”

“அ... அய்யோ!” என்று அலறிய ரிதன்யா முகம் இருண்டு போனவளாய் அப்படியே மண்டியிட்டு உட்கார்ந்தாள்.

"கன்ட்ரோல் யுவர்செல்ஃப் மிஸஸ் ரிதன்யா..! டாக்டர் ட்ரீட்மென்ட் கொடுத்ததில் இப்போ டெம்பரேச்சர் குறைஞ்சிருக்கு... இன்னிக்கு சாயந்திரத்துக்குள்ளே அபிநய் ரெக்கவர் ஆயிடுவான். யூ டோண்ட் வொர்ரி... நான் இப்போ போன் பண்ணினது, உங்களுக்கு இன்ஃபார்ம் பண்ணத்தான்..!"

"நான் உடனே புறப்பட்டு வரட்டுமா மேடம்?"

"வேண்டாம்... நாட் நெசசரி... அபிநய்க்கு மறுபடியும் காய்ச்சல் வந்தாலோ அல்லது அதிகமானாலோ உங்களுக்கு உடனடியா காண்டாக்ட் பண்ணி தகவல் சொல்றேன். அந்த சமயத்துல வந்தா போதும். மறுபடியும் ரெண்டு மணி நேரம் கழிச்சு பேசறேன்" - மறுமுனையில் பிரின்சிபால் நிறுத்தி நிதானமான குரலில் பேசிவிட்டு செல்போனை அணைத்துவிட, ரிதன்யாவின் கையில் இருந்த செல்போனைப் பறித்தான் திவாகர்.

"உன் பையனுக்கு காய்ச்சல் என்கிற விஷயம் எனக்கு நேத்திக்கே தெரியும்... அங்கே இருக்கிற என்னோட ஆள் மூலமா தகவல் ராத்திரியே என் காதுக்கு வந்தாச்சு!"

ரிதன்யாவின் கண்கள் வெகுவாக கலங்கியிருக்க... கன்னங்களில் நீர்ச்சரங்கள். திவாகரைப் பார்த்து கைகூப்பினாள். குரல் உடைந்து சிதறியது.

"நா... நான் என் பையனைப் பார்க்கணும். ஊட்டிக்கு உடனடியா புறப்பட்டுப் போகணும்!"

"என்னது... ஊட்டிக்கு போகணுமா..! தாராளமா போ. அதுக்கு முந்தி எங்களுக்கு 'நள்ளிரவு வானவில்லை'க் காட்டிட்டு போ!"

ரிதன்யா அழுகையில் வெடித்தாள்.

"என்னோட குழந்தை உடம்புக்கு முடியாம ஹாஸ்பிடல்ல அட்மிட்டாகியிருக்கான். அவன் மேல சத்தியம் பண்ணிச் சொல்றேன். எனக்கு 'நள்ளிரவு வானவில்' என்கிற வார்த்தை தெரியுமே தவிர அது எது

மாதிரியான விஷயம், யார்கிட்டே இருக்குன்னு எனக்குத் தெரியாது... தெரியாது... தெரியாது!"

"நிஜமா யார்கிட்டே இருக்குன்னு உனக்குத் தெரியாதா?"

"தெரியாது..!"

"அப்புறம் ஏன் நேத்திக்கு காலையில் 'அல்டிமேட் வொண்டர்ஸ்' ஐ.டி. கம்பெனிக்குப் போய் அந்த கம்பெனியோட எம்.டி. யோகானந்தத்தையும், அவரோட மகன் ரூபேஷையும் என்கொயரி பண்ணினே?"

ரிதன்யா உஷ்ணமாக பெருமூச்சொன்றை வெளியேற்றிவிட்டு தன் நெற்றியைப் பிடித்துக்கொண்டாள்.

"நான் நேற்றைக்கே உன்கிட்ட எல்லாத்தையும் சொல்லிட்டேன். 'நள்ளிரவு வானவில்' என்கிற 'கோட் வேர்ட்'டுக்கும் யோகானந்தின் கம்பெனியான அல்டிமேட் வொண்டர்ஸுக்கும் ஏதோ லிங்க் இருக்கலாம்னு என்னோட இம்மீடியட் பாஸ் டி.எஸ்.பி. நம்பெருமாள் சந்தேகப்பட்டார். என்கொயரி பண்ண என்னை அனுப்பினார்."

"என்கொயரி பண்ணினியா?"

"ஆமா..! ஆனா, யோகானந்தும் அவரோட பையன் ரூபேஷும் நான் பண்ணின விசாரணைக்கு ஒத்துழைப்பு தரலை. அவர்களோட பேச்சும் நடத்தையும் என்னை மிரட்டற மாதிரி இருந்தது. அதுவுமில்லாமே நான் அவங்களை விசாரணை பண்ணிட்டிருக்கும்போதே 'நள்ளிரவு வானவில்' மேட்டரை முதன் முதலா சைபர் க்ரைம் செல்லுக்கு இன்ஃபார்ம் பண்ணின கலியுகம் டி.வி. ரிப்போர்ட்டர் இரண்டாம் நாரதன் சென்னை ஈ.ஸி.ஆர். ரோட்ல பைக்கில் போகும்போது கொலை செய்யப்பட்டார். அதற்கடுத்த சில மணி நேரத்துக்குள்ளேயே பெங்களூரு சைபர் க்ரைம் செல் எஸ்.பி. சந்திர கவுடா, யஷ்வந்த்பூர் ரயில்வே ஸ்டேஷன் அருகே ஜீப்ல போயிட்டிருக்கும்போது பெட்ரோல் குண்டு வீசப்பட்டு சம்பவ இடத்திலேயே மரணமடைந்தார். அடுத்தடுத்து நடந்த அந்த ரெண்டு விபரீத சம்பவங்களால

எங்க சைபர் க்ரைம் செல் இந்த 'நள்ளிரவு வானவில்' மேட்டரை தற்காலிகமா நிறுத்தி வெச்சிருக்கு. இந்த நிலைமையிலே என்னால என்ன பண்ண முடியும்னு நீ நினைக்கிறே..?"

திவாகர் தன் உதடுகளில் மெலிதான சிரிப்பு ஒன்றைத் தவழவிட்டான்.

"உன்னால முடியும் ரிதன்யா..! இன்னிக்கு காலையில் பத்து மணிக்கு அந்த 'அல்டிமேட் வொண்டர்ஸ்' ஐ.டி. கம்பெனி எம்.டி. யோகானந்தை மறுபடியும் பார்த்து 'நள்ளிரவு வானவில்' பற்றிப் பேசப் போறே!"

ரிதன்யாவின் இதயத்துக்குள் போர்க்கால முரசின் ஒலி கேட்டது.

**நள்ளிரவு வானவில்!- 12**

**ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்**

# நள்ளிரவு வானவில்!

**முன்கதை 'சுருக்'!**

இது இரண்டு ட்ராக் கதை. முதல் ட்ராக் சென்னை. இரண்டாவது ட்ராக் பெங்களூரு.

**முதல் ட்ராக் (சென்னை)**

அபிராமி, சந்திரசூடன் தம்பதியரின் ஒரே மகளான மீராவை டெல்லியில் இருக்கும் சாஃப்ட்வேர் கம்பெனியில் அதிகாரியாக பணியாற்றும் ஞானேஷ் என்கிற இளைஞன் பெண் பார்க்க வர இருக்கும் நேரத்தில், அவனுடைய அஸ்தி (சாம்பல்) ஒரு மண்சட்டியில் மீராவின் வீட்டு மொட்டை மாடியில் வைக்கப்பட்டு, எல்லோருக்கும் அதிர்ச்சியை அளிக்கிறது. ஞானேஷின் அப்பா... ரிடையர்ட் ஜட்ஜ் பார்த்தசாரதி, ஆடிப்போகிறார். ஞானேஷ் கொலை செய்யப்பட்டானா... கொலை செய்யப்பட்டிருந்தால் என்ன காரணம்..? விசாரணையை ஆரம்பிக்கிறது, போலீஸ். இதில் மீராவுக்கு பிரணவ் என்கிற காதலன் இருப்பது தெரிய வருகிறது. அதேபோல், ஞானேஷ் குறிப்பிட்ட நாளில் வருவதற்குப் பதிலாக இரண்டு நாட்களுக்கு முன்பே சென்னை வந்து ஒரு ஹைடெக் மீட்டிங்கில் கலந்துகொண்டிருப்பதும் தெரிய வருகிறது. போலீஸ் கமிஷனர் ராஜகணேஷ் உண்மைகளைக் கண்டுபிடிக்க களத்தில் இறங்குகிறார். அடையாறு 'ஸ்கை வ்யூ' ஹோட்டல் மேனேஜர் புவனேந்திரன், போலீஸ் பிடியில் சிக்குகிறார்.




**இரண்டாவது ட்ராக் (பெங்களூரு)**

பெங்களூரு சைபர் க்ரைம் பிராஞ்ச் போலீஸ் அதிகாரி ரிதன்யா. கணவன் ஹரிகிருஷ்ணன், துபாயில் வேலை பார்க்கிறான். மகன் (5 வயது) அபிநய், ஊட்டி கான்வென்ட்டில் படிக்கிறான். துணிச்சலான பெண்ணான ரிதன்யாவிடம் 'நள்ளிரவு வானவில்' என்கிற ஒரு என்கொயரி ஆபரேஷனை ஒப்படைக்கிறார் மேலதிகாரியான டி.எஸ்.பி. நம்பெருமாள். இது ஒரு விபரீதமான 'கோட்வேர்ட்'. விசாரணைக்காக பெங்களூரில் இருக்கும் 'அல்டிமேட் வொண்டர்ஸ்' என்கிற ஒரு சாஃப்ட்வேர் கம்பெனிக்கு போய், அதன் எம்.டி -யான யோகானந்த், அவருடைய மகன் ரூபேஷ் ஆகியோரை ரிதன்யா அணுக, அவர்கள் அவளை மிரட்டி அனுப்பி வைக்கிறார்கள். அதேநேரத்தில் 'நள்ளிரவு வானவில்' விஷயத்தில் தீவிரம் காட்டிய பெங்களூரு எஸ்.பி. சந்திரகௌடா மீது பெட்ரோல் குண்டு வீசப்பட்டு, கொலை செய்யப்பட, டி.எஸ்.பி. நம்பெருமாள், விசாரணையில் ஈடுபட வேண்டாம் என்று ரிதன்யாவை அனுப்பிவிடுகிறார் (யோகானந்துக்கு

ஆதரவாக செயல்படுபவர் டி.எஸ்.பி. நம்பெருமாள் என்பது ரிதன்யாவுக்குத் தெரியாது).

இந்த நிலைமையில் 'திவாகர் - பூங்கொடி' என்ற பெயர்களில் தம்பதி போல் வந்த இருவர் ரிதன்யாவை வீட்டுக்குள்ளேயே சிறை வைத்து 'நள்ளிரவு வானவில்' பற்றி கேட்டு மிரட்டுகிறார்கள் அந்த சமயம் துபாயிலிருந்து கணவன் ஹரிகிருஷ்ணன் இந்தியாவுக்கு வரப்போவதாக போனில் தெரிவிக்கிறான். ஊட்டியில் படிக்கும் குழந்தை அபிநய்யின் உடல்நிலை சரியில்லையென்று கான்வென்ட் பிரின்சிபால் போன் செய்து தகவல் சொல்கிறார். ரிதன்யாவை 'நள்ளிரவு வானவில்'லுக்காக மீண்டும் யோகானந்திடம் அனுப்ப முடிவு செய்கிறார்கள் திவாகரும் பூங்கொடியும்.

**இனி...**

ஒட்டுமொத்த உடம்பும் உறைந்து போன தினுசில் ரிதன்யா, திவாகரை ஒரு அனல் பார்வை பார்த்தாள்.

"எ... எ... என்னது..! அல்டிமேட் வொண்டர்ஸ் ஐ.டி. கம்பெனியின் எம்.டி. யோகானந்தை மறுபடியும் போய்ப் பார்த்து 'நள்ளிரவு வானவில்' பற்றி பேசணுமா?"

"ஆமா..."

"உனக்கென்ன தலையில் மூளை இருக்கா... இல்ல, அது இருக்க வேண்டிய இடத்துல வெறும் சதைதான் இருக்கா..?"

"என்ன சொன்னே..?" - திவாகர் விநாடிக்கும் குறைவான நேரத்தில் தன் இடதுகையை ரிதன்யாவின் முகத்தை நோக்கி வீச, அது சவுக்காய் சுழன்று அவளுடைய வலது கன்னத்தை நொறுக்கியது. பின் மண்டைக்குள் பிரளயம். வாய்க்குள் ரத்தம் புளித்தது.

திவாகர் தன் வலதுகையின் சுட்டுவிரலை உயர்த்தினான். "இதோ பார்..! இனியொரு தடவை நீ இது மாதிரி சத்தம் போட்டுப் பேசக்கூடாது. உன்னோட

வாயிலிருந்து வர்ற ஒவ்வொரு வார்த்தையும் பயந்து பயந்து வெளியே வரணும். நாங்க என்ன சொல்றோமோ அதைக் கேட்டு அட்சரம் பிசகாம நடக்கணும். அதை விட்டுட்டு உன்னோட போலீஸ் புத்தியைக் காட்டினே... அப்புறம் என்னையும், பூங்கொடியையும் உன்னால சமாளிக்க முடியாது. சாம்பிளுக்கு ஒண்ணைக் காட்டட்டுமா?"

- சொன்னவன், பூங்கொடியைப் பார்த்து கண்ணசைக்க, அறைக்குள் போய் தன் சூட்கேஸைத் திறந்து, சிறிய குப்பி ஒன்றை எடுத்து வந்து திவாகரிடம் கொடுத்தாள்.

"இது என்னன்னு தெரியுதா?"

தன்னுடைய கன்னத்தில் விழுந்த அறையில் பொறிகலங்கிப் போயிருந்த ரிதன்யா மிரட்சியோடு 'தெரியாது' என்பது போல் தலையாட்டினாள். விழிகளில் நிரம்பியிருந்த நீர் சிதறியது.

திவாகர் நீல நிறத்தோடு பளபளப்பாக இருந்த அந்தக் குப்பியை ரிதன்யாவின் முகத்துக்கு முன்பாக நீட்டியபடியே சொன்னான்.

"இதுல இருக்கிறது ஒரு வகையான 'ஐ ட்ராப்ஸ்". இது சாதாரண 'ஐ ட்ராப்ஸ்' கிடையாது. தாதா டைப் மெடிசன். வெளிநாட்டில் மட்டுமே கிடைக்கிற அபூர்வமான ஜாதி. . இதிலிருந்து ஒரே ஒரு சொட்டு மட்டும் கண்ணுல விட்டா போதும், அந்தக் கண் அடுத்த 24 மணி நேரத்துக்கு தெரியாது. இருக்கிற இன்னொரு கண்ணால மட்டும்தான் பார்க்க முடியும். டெம்பரரி ப்ளைண்ட்னஸ். உன்னோட இடது கண்ணுக்கு போட்டு டெஸ்ட் பண்ணிப் பார்க்ஂகலாமா? இது ஒரு த்ரில் எக்ஸ்பீரியன்ஸ். என்ஜாய் பண்றியா?"

ரிதன்யா, பயத்தில் முகம் வெளுத்து பின்வாங்கினாள்... "வே... வேண்டாம்!"

"அது மாதிரியான விபரீத விளையாட்டெல்லாம் வேண்டாம்னு நீ நினைச்சா, நாங்க எது சொன்னாலும் மறுபேச்சு பேசாமே ஒத்துழைப்பு கொடுக்கணும். என்ன புரியுதா?"

"பு... பு... புரியுது... ஆனா, நான் என்ன சொல்ல வர்றேன்னா...?"

"நீ என்ன சொல்ல வர்றேனு எங்களுக்குப் புரியாம இல்லை. நீ அந்த அல்டிமேட் வொண்டர்ஸ் ஐ.டி. கம்பெனியின் எம்.டி-யான யோகானந்த்கிட்ட ஏற்கெனவே 'நள்ளிரவு வானவில்' பற்றின ஒரு என்கொயரியை டிபார்ட்மென்ட் மூலமா நடத்தி முடிச்சுட்டே. அந்த என்கொயரியை நீ நடத்திட்டு இருக்கும்போதே சில அசம்பாவிதங்கள் நடந்தன. அதனால உன்னோட டி.எஸ்.பி. மேற்கொண்டு இந்த என்கொயரியை நடத்த வேண்டாம்... ட்ராப் பண்ணிடுன்னு சொல்லிட்டார். இதைத்தானே சொல்ல வர்றே?"

"ஆமா..!"

"இன்னிக்கு நீ அந்த யோகானந்தையும் அவரோட மகன் ரூபேஷையும் மீட் பண்ணப் போறது அவங்களோட கம்பெனியில் இல்லை."

"பி... பி... பின்னே..?"

"ஒய்ட் ஃபீல்டில் 'ப்ளஸன்ட் ஓஸன்'னு ஒரு ஸ்டார் ஹோட்டல் இருக்கு தெரியுமா?"

"ம்... கே... கே... கேள்விப்பட்டிருக்கேன்."

"அங்கதான் யோகானந்தும் அவரோட சன் ரூபேஷும் நேத்து ராத்திரியிலிருந்து ஸ்டே பண்ணியிருக்காங்க. இன்னும் ரெண்டு நாளைக்கு அதே ஹோட்டலில்தான் இருக்கப் போறாங்க."

"எதுக்காக அங்கே..?"

“பொதுவா இதுமாதிரியான பெரிய புள்ளிகள் வீட்டை விட்டுட்டு ஸ்டார் ஹோட்டல்களில் போய் தங்கறாங்கன்னா ஏதோ தப்பு பண்ணப்போறாங்கன்னு அர்த்தம்.”

“என்ன தப்பு?”

“சைபர் க்ரைம் போலீஸ் அதிகாரியா இருக்கிற உனக்கு அது எதுமாதிரியான தப்புன்னு தெரிஞ்சிருக்குமே?”

“நிஜமாவே எனக்குத் தெரியாது.”

“நீ சொல்றதை என்னால நம்ப முடியலை. இருந்தாலும் சொல்றேன் கேட்டுக்கோ... இந்திய தொழில்நுட்ப சட்ட விதிகளின்படி ஐ.டி. சம்பந்தப்பட்ட சில நுணுக்கங்களை மற்ற நாடுகளின் தொழில் அதிபர்களுக்கு தெரியப்படுத்தக் கூடாது. ஆனா, நம்ம நாட்டுலதான் பணம் இருப்பவனுக்கு ஒரு சட்டம்... இல்லாதவனுக்கு ஒரு சட்டமாச்சே! ஐ.டி. துறையில் நம்ம நாட்டின் வளர்ச்சிக்காக கண்டுபிடிக்கப்படும் புதிய தொழில்நுட்பங்களை மற்ற நாடுகளின் தொழில் அதிபர்களோடு பகிர்ந்துகொள்வதன் மூலம் கோடிக்கணக்கான ரூபாய்களை ஒரே ராத்திரியில் சம்பாதிச்சுடறாங்க யோகானந்த் போன்ற ஆட்கள்! வாரத்துக்கு ஒரு தடவை பொள்ளாச்சியில் சந்தை கூடற மாதிரி இந்த ஐ.டி. கம்பெனி புள்ளிகள் மாசத்துல ஒரு தடவையாவது ஏதாவது ஒரு ஃபைவ் ஸ்டார் ஹோட்டலில் கூடி கோடிகளில் குளியல் போட்டுடுவாங்க.”

ரிதன்யா கலவரமானாள்.

“அ... அ... அந்த இடத்துக்கு நான் போய் ‘நள்ளிரவு வானவில்’ விஷயமா மீட் பண்றதால என்ன பிரயோஜனம்?”

“நள்ளிரவு வானவில் உடனே கிடைக்கும்!”

“எ... எ... எப்படி..?”

“உன் கையில மந்திரக்கோல் இருக்குமே!”

“மந்திரக்கோலா?”

‘‘ஆமா..! நீ அவரைச் சந்திக்க போறதுக்கு முன்னாடி நாங்க அந்த மந்திரக்கோலை உன் கையில கொடுப்போம்.”

சென்னை.

போலீஸ் கமிஷனர் அலுவலகம். காலை பத்து மணி.



கமிஷனர் ராஜகணேஷ், தனக்கு முன்பாக உட்கார்ந்திருந்த மீரா, சந்திரசூடன், அபிராமி, பார்த்தசாரதி ஆகியோரை மாறி மாறி பார்த்தபடி மெல்லிய குரலில் பேச ஆரம்பித்தார்.

“ஞானேஷோட விவகாரத்தில் இப்போ ஒரு சில விஷயங்கள் வெளியே வந்திருக்கு. அவர் சென்னை வந்து அவ ரோட ஃப்ரெண்ட் மணிகண்டன் வீட்ல தங்கியிருந்தபோது ஒரு ‘ஹை-டெக் மீட்டிங்கில் கலந்துகொள்வதற்காக அடையாறில் இருக்கிற ‘ஸ்கை வ்யூ’ ஹோட்டலுக்குப் போயிருக்கார். அங்க யார் யாரைச் சந்திக்கப் போனார்... என்ன விஷயத்துக்காக போனார்னு கண்டுபிடிக்கிறதுக்காக நான் அந்த ஹோட்டலுக்கு நேத்து சாயந்தரம் ஏழு மணி சுமாருக்குப் போயிருந்தேன். ஹோட்டலில் பொருத்தப்பட்டிருந்த

சி.சி.டி.வி. கேமராக்களில் ஞானேஷோட நடமாட்டம் பதிவாகியிருக்கா இல்லையான்னு தெரிஞ்சுக்கிறதுக்காக ஹோட்டலின் மானேஜர் புவனேந்திரன் மூலமா முயற்சி செய்தபோது சில அதிர்ச்சிகரமான விஷயங்கள் தெரிய வந்தன. யாரோ புவனேந்திரனுக்கு பத்து லட்ச ரூபாய் குடுத்து சி.சி.டி.வி. கேமராக்களில் பதிவாகியிருந்த ஞானேஷ் சம்பந்தப்பட்ட நிகழ்வுகளை டெலிட் பண்ண வெச்சிருக்காங்க. அதை 'ஸ்மெல்' பண்ணிட்ட கேமிரா யூனிட்டின் ஆபரேட்டர் கிறிஸ்டோபரையும் கொலை செய்யும் எண்ணத்தோடு தாக்கியிருக்காங்க. அதிர்ஷ்டவசமா காயங்களோடு தப்பிச்சுட் டார். புவனேந்திரனை மடக்கி அவரோட ரூம்ல வெச்சு விசாரணை பண்ணிட்டு இருக்கும்போது பத்து பூஜ்யம் செல்போன் எண் கொண்ட அந்த நபரிடமிருந்து புவனேந்திரனுக்கு போன். ஸ்பீக்கரை ஆன் பண்ணிட்டு பேசும்படியா சொன்னேன். அவரும் ஸ்பீக்கரை ஆன் பண்ணிட்டு பேசினார். அந்த கான்வர்சேஷனை அப்படியே ரெக்கார்ட் பண்ணிட்டு வந்திருக்கேன். அதை இப்போ போட்டுக் காட்றேன். வாய்ஸை அப்சர்வ் பண்ணுங்க. அது உங்களுக்கு பரிச்சயமான குரலா இருக்கலாம்..."

- கமிஷனர் தன்னுடைய செல்போனை 'ஆன்' செய்தார். எல்லோரும் அதிர்ச்சி ஈஷிக்கொண்ட முகங்களோடு அந்த செல்போனையே பார்த்துக்கொண்டிருக்க... உரையாடல் ஆரம்பமாயிற்று.

"என்ன புவன்... போலீஸ் கமிஷனர் உனக்கு முன்னாடி உட்கார்ந்திட்டிருக்கார் போலிருக்கு..?"

"ஆ... ஆமா..!"

"நிலைமை சரியில்லைன்னு நினைக்கிறேன்."

"ஆ... ஆமா..."

"கிறிஸ்டோபர் பற்றின கவலையோ பயமோ உனக்கு வேண்டாம். அவனை எப்படி ஹேண்டில் பண்றதுன்னு எனக்குத் தெரியும். ஞானேஷ் விஷயத்துல நீ பண்ணின உதவிக்கு ரொம்பவும் நன்றி. போலீஸுக்கு

உன்மேல சந்தேகம் வர வாய்ப்பு இருக்கிற காரணத்தால நான் இனிமே உனக்கு போன் பண்ண மாட்டேன். நான் கொடுத்த பத்து லட்ச ரூபாய் பணத்தை யார் கண்ணிலும் படாம ஒளிச்சு வை. போலீஸ் உன்னை விசாரணை பண்ணும்போது ஒரு தடவை ரெண்டு தடவை யோசனை பண்ணிட்டு பதில் சொல்லு."

"ம்... ம்..!"

"கமிஷனர் எதிர்ல உட்கார்ந்துட்டிருக்கிறதால உன்னால சரியா பேச முடியலைனு நினைக்கிறேன். இட்ஸ் ஓ.கே... இனிமே நீ என்னை மறந்துடு!"

உரையாடல் நின்று போக... செல்போனை அணைத்துவிட்டு பார்த்தசாரதியை ஏறிட்டார் கமிஷனர்.

"ஸார்! நீங்க ஒரு ரிடையர்ட் ஜட்ஜ். எத்தனையோ க்ரைம் சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரணை பண்ணின உங்களுக்கு உங்க மகன் ஞானேஷ் சம்பந்தப்பட்ட இந்த விவகாரம் அதிர்ச்சியாத்தான் இருக்கும். மீரா வீட்டு மொட்டை மாடியில் ஒரு மண் சட்டியில் இருந்த அஸ்தி உண்மையிலே ஞானேஷோடதுதானா... இல்லை, வேற யாரோடதாவதான்னு கண்டுபிடிக்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கோம். இந்த விவகாரத்தில் நமக்கு கிடைச்சிருக்கக் கூடிய ஒரே ஒரு தடயம், இந்த ரெக்கார்டட் வாய்ஸ்தான். இது யாரோட வாய்ஸா இருக்க முடியும்னு உங்களால கெஸ் பண்ண முடியுதா ஸார்?"

பார்த்தசாரதி இருண்டு போன முகத்தோடு தலையாட்டினார்." எனக்கு வாய்ஸ் பிடிபடலை. ஏதோ புதுசா கேட்கிற மாதிரி இருக்கு!"

கமிஷனர் பார்வை இப்போது மீராவின் பக்கம் திரும்பியது. "நீ இந்தக் குரலை கேட்டிருக்கியாம்மா?"

"இல்ல ஸார்..!"

சந்திரசூடனும், அபிராமியும் தங்களுடைய பங்குக்கு தலைகளை ஆட்டி வைத்தார்கள்.

"நாங்களும் இந்த வாய்ஸைக் கேட்டதில்லை ஸார்!"

கமிஷனர் சில விநாடிகள் மௌனமாக இருந்துவிட்டு, மேஜையின் மேல் கைகளை ஊன்றியபடி, நிறுத்தி நிதானமான குரலில் பேச ஆரம்பித்தார்.

"செல்போனில் பேசியவன் சாதாரண நபர் கிடையாது. ஒரு அல்ட்ரா மாடர்ன் ஹைடெக் பேர்வழி. ஹோட்டல் மானேஜர் புவனேந்திரனுடன் அவன் பேச உபயோகப்படுத்தியது ஆர்டினரி செல்போன் இல்லை. நானோ செல்போன். அது மாதிரியான செல்போன்கள் நம் இந்தியாவில் கிடையாது. சீனா, ஜப்பான், அமெரிக்கா போன்ற நாடுகளில் பெரிய பெரிய பதவிகளில் இருப்பவர்கள் மட்டுமே பயன்படுத்துவார்கள். நானோ செல்போனிலிருந்து ஒருவர் சாதாரண செல்போனுக்கு டயல் செய்தால் அழைப்பவரின் எண் பத்து பூஜ்யங்களாய்த்தான் டிஸ்ப்ளேயில் தெரியும். கூடவே 'NO NAME' என்கிற ஆங்கில வார்த்தையும் உற்பத்தியாகும்..."

பார்த்தசாரதி உஷ்ணமான பெருமூச்சொன்றை வெளியேற்றி விட்டு "நீங்க சொல்றதைப் பார்த்தா அந்த நபர் யார்னு கண்டுபிடிக்கவே முடியாது போலிருக்கே?"

"சான்ஸே இல்லைன்னு சைபர் க்ரைம் ப்ராஞ்ச் பீப்பிள் சொல்லிட்டாங்க. அட் ப்ரசன்ட் வீ ஆர் ஹெல்ப்லஸ்..! பட், மீரா மனசு வெச்சா அந்த 'கல்ப்ரிட்' யார்ங்கிறதை கண்டுபிடிச்சுடலாம்."

"நானா...?" நெஞ்சில் கை வைத்து அதிர்ந்தாள் மீரா.

"யெஸ்... உன்னோட காதலன் பிரணவ் இப்போ எங்கே இருக்கான்?"

"தெரியலை ஸார்... ரெண்டு நாளா அவரோட போனைத்தான் எதிர்பார்த்திட்டிருக்கேன்."

“அந்த பிரணவ் சரியில்லை. அவன்கிட்டே நிறைய தப்பு இருக்கு... இன்ஷூரன்ஸ் கம்பெனியில் வேலை பார்க்கிறதா சொல்லி உன்னை ஏமாத்தியிருக்கான். அவன் கைக்கு கிடைச்சாத்தான் ஞானேஷுக்கு என்னாச்சுங்கிற உண்மை தெரிய வரும். அவனோட போட்டோ உன்கிட்டே இருக்கா?

கமிஷனர் கேட்டுக்கொண்டிருக்கும் போதே அவருடைய லேண்ட் லைன் டெலிபோன் விழித்துக்கொண்டு சிணுங்கியது. ரிஸீவரை எடுத்து காதுக்கு ஒற்றினார். மறுமுனையில் டெப்டி கமிஷனர் பேசினார்.

“ஸார்..! நேஷனல் இன்ஸ்ட்டிட்யூட் ஆஃப் ஃபாரன்சிக் லேப்பிலிருந்து அந்த அஸ்தி பற்றின ரிப்போர்ட் வந்திருக்கு.”

“ரிப்போர்ட் என்ன சொல்லுது?”

“அந்த சாம்பலில் இருந்த எலும்புத் துணுக்குகளின் மூலமா, டி.என்.ஏ. டெஸ்ட் பண்ணி ஞானேஷோட அப்பா பார்த்தசாரதியோட டி.என்.ஏ-வோடு ஒப்பிட்டுப் பார்த்திருக்காங்க.”

“ரிசல்ட் என்ன?”

“அது ஞானேஷோட சாம்பல்தான் ஸார்!”

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

# நள்ளிரவு வானவில்!

"**ஸா**ர், திஸ் இஸ் ஹைலி அன் ஃபார்ச்சு னேட்... ரிப்போர்ட் இப்படி வரும்னு நான் ஒரு பர்சன்ட்கூட எதிர்பார்க்கலை!"

கமிஷனர் ராஜகணேஷ் சொன்னதைக் கேட்டு, டி.ஜி.பி மோகன் பிரசாத் தன் தலையின் பரந்த வழுக்கையில் வலது உள்ளங்கையை வைத்தபடி ஆயாசமாக நாற்காலியில் சாய்ந்தார்.




"அது ஞானேஷோட அஸ்திதான்னு அவரோட ஃபாதர் பார்த்தசாரதிகிட்டே சொல்லிட்டீங்களா?"

“சொல்லலை ஸார்.”

“ஏன்... ரிப்போர்ட் வந்து ரெண்டு நாளாச்சு. சம்பந்தப்பட்டவங்ககிட்டே உண்மையைச் சொல்ல வேண்டியதுதானே!”

“ஸாரி ஸார்... மனசு வரலை. ஜட்ஜ் பார்த்தசாரதி ஏற்கெனவே மனைவியை இழந்தவர். இப்போ மகனும் உயிரோடு இல்லைனு தெரிய வரும்போது இடிஞ்சு போயிடுவார். அதான் உடனடியா சொல்ல மனசு வரலை. இன்வெஸ்டிகேஷன்ல இருக்கிற சில குழப்பமான கேள்விகளுக்குப் பதில் கிடைச்ச பிறகு, எப்படி சொல்லணுமோ அப்படி சொல்லிடலாம்னு இருக்கேன்.”

“அந்த ஹோட்டல் மானேஜர் புவனேந்திரன்கிட்டேயிருந்து ஏதாவது உருப்படியான தகவலைக் கறக்க முடிஞ்சுதா?”

“இல்ல ஸார்! பணத்துக்கு ஆசைப்பட்டு சி.சி.டி.வி. கேமராக்களில் பதிவாகியிருந்த ஞானேஷ் சம்பந்தப்பட்ட சம்பவங்களை டெலிட் பண்ணியிருக்கார் புவனேந்திரன்... அவ்வளவுதான். அந்த விஷயம் கேமிரா யூனிட் சூபர்வைஸரான கிறிஸ்டோபருக்குத் தெரிஞ்சுட்டதால தாக்கப்பட்டிருக்கார்.”

“டெலிட் செய்யப்பட்ட ஞானேஷ் சம்பந்தப்பட்ட காட்சிகளில் எது மாதிரியான பதிவுகள் இருந்ததா புவனேந்திரன் சொன்னார்?”

“ஹோட்டலோட பாரிலும் ரெஸ்டாரன்ட்டிலும் ஞானேஷ் காத்திருந்து சில பேரை மீட் பண்ணிப் பேசியிருக்கார். பாரில் பதிவான காட்சிகளில் ஞானேஷ் ரொம்பவும் எமோஷனலா இருந்திருக்கார்.”

“இது புவனேந்திரன் சொன்ன தகவல்களா?”

“ஆமாம் ஸார்...”

“கிறிஸ்டோபர் என்ன சொன்னார்?”

“அவரும் புவனேந்திரன் சொன்னதையேதான் சொன்னார். ஞானேஷ் அந்த ஹோட்டலில் ராத்திரி பத்து மணி வரைக்கும் இருந்துட்டு அதுக்குப் பின்னாடிதான் வெளியே போயிருக்கார்!”

“அதுக்கப்புறம் ஞானேஷ், தன் ஃப்ரெண்ட் மணிகண்டன் வீட்டுக்குத் திரும்பலையா?”

“திரும்பலை ஸார்!”

“ஸோ.... அந்த ராத்திரி நேரத்துலதான் ஞானேஷ் தீர்த்துக்கட்டப்பட்டு இருக்கணும். உடம்பு எரிக்கப்பட்டு அந்த அஸ்தியை ஒரு மண்சட்டியில் வெச்சு மீராவின் வீட்டு மொட்டை மாடியில் கொண்டு போய் வெச்சிருக்கணும்.”

“என்னோட கெஸ் வொர்க்கும் அதுதான் ஸார். பட், இந்த விஷயத்துல எனக்கொரு பெரிய சந்தேகமும் இருக்கு!”

“என்ன?”

“ஞானேஷை தீர்த்துக்கட்டி அவனோட உடம்பை எரிச்ச கொலையாளி, சாம்பலை எதுக்காக ஒரு மண்சட்டியில் போட்டு மீரா வீட்டு மொட்டை மாடியில் கொண்டு போய் வெக்கணும்? மீராவுக்கு போன் பண்ணின நபர், ‘ஞானேஷ் உன் வீட்டு மொட்டை மாடியில் உனக்காக வாட்டர் டேங்குக்குப் பக்கத்துல வெயிட் பண்ணிட்டிருக்கார்... போய்ப்பாரு’னு ஏன் சொல்லணும்?”

“கொலையாளி ஒரு சைக்கோ பேர்வழியா இருக்கலாம்!”

“நான் அப்படி நினைக்கலை ஸார்.”

“தென் வாட்?”

“இது ஒரு ஹைலி சோஃபிஸ்டிகேட்டட் க்ரைம் மாதிரி தெரியுது ஸார். ஞானேஷோட கொடூர முடிவு மீடியாக்கள் மூலமா வெளியே தெரியும்போது

எதிரிகள் அதிர்ச்சி அடையணும்ங்கிறது கொலையாளி எண்ணமா இருக்கலாம்."

"மீடியாக்களுக்கு இன்னமும் நீங்க விஷயத்தை தெரியப்படுத்தலை... இல்லையா?"

"ஆமா ஸார்! இப்போதைக்கு இது ஒரு 'இன்-கேமரா' இன்வெஸ்டிகேஷன்தான். ஞானேஷ் ஒரு சாதாரண நபர் கிடையாது. டெல்லியில் இருக்கிற மிகவும் பிரபலமான 'ப்யூச்சர் மிராக்கிள்' என்கிற மல்டி நேஷனல் ஐ.டி. கம்பெனியில் வைஸ் பிரசிடென்ட். இந்த சின்ன வயசிலேயே இவ்வளவு பெரிய 'கீ போஸ்ட்'டில் இருக்கிறது ரேர் ஆஃப் த ரேரஸ்ட். இதுபற்றி ஞானேஷோட ஃபாதர்கிட்ட விசாரிச்சபோது அவர் சொன்ன ஒரு விஷயம் இந்த கேஸுக்கு உபயோகப்படலாம்னு நினைக்கிறேன் ஸார்."

"அவர் என்ன சொன்னார்?"

"ஞானேஷ் இவ்வளவு சின்ன வயசுல 'ப்யூச்சர் மிராக்கிள்' கம்பெனியில் வைஸ் பிரசிடென்ட் போஸ்ட்டுக்கு வரக் காரணம், அவன் ஐ.டி. தொழில்நுட்பத்தில் கண்டுபிடிச்ச சிலவகையான சாஃப்ட்வேர்கள்தான்னு சொன்னார்."

"ஞானேஷுக்கு கம்பெனியில் தரப்படுகிற அதிகப்படியான 'இம்பார்ட்டன்ஸ்' அங்கே வேலை செய்யற யாருக்காவது 'புரொஃபஷனல் ஜெலஸி'யை உண்டாக்கி, இப்படியொரு கொலையில் போய் முடிய வாய்ப்பிருக்கா மிஸ்டர் ராஜகணேஷ்?"

"அந்தக் கோணத்திலும் விசாரணையை நடத்திக்கிட்டு இருக்கேன் ஸார்."

"இட்ஸ் ஓ.கே... என்கொயரியைக் கொஞ்சம் "ஸ்பீட் அப்' பண்ணுங்க. குற்றவாளியை ஒரு வாரத்துக்குள்ளே நெருங்கிட்டா பரவாயில்லை. இந்த விஷயத்தை ரொம்ப நாளைக்கு மீடியாகிட்டேயிருந்து மறைக்க முடியாது.

எல்லாத்துக்கும் மேலா இது ரிடையர்ட் ஜட்ஜ் பார்த்தசாரதியின் சன்னோட மர்டர் கேஸ்.”

“எனக்கும் நிலைமை புரியுது ஸார்” - சொன்ன ராஜகணேஷ், டி.ஜி.பி-க்கு முன்பாக இருந்த ஃபைலை எடுத்துக்கொண்டு விடைபெற்று வெளியே வந்தார். வராந்தாவில் பாதிதூரம் நடந்திருப்பார்... செல்போன் அழைத்தது. எடுத்து யார் என்று பார்த்துவிட்டு சற்றே பதற்றத்தோடு இடது காதுக்கு ஒற்றினார்.

“சொல்லுங்க செந்தில்குமார்...”

“ஸார்.... நீங்க சந்தேகப்பட்டது சரிதான். நீங்க உடனே புறப்பட்டு அடையார் இந்திரா நகர் கார்ப்பரேஷன் பூங்காவுக்கு வாங்க. நான் மெயின் கேட்ல வெயிட் பண்ணிட்டிருக்கேன்.”

“இதோ, புறப்பட்டேன்!” - சொன்னவர், சில விநாடிகளில் மேஃப்ளவர் மரத்துக்குக் கீழே நின்றிருந்த ஜீப்புக்குள் ஏறினார். முன் இருக்கையில் உட்கார்ந்து அன்றைய காலை பேப்பரைப் புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்த டிரைவர், அவசரமாக மடித்துக்கொண்டே கேட்டார்.

“ஸார்... ஆபீஸுக்கா?”

“இல்லை... அடையார் இந்திரா நகர்ல கார்ப்பரேஷன் பார்க். வண்டி பறக்கணும்!”

டிரைவர், ஜீப்பைக் கிளப்பினார். ஜீப், ரோட்டுக்கு வந்ததும் உண்மையாகவே பறந்தது.

சரியாக இருபது நிமிடம்.

இந்திரா நகரின் மரங்கள் அடர்ந்த பகுதியில் இருந்த அந்த கார்ப்பரேஷன் பார்க்குக்குச் சற்றுத் தள்ளி ஜீப்பை நிறுத்திக்கொண்ட ராஜகணேஷ், கீழே இறங்கி நுழைவு வாயிலை நோக்கி நடந்தார். ஒரு

மரத்துக்குப் பின் மறைவாக நின்றிருந்த க்யூ பிராஞ்ச்சை சேர்ந்த செந்தில்குமார், வேகமாக வெளிப்பட்டு விறைப்பாக சல்யூட் அடித்ததார்.

ராஜகணேஷ் குரலைத் தாழ்த்தினார்.

"என்ன... மீராவும் அந்த இளைஞனும் பார்க்குக்கு உள்ளே போனவங்க இன்னமும் வெளியே வரலையா?"

"வரலை ஸார்... இன்னமும் உள்ளே உட்கார்ந்து பேசிட்டுத்தான் இருக்காங்க."

"மீரா, வீட்டை விட்டு எத்தனை மணிக்கு கிளம்பி வெளியே வந்தா?"

"ரெண்டு மணி நேரத்துக்கு முந்தி ஸார். அவளோட ஸ்கூட்டியை ஃபாலோ பண்ணினேன். மொதல்ல ஒரு பியூட்டி பார்லருக்குப் போனா, அப்புறம் வெல் ஃபிட்னஸ் என்கிற ஒரு டெய்லரிங் மார்ட்டுக் குப் போயிட்டு, இங்கே வந்தா. பார்க் வாசலிலேயே இளைஞர் ஒருத்தர் வெயிட் பண்ணிட்டிருந்தார். ரெண்டு பேரும் உள்ள போனாங்க. இப்ப மறைவிடத்துல உட்கார்ந்து பேசிட்டு இருக்காங்க!"

"வாங்க... போய் மடக்கிடுவோம்!"

இருவரும் உள்ளே போனார்கள்.

பெங்களூரு.

ரிதன்யா தன்னுடைய பெரிய விழிகளால் திவாகரையும் பூங்கொடியையும் மாறி மாறிப் பார்த்தாள்.

"எதையுமே புரியும்படியா பேசிடறது நல்லது. அது என்ன மந்திரக்கோல்?"

"கார்ல போகும்போது சொல்றோம்"

“நோ..! அது என்னன்னு இப்பவே எனக்குத் தெரிஞ்சாகணும். எதுவுமே முன்கூட்டியே தெரிஞ்சாத்தான் என்னால எச்சரிக்கையோடு செயல்பட முடியும். நீங்க நினைக்கிற மாதிரி அந்த யோகானந்தும், அவரோட சன்னும் சாமான்யப்பட்ட நபர்கள் இல்லை. நாம விடற மூச்சுக் காத்தை வெச்சே நாம் எதுக்காக வந்திருக்கோம்னு ஒரு நிமிஷ நேரத்துக்குள்ளே ஸ்கேன் பண்ணிடுவாங்க.”

“நீ அவங்களைப் பார்த்து ரொம்பவும் மிரண்டு போயிருக்கே. அதனாலதான் உனக்கு இந்த பயம்! இன்னிக்குக் காலையில் பத்து மணிக்கு ஒயிட்ஃபீல்டில் இருக்கிற ‘ப்ளஸன்ட் ஓஸன்’ ஸ்டார் ஹோட்டலில் அந்த ரெண்டு பேரும் உன்னைப் பார்த்து, உன் கையில் இருக்கிற மந்திரக்கோலைப் பார்த்து வேர்த்து விறுவிறுத்து உனக்கு முன்ன மண்டிபோட்டு உட்காரப் போறாங்க.”

ரிதன்யா எரிச்சலானாள்.

“இந்த ஓவர் ‘பில்ட் அப்’பெல்லாம் எனக்கு வேண்டாம். அது என்ன மந்திரக்கோல்... நான் மொதல்ல அதைப் பார்க்கணும்.”

திவாகர், பூங்கொடியை ஏறிட்டான்.

“ரொம்பவும் அடம் பிடிக்கிறா... என்ன செய்யலாம்?”

“மந்திரக்கோலைக் காட்டிடலாம்.”

“போய்க் கொண்டா...”

பூங்கொடி தலையசைத்துவிட்டு உள்ளே போய் தன்னுடைய சூட்கேஸைத் திறந்து ஒரு சிறிய பாலீத்தீன் கவரை எடுத்து வந்தாள். ரிதன்யா அதை ஆச்சர்யமாகப் பார்த்துக்கொண்டு இருக்கும்போதே, பூங்கொடி அந்த கவரைப் பிரித்தாள். கவருக்குள்ளேயிருந்து ஒரு ஆரஞ்சு நிற காப்ஸ்யூல் வெளிப்பட்டது. திவாகர் அதைப் பார்த்துக்கொண்டே சொன்னான்.

“இதுதான் நீ கையோடு கொண்டு போகப் போகிற மந்திரக்கோல்.”



“ஏதோ மாத்திரை மாதிரி இருக்கு?”

“மாத்திரை வடிவில் இருக்கிற அப்டேட்டட் பென்ட்ரைவ்... கையில் வாங்கிப் பாரு!”

ரிதன்யா வாங்கிப் பார்த்தாள். ஒரு காப்ஸ்யூல் மாத்திரையைக் காட்டிலும் சற்றே பெரிதாக இருந்தது. ஆரஞ்சு நிற உடம்பில் மெல்லியதாய் கறுப்பு வரிகள்.

“இது எப்படி மந்திரக்கோல்?”

திவாகரின் உதட்டில் ஒரு சிறிய புன்னகை

“இந்த பென்ட்ரைவை யோகானந்த், ரூபேஷ் கிட்டே காட்டி ‘இனி பொறுப்பதில்லை’னு ஒரு வார்த்தை சொன்னா போதும் அந்த ரெண்டு ராஜநாகங்களும் ரெண்டு மண்புழுக்களாய் மாறி உனக்கு முன்ன நெளியும்.”

“என்னால நம்ப முடியலை... இந்த ‘பென்ட்ரைவ்’வுக்குள்ளே என்ன இருக்கு?”

“அது உனக்குத் தெரிய வேண்டியதில்லை. நீ அவங்களை அந்த ஹோட்டலில் மீட் பண்ணும்போது இந்த பென்ட்ரைவைக் காட்டி ‘இனி பொறுப்பதில்லை!’ என்கிற வார்த்தையை மட்டும் சொன்னா போதும்... அதுக்கப்புறம் நீ கேட்கிற கேள்விகளுக்கெல்லாம் ஒழுங்கா பதில் வரும்!”

“இந்த பென்ட்ரைவை அவங்க போட்டுப் பார்க்கணும்னு சொன்னா?”

“சொல்றது என்ன... அவங்க கண்டிப்பா போட்டுப் பார்ப்பாங்க... அதுக்கப்புறம் உனக்கு முன்ன உட்காரக்கூட யோசனை பண்ணுவாங்க.”

“அப்படி ஒரு பயம் அவங்களுக்கு இருக்கிறது உண்மையா இருந்தா, உங்கள்ல யாராவது ஒருத்தர் போய் இந்தப் பென்ட்ரைவைக் காட்டி ‘நள்ளிரவு வானவில்’ பற்றிய விஷயங்களைத் தெரிஞ்சுக்கலாமே?”

“அது எங்களுக்குத் தெரியாதா என்ன? இந்த ‘இனி பொறுப்பதில்லை’ பென்ட்ரைவ் மேட்டர் போலீஸ் வரைக்கும் போயிடுச்சு என்கிற உண்மை அந்த ரெண்டு பேருக்கும் தெரியவரும்போதுதான் நள்ளிரவு வானவில் பற்றிய உண்மைகள் வெளியே வரும். அது தவிர...”

திவாகர் பேசிக்கொண்டிருக்கும்போதே வீட்டுக்கு வெளியே வாசலில் அந்த சத்தம் கேட்டது.

ஏதோ ஒரு வாகனத்தின் இரைச்சல்.

ரிதன்யா தனக்குப் பக்கத்தில் இருந்த ஜன்னலின் திரைச்சீலையை விலக்கி மெள்ள எட்டிப் பார்த்தாள்.

வாசலில் டாக்ஸி நின்றிருக்க, அவளுடைய கணவன் ஹரிகிருஷ்ணன் ஒரு பெரிய சூட்கேஸோடு இறங்கிக்கொண்டிருந்தான்.

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

# நள்ளிரவு வானவில்!

ரிதன்யா ஒட்டுமொத்த உடம்பும் உறைந்து போனவளாய் நின்றிருக்க, திவாகர் அவளுடைய முகமாற்றத்தைப் படித்துவிட்டு ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தான். உடனே முகம் மாறி வியர்த்தான்.

'எ...எ.... என்ன உன் புருஷன் வர்றான்..?'

'அதான் எனக்குப் புரியலை. நேத்து ராத்திரி என்கிட்ட போன்ல பேசும்போது ஃப்ளைட் டிக்கெட் கன்ஃபர்ம் ஆகலைன்னு சொன்னார். இப்படி திடீர்னு புறப்பட்டு வருவார்னு நான் கொஞ்சம்கூட எதிர்பார்க்கலை.'

'இப்ப நீ என்ன பண்ணப்போறே..? நாங்க ரெண்டு பேரும் யார்னு கேட்டா நீ உன் புருஷன்கிட்டே என்ன சொல்லப்போறே?'

'என்ன சொல்லணும்?'

'பூங்கொடி உன் ஃப்ரெண்ட்னு சொல்லு. நான் அவளோட ஹஸ்பண்ட். ஊரிலிருந்து இன்னிக்குக் காலையில்தான் வந்தோம். ரெண்டு நாள் தங்கியிருந்து ஊரைச் சுற்றிப் பார்க்கப் போறோம். இதுதான் உன்னோட பதிலா இருக்கணும். எல்லாத்துக்கும் மேலா உன்னோட நடவடிக்கைகள் இயல்பா இருக்க வேண்டியது அதிமுக்கியம்.'

₹₹அவருக்கு உங்க மேல எந்த ஒரு சந்தேகமும் வராதபடி நடந்துக்கிறேன்... போதுமா?' சொன்ன ரிதன்யா, வேகவேகமாக வீட்டு வாசலை நோக்கிப் போனாள். டாக்ஸியின் டிக்கியிலிருந்து ஒரு ரோலர் சூட்கேஸை இறக்கிக்கொண்டிருந்த ஹரிகிருஷ்ணன் அவளைப் பார்த்து மெலிதாய் புன்முறுவலித்துக்கொண்டே₹₹குட் மார்னிங் மேடம்' என்றான்.

இதயத் துடிப்பு உச்சபட்சத்தில் இருந்தாலும் பதிலுக்குப் புன்னகை செய்த ரிதன்யா கேட்டாள்.



’என்ன, திடீர்னு வந்து நிக்கறீங்க... ஃப்ளைட் டிக்கெட் கன்ஃபர்ம் ஆகலைன்னு சொன்னீங்களே?’

’உனக்கு இப்படியொரு ப்ளஸன்ட் சர்ப்ரைஸ் கொடுக்கத்தான் நேத்திக்கு ராத்திரி பேசும்போது நான் சொல்லலை. ஃப்ளைட் ஒரு மணி நேரம் லேட்... இல்லேன்னா, இன்னும் ஒரு மணி நேரத்துக்கு முன்னாடியே வந்திருப்பேன்’ சொன்ன ஹரிகிருஷ்ணன், டிக்கியிலிருந்து கீழே இறக்கிய ரோலர் சூட்கேஸை ரிதன்யாவுக்குப் பக்கத்தில் வைத்தான். வேறு ஒரு ஏர்பேக்கை எடுத்துத் தோளில் மாட்டிக்கொண்டே சொன்னான்...

’ரிது..! இந்த சூட்கேஸைக் கொண்டுபோய் உள்ளே வை. நான் உடனடியா இப்போ பென்னர்கட்டா போகணும். வீட்டுக்குள்ளே வந்து ஒரு டம்ளர் காபி சாப்பிடக்கூட நேரமில்லை. இதே டாக்ஸியில் நான் கிளம்பறேன்...’

ரிதன்யாவை வியப்பு வாரிச் சுருட்டியது.

’என்னங்க இது... பெங்களூரு மண்ணை மிதிச்சும் மிதிக்காததுமா அப்படியென்ன அவசர வேலை...? ஏதோ கூரியர் ஆள் வந்து ஒரு பார்சல் குடுத்துட்டுக் கிளம்பற மாதிரி கிளம்பறீங்க... மொதல்ல உள்ளே வாங்க. ஒரு அஞ்சு நிமிஷம் உட்கார்ந்துட்டுக் கிளம்பலாம்.’

’ரிது... நான் ஒரு நிமிஷத்தைக்கூட இங்கே வேஸ்ட் பண்ணிட்டிருக்க முடியாது. காரணம், என் கம்பெனியோட இம்மீடியட் பாஸ் ஒரு வெளிநாட்டு புராஜெக்ட் விஷயமா பென்னர்கட்டா வந்து அங்கேயிருக்கிற ’பி கம்ஃபர்ட்’ ஹோட்டலில் ஸ்டே பண்ணியிருக்கார். எனக்கும் அதே ஹோட்டலில் ரூம் போட்டிருக்காங்க. இன்னிக்குச் சாயந்தரம் அஞ்சு மணி வரைக்கும் எனக்கு அங்கே வேலை இருக்கு. அதுக்கப்புறம் நாலஞ்சு நாளைக்கு நான் ஃப்ரீ. இப்ப நின்னு பேசிட்டிருக்க நேரமில்லை. எல்லாத்தையும் சாயந்தரமா வந்து விவரமா சொல்றேன்...!’

ஹரிகிருஷ்ணன் படபடவென்று பேசிக்கொண்டே ஏர்பேக்கோடு டாக்ஸியின் பின்ஸீட்டில் ஏறி உட்கார்ந்தான்.

'என்னங்க... ஒரு டம்ளர் தண்ணியாவது...'

ஹரிகிருஷ்ணன் சிரித்தான்.

'ஒண்ணும் வேண்டாம். என் னோட ஒருநாள் தேவைக்கான எல்லா விஷயங்களும் இந்த ஏர்பேக்ல இருக்கு. நீ மனசைப் போட்டுக் குழப்பிக்க வேண்டாம். அஞ்சு மணிக்கெல்லாம் வந்துடுவேன். ராத்திரி உனக்குப் பிடிச்ச 'வார்ம் கிச்சன்' ரெஸ்டாரன்ட்டுக்குப் போய் டின்னர் சாப்பிடுவோம்.'

ரிதன்யா எந்திரத்தனமாய் தலையாட்டிக் கொண்டு இருக்கும்போதே டாக்ஸி புறப்பட்டுவிட்டது. அவளுடைய முதுக்குக்குப் பின்னால் திவாகரின் சிரிப்பு கலந்த பேச்சுக்குரல் கேட்டது.

'கடவுள் நம்ம பக்கம் இருக்கார் ரிதன்யா. உன்னோட புருஷனுக்கு ஏதோ தலை போகிற முக்கியமான வேலை இருக்கப் போய் கிளம்பிட்டான். வீணா ஒரு பொய்யைச் சொல்லி எங்க ரெண்டு பேரையும் கணவன் மனைவியா அறிமுகப்படுத்த வேண்டிய அவசியமும் இல்லாம போயிடுச்சு. இனி உன் புருஷன் சாயந்தரம் அஞ்சு மணிக்குத்தான் திரும்பி வருவான். அதுக்குள்ள 'நள்ளிரவு வானவில்' எங்க கைக்கு வந்துட்டா, உனக்கு எங்ககிட்டயிருந்து, பரிபூர்ண விடுதலை. இன்னிக்கு ராத்திரி புருஷன் கூட போய் ஹோட்டல்ல 'நைட் டின்னர்' சாப்பிடலாம். நாளைக்குக் காலையில் ஊட்டிக்கு கிளம்பிப் போய் உடம்பு சரியில்லாத குழந்தையைப் பார்க்கலாம்.'

திவாகர் பேசிக்கொண்டிருக்கும்போதே அவனுடைய செல்போன் வெளிச்சமாய் வைப்ரேஷனில் ஒளிர்ந்தது. அழைப்பது யார் என்று பார்த்தான். துபாயிலிருந்து உமர். சற்றே பதற்றத்தோடு பேசினான்.

'என்ன திவாகர்..! போன் பண்ணியிருந்தியா? நான் அப்போ பாத்ரூம்ல இருந்தேன். என்ன விஷயம்?'

'துபாய்ல நான் உனக்கு கொடுத்த வேலையை நீ சரியா பண்ணலை போலிருக்கே..?'

'என்ன சொல்றே?'



'ரிதன்யாவோட புருஷன் ஹரிகிருஷ்ணன் இப்போ எங்கே இருக்கான்?'

'துபாய்ல அவனோட அப்பார்ட்மெண்ட்ல.'

'அப்படீன்னு நீ நினைச்சிட்டிருக்கே!'

'ஏன்... அதுல உனக்கென்ன சந்தேகம்?'

'அந்த ஹரிகிருஷ்ணன் இப்போ பெங்களூர்ல இருக்கான்.'

'நீ என்ன சொல்றே?'

'உண்மையைச் சொல்லிட்டிருக்கேன். நீ எப்படியோ அவனை கோட்டை விட்டுட்டே! அவன் ஃப்ளைட் ஏறி வந்துட்டான்.'

'ஹரிகிருஷ்ணனைக் கண்காணிக்க ஷிஃப்ட் முறையில் ரெண்டு பேரைப் போட்டிருந்தேன். அவங்க எப்படியோ ஏமாந்துட்டாங்க போலிருக்கு. ஸாரி திவாகர்!'

'இனிமே ஸாரி சொல்லி ஒரு பிரயோஜனமும் இல்லை. நீ உடனே புறப்பட்டு பெங்களூரு வந்துரு. நமக்கு இனிமே இங்கேதான் வேலை.'

'பதினோரு மணிக்கு ஃப்ளைட் இருக்கு. ஆனா, அதுல டிக்கெட் கிடைக்குமானு தெரியலை.'

'ட்ரை பண்ணு...' திவாகர் செல்போனை அணைத்துவிட்டு ரிதன்யாவிடம் திரும்பினான்.

'இதோ பார் ரிதன்யா..! உன்னோட புருஷன் துபாயிலிருந்து வந்துட்டதாலே இனிமே காரியங்கள் எனக்கு வேகமா நடந்தாகணும், நாம மூணு பேருமே சீக்கிரம் சாப்பிட்டு ரெடியாகணும். பத்து மணிக்கெல்லாம் ஒயிட்ஃபீல்டில் இருக்கணும். அங்கே 'ப்ளசன்ட் ஓஷன்' ஹோட்டலில் தங்கியிருக்கற யோகானந்த், ரூபேஷை பத்தரை மணிக்குள்ள மீட் பண்ணணும். 'இனி பொறுப்பதில்லை' பென்ட்ரைவைக் காட்டி அடுத்த அரை மணி நேரத்துக்குள்ளே 'நள்ளிரவு வானவில்' சம்பந்தப்பட்ட உண்மைகளை வாங்கணும்.'

ரிதன்யா சில விநாடிகள் மௌனமாய் இருந்துவிட்டுக் கேட்டாள்...'' இந்த 'இனி பொறுப்பதில்லை' பென்ட்ரைவுக்குள்ளே எது மாதிரியான விஷயம் இருக்குன்னு நீ இன்னமும் சொல்லவேயில்லை...'

’அது உனக்கு தேவையில்லாத விஷயம்னு நானும் சொல்லிட்டேன். மீறி நீ பிடிவாதம் பிடிச்சா, நான் அதுக்கப்புறம் வேற மாதிரி ரியாக்ட் பண்ண வேண்டியிருக்கும்’ திவாகர் பேச்சை நிறுத்த, பூங்கொடி தொடர்ந்தாள்...

’என்ன அப்படி பார்க்கிறே..? சாயந்தரம் அஞ்சு மணிக்கு வர்றேன்னு சொல்லிட்டுப் போன உன்னோட புருஷனை என்னிக்குமே வராதபடி செய்ய எங்களால முடியும். இப்ப சொல்லு... உனக்கு இந்த பென்ட்ரைவ் மேட்டர் முக்கியமா... இல்லை... உன் புருஷன் இந்த வீட்டுக்கு வர்றது முக்கியமா..?’

ரிதன்யா பயமாக அவர்களைப் பார்த்தாள்.

’இவர்கள் சாதாரண நபர்கள் கிடையாது. எல்லாவற்றையுமே துல்லியமாக தீர்மானம் செய்து கொண்டு களம் இறங்கியிருக்கிறார்கள். நான் பிடிவாதம் பிடித்தால் இழப்பு எனக்குதான். இவர்கள் என்ன சொல்கிறார்களோ அதைச் செய்துவிட்டுப் போவது உத்தமம்!’

’என்ன மனசுக்குள்ளே பட்டிமன்றம் நடத்தறியா?’

’எனக்கு என்னோட குடும்பம் முக்கியம்.’

’அப்படீன்னா... சீக்கிரமா போய் ரெடி பண்ணு, இன்னும் அரை மணி நேரத்துக்குள்ளே இங்கிருந்து கிளம்பி, பத்து மணிக்குள்ளே ஒயிட்ஃபீல்ட் போய்ச் சேரணும்.’

ரிதன்யா உள்ளே போக, டீபாயின் மேல் சைலன்ட் மோடில் இருந்த அவளுடைய செல்போன் பச்சை நிறமாக ஒளிர்ந்து, ஒரு ’இன்கம்மிங் கால்’ வருவதைக் காட்டியது. திவாகர், பூங்கொடியிடம் குரலைத் தாழ்த்தினான்.

’போன்ல யார்னு பாரு?’

பூங்கொடி செல்போனை எடுத்து டிஸ்ப்ளேயைப் பார்த்துவிட்டு கலவரமாக திவாகரை ஏறிட்டாள்.

’ஊட்டி கான்வென்ட் பிரின்ஸிபால் கூப்பிடறாங்க!’

'விஷயம் என்னன்னு கேளு!'

பூங்கொடி செல்போனை தன் இடதுகாதுக்கு ஒற்றி மெள்ள குரல் கொடுத்தாள்.

'யெஸ்...'

'நான் 'லிட்டில் ரோஸஸ்' கான்வென்ட் பிரின்ஸிபால் மரிய புஷ்பம். ஊட்டியிலிருந்து பேசறேன். நீங்க மதர் ஆஃப் அபிநய்தானே?'

'ஆமா!'

'உங்க சன் அபிநய்க்கு ஃபீவர் குறையவேயில்லை. கொஞ்சம் சீரியஸ் கண்டிஷன். மே பி ஸ்வைன் ஃப்ளூ. கோயம்புத்தூருக்குக் கொண்டுபோய் ஏதாவது ஒரு ஹாஸ்பிடல்ல அட்மிட் பண்ணி ட்ரீட்மெண்ட் தர்றது பெட்டர்னு இங்கேயிருக்கிற டாக்டர்ஸ் சொல்லிட்டாங்க... இன்னும் கொஞ்ச நேரத்துல ஆம்புலன்ஸ்ல புறப்பட்டுப் போறோம். நீங்களும் கோயம்புத்தூர் வந்துட்டா பரவாயில்லை. வந்துடறீங்களா..?'

'வ... வ... வந்துடறேன்!'

'ப்ளைட்ல வந்துடறது பெட்டர்' மறுமுனையில் பிரின்ஸிபால் செல்போனை அணைத்துவிட, பூங்கொடி இறுகிப் போன முகத்தோடு திவாகரை ஏறிட்டாள். அவன் கேட்டான்...

'என்ன?'

பூங்கொடி விஷயத்தைச் சொல்ல, திவாகர் தன் நெற்றியை இடதுகை விரல்களால் பத்து விநாடிகள் வரை தேய்த்துக் கொண்டிருந்துவிட்டு நிமிர்ந்தான்.

'பூங்கொடி!'

'ம்...'

'ரிதன்யாவின் செல்போனிலிருந்து அவளுடைய சிம்கார்டை எடுத்துட்டு நம்மகிட்ட இருக்கிற ஒரு டம்மி சிம்கார்டைப் போட்டுரு!'

சென்னை.

அடையார், இந்திரா நகரின் மரங்கள் அடர்ந்த அந்த கார்ப்பரேஷன் பார்க் நல்ல முறையில் பரா மரிக்கப்படாததன் காரண மாக சற்றே சிதிலமடைந்து காணப்பட்டது. தரை யில் பதிக்கப்பட்டிருந்த சிமெண்ட் சிலாப்கள் உடைந்து போயிருக்க... கமிஷனர் ராஜ கணேஷும் செந்தில் குமாரும் கவனமாக நடை போட்டார்கள்.

பூங்காவில் ஆட்கள் அதிகமில்லை. பார்வைக்குக் கிடைத்த இரண்டொருவரும் பெயின்ட் உதிர்ந்துபோன ஸ்டீல் பெஞ்ச்களில் ஒருக்களித்துப் படுத்திருந்தார்கள். ராஜகணேஷ் நடை போட்டுக்கொண்டே கேட்டார்.

'மீராவும் அந்த இளைஞனும் உங்களைப் பார்த்துடலையே?'

'இல்ல ஸார். நான் ரொம்பவும் ஜாக்கிரதையாத்தான் ரெண்டு பேரையும் ஃபாலோ பண்ணிட்டு வந்தேன். அதோ... அந்த மரத்துக்குப் பின்னாடிதான் அவங்க உட்கார்ந்துட்டிருக்காங்க ஸார்...'

சற்று தூரத்தில் ஒரு பெரிய புங்கைமரம் பூத்துக் குலுங்க, இருவரும் அதை நோக்கி நடந்தார்கள்.

'பையன் எப்படியிருக்கான்?'

'இப்போ சினிமாவில் நடிக்க வர்ற பசங்க மாதிரி அழகா இருக்கான் ஸார்.'

'மீரா மேல நான் சந்தேகப்புள்ளி வெச்சது சரியாப் போச்சு... ஞானேஷோட மரணத்துக்கும் மீராவோட காதலன் பிரணவுக்கும் ஏதோ ஒரு லிங்க் இருக்கு. அவனைக் கொண்டுபோய் லாக்கப்புக்குள்ளே வெச்சு

அடிவயித்துல ரெண்டு மிதி மிதிச்சா போதும்... சகலவிதமான உண்மைகளும் வெளியே வந்துடும்.'

மரத்தைச் சமீபித்தார்கள்.

மீராவின் ஆரஞ்சு நிற துப்பட்டா ஒரு பத்து சதவிதம் காற்றில் பறப்பது தெரிந்தது.

ராஜகணேஷ் மரத் துக்குப் பின்பாக போய் நின்றுகொண்டு மெள்ள எட்டிப் பார்த்தார்.

மீரா கறுப்பு நிற சல்வார் கம்மீஸில் தலை குனிந்தபடி உட்கார்ந்திருக்க, அந்த இளைஞன் நீல நிற ஜீன்ஸ் பேன்ட்டிலும் மஞ்சள் நிற டிஷர்ட்டிலும் ஒரு ₹ஹேண்ட்ஸம் கய்' மாதிரி அவளுக்கு எதிரே சம்மணம் போட்டு உட் கார்ந்து, புற்களின் தலைகளைக் கிள்ளிக் கொண்டிருந்தான்.



அவர்களிடையே எந்தப் பேச்சும் இல்லை. இருவரும் மௌனம் காத்தார்கள். ராஜகணேஷும், செந்தில்குமாரும் மூச்சை அடக்கிக்கொண்டு மரத்தோடு உடம்புகளை ஒட்ட வைத்துக்கொண்டு அப்படியே நின் றார்கள்.

சரியாக ஒரு நிமிஷத்துக்குப் பிறகு அவர்களுடைய மௌனம் கலைந்தது. பேச்சு பிறந்தது.

'அப்புறம்..?' என்றாள் மீரா.

'நீதான் சொல்லணும்' என்றான் அவன்.

'ஏன்... நீ சொன்னா என்னவாம்?'

'இதோ பார் மீரா..! நீதான் போன் பண்ணி என்னைக் கூப்பிட்டே... நான் வந்தேன்.'

'உன்னைப் பார்க்கணும் போலிருந்தது. அதான் போன் பண்ணினேன்.'

’சரி, பார்த்தாச்சில்ல... கிளம்புவோம். இனிமே இது மாதிரி மீட்டிங்கெல்லாம் வேண்டாம். ஞானேஷோட கேஸ் ஒரு முடிவுக்கு வர்ற வரைக்கும் நீயும் நானும் அஞ்ஞாத வாசம் இருக்கணும்; மனசை நம்ம கட்டுப்பாட்டுக்குள்ளே வெச்சுக்கணும். போலீஸ் கண்ணுல நாம பட்டுட்டா அதுக்கப்புறம் நாம சில விபரீத விஷயங்களைச் சந்திக்க வேண்டியிருக்கும்!’

’போலீஸ் பார்வையில் பட்டுட்டீங்களே..!’

சொல்லிக்கொண்டே மரத்தின் மறைவிலிருந்து வெளிப்பட்டார் ராஜகணேஷ்.

நள்ளிரவு வானவில்!

'போலீஸ் பார்வையில் பட்டுட்டீங்களே?' என்று சொல்லிக்கொண்டே மரத்தின் மறைவிலிருந்து ஒரு மினி சிரிப்போடு வெளிப்பட்ட கமிஷனர் ராஜகணேஷைப் பார்த்ததுமே, புல் தரையில் உட்கார்ந்திருந்த மீராவும் அந்த இளைஞனும் உறைந்து போனவர்களாய் ஸ்லோமோஷனில் எழுந்து நின்றார்கள். ஒருவரின் கையை மற்றவர் பற்றிக்கொண்டு வெளிறிப் போன முகங்களோடு பின்வாங்கினார்கள்.

ராஜகணேஷ் அவர்களுக்கு முன்பாக நின்றார்.

"ஸாரி! நீங்க ரெண்டு பேரும் உங்க காதலை வளர்க்கத் தீவிரமா திட்டம் தீட்டிக்கிட்டு இருக்கும்போது நான் வந்து டிஸ்டர்ப் பண்ணிட்டேன்..."

மீரா வெகுவாய் வியர்த்து வழிந்தாள். பொறியில் மாட்டிக்கொண்ட ஒரு எலியின் தவிப்பு கண்களில் தெரிந்தது.

"ஸ... ஸார்... அது வந்து..."

"ஒண்ணும் அவசரமில்லேம்மா... நிதானமா யோசனை பண்ணி நான் நம்பக்கூடிய அளவுக்கு ஒரு பொருத்தமான பொய்யைச் சொல்லு. நான் போயிடறேன்."

மீரா தலை குனிந்து நின்றாள். ராஜகணேஷ் அதே கேலிச்சிரிப்போடு தொடர்ந்தார். "நான் என்னோட போலீஸ் சர்வீஸ்ல எத்தனையோ பசுத்தோல் போர்த்திய புலிகளைப் பார்த்திருக்கிறேன். இன்னிக்குத்தான் புலித்தோல் போர்த்திய பசுவைப் பார்க்கிறேன்."



அதுவரைக்கும் ஒன்றும் பேசாமல் நின்றிருந்த அந்த இளைஞன் இப்போது தயக்கமான குரலில் இடைமறித்தான்.

“ஸார்... மீராவை ப்ளேம் பண்ணாதீங்க! ஞானேஷ் விஷயத்துல என்ன நடந்ததுன்னு தெரியாம நீங்கபாட்டுக்கு...”

அவன் சொல்லி முடிக்கவில்லை... ராஜகணேஷின் எஃகு போன்ற வலதுகை முஷ்டி இளைஞனின் தாடைப் பகுதியை நொறுக்க, அவனுடைய வாய்க்குள் ரத்தம் நிரம்பி வெளியே சில துளிகள் சிதறியது.

முகத்தை இரண்டு கைகளாலும் பொத்திக்கொண்டு வலி தாளாமல் மண்டியிட்டு உட்கார்ந்த அவனை உடன்வந்த போலீஸ் அதிகாரி செந்தில்குமார் சட்டை காலரைப் பிடித்து ஒரு உரித்த கோழியைப் போல்

தூக்கி நிறுத்தி, தன் பங்குக்கு இளைஞனின் மார்பில் பூட்ஸ் காலால் எட்டி உதைத்தார்.

கிட்டத்தட்ட காற்றில் பறந்துபோய் ஒரு புதருக்குப் பக்கத்தில் மல்லாந்து விழுந்த அவனை நோக்கி "அன்வர்" என்று அலறியபடி ஓடினாள் மீரா.

ராஜகணேஷின் முகத்தில் திகைப்பு பரவியது. மீராவிடம் சட்டென்று திரும்பினார்.

"இப்ப... நீ என்ன பேர் சொன்னே, அன்வரா?"

"ஆ... ஆமா..!"

"நீ காதலிச்ச பையன் பேர் பிரணவ் தானே?"

"பொய் சொன்னேன் ஸார்."

"எ... எ... என்னது... பொய் சொன்னியா?"

வாயில் வழியும் ரத்தத்தோடு கீழே விழுந்து கிடந்த அன்வரைத் தூக்கி உட்கார்த்தி வைத்தபடியே ராஜகணேஷை ஏறிட்டாள் மீரா. கண்களில் நீர் மின்னியது.

"ஸ... ஸார்...! ரெண்டு நாளைக்கு முன்னாடி நீங்க உங்க ஆபீஸ்ல வெச்சு என்னோட ஃபேமிலி மெம்பர்ஸுக்கு முன்னாடி பேசும்போது என் காதல் விவகாரத்தை சொல்லும்படியாயிடுச்சு. வேற்று மதத்தைச் சேர்ந்த ஒருத்தரை நான் காதலிக்கிற விஷயம் வெளியே தெரிஞ்சா அம்மாவுக்கும் அப்பாவுக்கும் அதிர்ச்சியா இருக்கும்னுதான் 'பிரணவ்'னு பேரை மாத்திச் சொன்னேன். இன்ஷூரன்ஸ் கம்பெனியில் ஃபீல்ட் ஆபீஸரா வேலை பார்க்கிறதாவும் பொய் சொன்னேன்."

"இவன் அன்வர்ங்கிறதும் பொய் இல்லையே?"

அன்வர் தன் உதட்டோரம் வழிந்த ரத்தத்தைக் கர்ச்சீஃப்பால் ஒற்றிக்கொண்டே தள்ளாடியபடியே எழுந்து நின்று, தன் சட்டை

பாக்கெட்டில் கையை நுழைத்து தன்னுடைய ஐ.டி.கார்டை எடுத்து நீட்டினான். ராஜகணேஷ் அவனை ஒரு எரிச்சல் பார்வையால் நனைத்துக்கொண்டே கார்டை வாய்விட்டுப் படித்தார்.

"ஹெச்.அன்வர், எம்.எஸ்ஸி., கம்ப்யூட்டர் சயின்ஸ், ஹெச்.ஆர்.ஓ., ஃப்யூச்சர் மிராக்கிள், பயனீர் பீப்பிள் இன் எம்.என்.ஸி. சாஃப்ட்வேர்ஸ், ஸ்கை டச் டவர்ஸ், சாணக்யபுரி, டெல்லி."

ராஜகணேஷ் படித்ததைக் கேட்டுவிட்டு செந்தில்குமாரின் புருவங்கள் சில மில்லிமீட்டர் களுக்கு வியப்பில் உயர்ந்தன. "ஸார்! ஞானேஷ் வேலை பார்த்த அதே டெல்லி ஃப்யூச்சர் மிராக்கிள் சாஃப்ட்வேர் கம்பெனியில்தான் இவனும் வேலை பார்த்திருக்கான்!"

ரத்தம் பரவிய பல்வரிசையோடு மெள்ளச் சிரித்தான் அன்வர். "இதுல பொய் சொல்ல என்ன ஸார் இருக்கு. நானும் ஞானேஷும் ஒரே கம்பெனியில்தான் வேலை பார்த்தோம். அவன் புராஜெக்ட்ஸ் க்ரூப் ஹெட். நான் ஹெச்.ஆர்.ஓ. அவனை மாதிரியான ஒரு டேலன்ட்டட் பர்சனை இந்த ஐ.டி. ஃபீல்ட் முழுவதும் தேடினாலும் பார்க்க முடியாது..."

"அதனால்தான் அவன் கொலை செய்யப் பட்டானா?"

"இருக்கலாம்."

"இதோ பார் அன்வர்... போலீஸ் அடி எப்படியிருக்கும்ங்கிறதை நீ இப்போ சாம்பிள் பார்த்திருப்பே... இப்ப நீ பட்டது ரத்தம் வர்ற மாதிரியான அடி. கொஞ்ச நேரம் வலிக்கும். அப்புறம் வலி காணாமல் போயிடும். ஆனா, போலீஸ் லாக்கப்புக்குள்ளே போயிட்டா, ஒரு சொட்டு ரத்தம் வெளியே வராதபடிக்கு அடிப்போம். அந்த அடி வாங்கின பிறகு உனக்கு இருபத்து நாலு மணி நேரமும் மரணவலிதான். தூங்கும்போதுகூட அந்த வலி உனக்குத் தெரியும்" - ராஜகணேஷ் கோபக் குரலில் பேசிக்கொண்டிருக்கும்போதே பக்கவாட்டிலிருந்து மீராவின் குரல் கேட்டது.



“எக்ஸ்க்யூஸ் மீ ஸார்...”

ராஜகணேஷ் திரும்பினார்.

“என்னம்மா... சொல்லு!”

“ஞானேஷ் கொலை செய்யப்பட்ட விஷயத்தில் என்னையும் அன்வரையும் நீங்க சந்தேகப்படறீங்களா..?”

“ஆமா...”

“நாங்க எதுக்காக அவரைக் கொலை பண்ணணும்?”

“அதையும் நீங்கதான் சொல்லணும்.”

“என்னையும் அன்வரையும் நீங்க கொலையாளிகளா உருவகப்படுத்திக்கிட்டு ஞானேஷோட மர்டர் கேஸை இன்வெஸ்டிகேட் பண்ணிட்டுப்போனா, அது உண்மையான குற்றவாளிக்குச் சாதகமாயிடும். அன்வரை அடிக்கிறதனாலயோ என்னை மிரட்டற மாதிரி பேசறதனாலயோ ஒரு சதவிகிதம்கூட உபயோகமில்லை.”

“இப்ப நீ என்ன சொல்ல வர்றே?”

"ஸார்! நான் என்னோட காதலைக் காப் பாத்திக்கிறதுக்காக அன்னிக்கு உங்ககிட்டே ஒரு பொய்யைச் சொன்னேன். நான் என் னோட வாழ்க்கையில் சொன்ன முதல் பொய்யும் அதுதான். கடைசி பொய்யும் அதுதான். ஞானேஷ் கொலை செய்யப்பட்ட விவகாரத்தை நீங்க டிபார்ட்மென்ட் மூலமா இன்வெஸ்டிகேட் பண்ணிட்டு இருக்கீங்க. ஆனா, நானும் அன்வரும் அதை வேற ஒரு கோணத் திலிருந்து டீல் பண்ணிட்டு இருக்கோம்."

ராஜகணேஷ் சுவாரஸ்யமானார்.

"வேற ஒரு கோணமா?"

"யெஸ் ஸார்..." என்றபடி முன்னால் வந்தான் அன்வர். "ஞானேஷைக் கொலை பண்ணினது யார்னு எங்களுக்குத் தெரியாது. ஆனா, அவன் கொலை செய்யப்பட்டதற்கான காரணம் என்னவா இருக்கமுடியும்னு எங்களால சொல்ல முடியும்!"

ராஜகணேஷ் பதற்றமானார்.

"என்ன காரணம்... சொல்லு!"

"AMR."

"அப்படீன்னா..?"

"எ மிட்நைட் ரெயின்போ."

"புரியலை..."

"ஒரு நள்ளிரவு வானவில்!"

பெங்களூரு.

ஒயிட்ஃபீல்டின் சற்றேறக்குறைய மையப் பகுதியில் அந்த 'ப்ளஸன்ட் ஓஷன்' ஹோட்டல் சில ஏக்கர் பரப்பை விழுங்கிவிட்டு வெண்ணிறப் பூச்சில் ஒரு கோட்டையைப் போல் சில்வர் ஓக் மரங்களுக்கு நடுவில்

உட்கார்ந்திருந்தது. காரை சற்றுத் தள்ளி நிறுத்திக் கொண்ட திவாகர் தனக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ரிதன்யாவிடம் திரும்பினான். "ரிதன்யா! நான் சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்கா?"

"இருக்கு!"

"சொல்லு பார்க்கலாம்..."

"நான் என்ன எல்.கே.ஜி. படிக்கிற குழந்தையா?

ஒரு தடவை சொன்னாலே எனக்குப் புரியும்!"

கையில் பிஸ்டலோடு காரின் பின் ஸீட்டில் உட்கார்ந்திருந்த பூங்கொடி ரிதன்யாவின் தலையை மெள்ளத் தட்டினாள். " 'இனி பொறுப்பதில்லை' பென்ட்ரைவை பத்திரமா வெச்சுக்க. ரூம் நெம்பர் 'ஃபைவ் நாட் ஒன்'ல யோகானந்தும் 'ஃபைவ் நாட் டு'ல ரூபேஷும் ஸ்டே பண்ணியிருக்காங்க. நீ போய் பார்க்க வேண்டியது யாரைத் தெரியுமா?"

"தெரியும்... யோகானந்தை...!" - ரிதன்யா எரிச்சலாக சொல்ல, பூங்கொடி தொடர்ந்தாள்... "நீ ஒரு போலீஸ்காரி. உனக்கு எதையும் நாங்க சொல்லிக் கொடுக்க வேண்டியது இல்லை. நீ இப்போ எப்படிப்பட்ட நிலைமையில் இருக்கேங்கிறதையும் ஞாபகம் வெச்சுக்க! உனக்கு ஒரு மணி நேர அவகாசம். அதுக்குள்ளே வேலையை வெற்றிகரமா முடிச்சுட்டு 'நள்ளிரவு வானவில்'லோடு ஹோட்டலை விட்டு வெளியே வந்துடணும்."

ரிதன்யா காரிலிருந்து இறங்கிக்கொண்டு ஹோட்டலின் காம்பவுண்ட் சுவர் ஓரமாக நடந்து, பிரதான கேட் வழியாக உள்ளே போனாள். செக்யூரிட்டி செல்லில் இருந்து வெளிப்பட்ட நீலநிற யூனிஃபார்ம் அணிந்த சென்ட்ரி ஒருவன் தயக்கமாக வழிமறிக்க, ரிதன்யா தன்னுடைய உத்யோக அட்டையைக் காட்டினாள். அவன் சற்றே மிரண்டு பின்வாங்கி பவ்யமாக சொன்னான்... "யூ... ப்ளீஸ்... மேடம்!"

ரிதன்யா ஹோட்டலின் லானை ஒட்டி இருந்த காரிடாரில் நடந்து ராட்சஸ லஸ்தர் விளக்குகளின் வெளிச்சத்தில் குளியல் போட்டுக்கொண்டிருந்த ஒரு குட்டி மைதானம் போன்ற ரிசப்ஷன் ஹாலுக்குள் நுழைந்தாள். அரைவட்ட கண்ணாடி டேபிளுக்குப் பின்னால் மெழுகு பொம்மைகளாய் ரிசப்ஷனிஸ்ட் பெண்கள் மூன்று பேர் தெரிய, ஒருத்தி மட்டும் தன் உறுத் தாத பல் வரிசையைக் காட்டி ஒரு இன்ஸ் டன்ட் சிரிப்போடு "குட் மார்னிங்" என்றாள்.

பதிலுக்கு 'குட்மார்னிங்' சொன்ன ரிதன்யா தெளிவான ஆங்கிலத்தில் அந்தப் பெண்ணிடம் குரலை வெகுவாய் தாழ்த்திக்கொண்டு கேட்டாள்...

"அறை எண் 501-ல் யார் தங்கியிருக்கிறார்கள்?"

அந்த ரிசப்ஷனிஸ்ட் பெண் சிரிப்பு மாறாமல் பேசினாள்.

"ஸாரி! நீங்கள் யார் என்பது தெரியாமல் எங்களுடைய வாடிக்கையாளரின் பெயரைச் சொல்ல எங்களுக்கு அனுமதியில்லை."

ரிதன்யா தன்னுடைய உத்யோக அட்டையைக் காட்ட, அவளுடைய சிரிப்பு சட்டென்று காணாமல் போயிற்று.

"மேடம்! நீங்கள் போலீஸ்?"

"யெஸ்..."

"ஒன் மினிட் மேடம்" என்று சொல்லிவிட்டு தனக்கு முன்பாக இருந்த கம்ப்யூட்டரை மின்னல் வேகத்தில் தட்டிப் பார்த்துவிட்டு "ஒன் மிஸ்டர் யோகானந்த் ஈஸ் ஸ்டேயிங் தேர்" என்றாள்.

"தேங்க்யூ..! நான் அவரைப் பார்க்கப் போகிறேன். நான் வந்திருப்பது அவருக்குத் தெரிய வேண்டாம்!"

"ஓ.கே. மேடம்... ஐ நோ த ப்ரொஸீஜர்ஸ் ஆஃப் போலீஸ்."

ரிதன்யா மறுபடியும் அவளுக்கு ஒரு நன்றியைத் தெரிவித்துவிட்டு பக்கவாட்டில் தெரிந்த லிஃப்ட்டை நோக்கிப் போனாள். காலியாயிருந்த லிஃப்ட்டுக்குள் நுழைந்து ஐந்தாவது மாடிக்குரிய பட்டனை அழுத்தினாள்.

இருபது விநாடிப் பயணம்.

ஐந்தாவது மாடி வந்தது. லிஃப்ட்டிலிருந்து வெளிப்பட்ட ரிதன்யா, அந்தக் கரும்பச்சை கிரானைட் தளத்தில் மெள்ள நடைபோட்டாள். சென்ட்ரலைஸ் செய்யப்பட்ட ஏ.சி... ஹோட் டலின் எல்லாப் பகுதிகளையும் ஜில்லிப்பாய் வைத்திருந்தாலும், ரிதன்யாவின் முன் நெற்றியும் பின் கழுத்தும் வியர்த்து சொதசொதத்தன.

'இனி பொறுப்பதில்லை' பென்ட்ரைவுக்கு யோகானந்தும் ரூபேஷும் எந்த அளவுக்குப் பயப்படுவார்கள்..?'

'ஒருவேளை பயப்படாவிட்டால்..?'

இதயத்துக்குள் படபடப்பாய் யோசித்துக் கொண்டே, அறை எண்களைப் பார்த்தபடி நடந்தாள்.

வராந்தாவின் மையப்பகுதியில் அறை எண் 501 பார்வைக்குக் கிடைத்தது. அறைக்கு முன்பாக போய் நின்று அழைப்பு மணிக்குரிய பட்டனின் மேல் விரலை வைத்தாள்.

அதே விநாடி...

அவளுடைய முதுகில் குரல் கேட்டது.

"என்ன ரிதன்யா.. அப்பாவைப் பார்க்க வந்தியா?"

திரும்பினாள்.

ரூபேஷ்.

*நள்ளிரவு வானவில்!- 16*

*ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்*

# நள்ளிரவு வானவில்!

ரிதன்யாவின் இதயம் ஒரு போர்க்கால முரசாய் மாறியிருக்க, வியர்வை மின்னும் நெற்றியோடும் உலர்ந்துபோன உதடுகளோடும் ரூபேஷை தன் கரிய விழிகளால் பயமாக ஏறிட்டாள்.

ரூபேஷின் உதட்டோரம் ஓர் உயிரில் லாத புன்னகை ஜனித்திருக்க, மெள்ள அவளை நெருங்கினான்.

"என்ன ரிதன்யா... ரெண்டாவது தடவையா படை எடுத்துட்டு வந்துட்டே போலிருக்கு..!"

கலக்கத்தில் இதயம் உதைத்துக் கொண்டாலும், அதன் அடையாளத்தை முகத்தில் சிறிதும் காட்டிக்கொள்ளாமல் ரிதன்யா, ரூபேஷிடம் நிமிர்ந்தாள்.



"உண்மையைத் தெரிஞ்சுக்கிறதுக்காக எத்தனை தடவை படை எடுத்தாலும் தப்பில்லையே..."

“என்ன உண்மை?”

“வேறென்ன... அதே ‘நள்ளிரவு வானவில்’ தான்!”

“சரி... இன்னிக்கு ராத்திரி இதே ஹோட்டலுக்கு சரியா பன்னிரண்டு மணிக்கு வா... ரெண்டு பேரும் இந்த ஹோட்டலின் மொட்டைமாடிக்குப் போய் நள்ளிரவில் வானவில் தெரியுதான்னு பார்ப்போம்.”

“இந்த மாதிரியான கேலிப் பேச்சையெல்லாம் நீ ரொம்ப நேரத்துக்கு என்கிட்டே பேசிட்டிருக்க முடியாது. அதுவுமில்லாமே நான் இப்ப பேச வந்தது உன்னோட அப்பா யோகானந்த்கிட்ட!”

“அவர் ரூம்ல இல்லை...”

“எங்கே போயிருக்கார்?”

“தெரியாது.”

“அப்படீன்னா உன்கிட்டே பேசிட வேண்டியதுதான்!”

“எனக்கும் வெளியே கொஞ்சம் வேலையிருக்கு. நானும் கிளம்பிட்டே இருக்கேன்..!”

“இனி பொறுப்பதில்லை!” என்று சொன்ன ரிதன்யா, ஒரு சின்ன புன்னகையோடு தன் மார்புக்கு குறுக்காக கைகளைக் கட்டிக்கொண்டாள்.

நகர முயன்ற ரூபேஷ், சட்டென்று நின்றான். அவன் முகம் நிறம் மாறியிருந்தது.

“நீ இப்போ என்ன சொன்னே?”

“இனி பொறுப்பதில்லை!”

“இதுக்கு என்ன அர்த்தம்..?”

ரிதன்யா தன்னுடைய கைப்பையைத் திறந்து உள்ளேயிருந்த சிறிய பாலித்தீன் பையை எடுத்தாள். அதற்குள் இருந்த அந்த ஆரஞ்சு நிற காப்ஸ்யூலைக் காட்டினாள்.

"இது என்னன்னு தெரியுதா ரூபேஷ்?"

"ஏ... ஏ... ஏதோ மாத்திரை மாதிரி இருக்கு."

"ஆனா, இது மாத்திரை கிடையாது... ஒரு ஹைலி அப்டேட்டட் பென்ட்ரைவ் என்கிற உண்மை உனக்குத் தெரியும். இந்த பென்ட்ரைவுக்குள்ளே எது மாதிரியான உண்மைகள் தூங்கிட்டிருக்கு என்கிற விபரீதமும், இந்த விபரீதம் வெளிச்சத்துக்கு வந்தா உன்னோட நிர்வாகத்துக்குக் கீழே இயங்கிட்டு இருக்கிற மூணு பெங்களூரு ஐ.டி. கம்பெனிகளும், நாலு சென்னை ஐ.டி. கம்பெனிகளும் ஒரே ராத்திரிக்குள்ளே அதலபாதாளத்துக்குள்ளே போயிடும்ங்கிற உண்மையும் உனக்குத் தெரியும்..!"



ரூபேஷ் இப்போது வியர்வைக் குளியலில் இருந்தான். விழிகளைச் சுழற்றி சுற்றும்முற்றும் ஒரு முறை பார்த்துவிட்டு, "இந்த பென்ட்ரைவ் உன் கைக்கு எப்படி வந்தது?" என்று கேட்டான்.

"வெளியே உனக்கு ஏதோ ஒரு முக்கியமான வேலை இருக்குன்னு சொன்னியே... போயிட்டு வா... அப்புறமா பேசுவோம்!"

"எ... எ... எனக்கு எந்த வேலையும் இல்லை. இப்பவே பேசுவோம். வா... இது என்னோட ரூம்..." தனக்கு எதிரில் இருந்த 502 எண் அறையைக் காட்டினான் ரூபேஷ்.

"உன்னோட அப்பா யோகானந்த் எங்கே?"

"இந்த ஹோட்டலின் ஏழாவது மாடியில் ரூஃப் கார்டனில் உட்கார்ந்து லிக்கர் சாப்பிட்டுக்கிட்டு இருக்கார். அந்த 'இனி பொறுப்பதில்லை' பற்றி நாம பேசுவோம்..." ரூபேஷ் சொல்லிக்கொண்டே தன் கையில் வைத்து இருந்த

சாவியால் 502-ம் எண் அறையின் மேக்னடிக் பூட்டுக்கு விடுதலை கொடுத்தான்.



"நான் இந்த ரூமுக்குள்ளே நுழையறதுக்கு முன்னாடி நீ ஒரு விஷயத்தை தெரிஞ்சுக்கணும்"

"என்ன..?"

"உன்னையும் உன்னோட அப்பாவையும் 'இனி பொறுப்பதில்லை' விஷயமா பார்த்துப் பேச நான் மட்டும் தனியா வரலை?"

"பி... பி... பின்னே..?"

“என்கூட ரெண்டு பேர் வந்திருக்காங்க. ஹோட்டலுக்கு வெளியே கார்ல வெயிட் பண்ணிட்டு இருக்காங்க... நான் ஹோட்டலை விட்டு பத்திரமா வெளியே போகாத பட்சத்தில் அவங்க உங்களுக்கு எதிரா எடுக்கக்கூடிய நடவடிக்கைகள் அவ்வளவு நல்லதா இருக்காது.”
“யா... யார் அவங்க..?”

“அது உனக்குத் தேவையில்லாத விஷயம். அடுத்த ஒரு மணி நேரத்துக்குள்ளே நம்ம பேச்சு வார்த்தை முடியணும்...”

“நீ மொதல்ல உள்ளே வா... உனக்கு எந்த ஒரு பிரச்னையும் வராம நான் பார்த்துக்கிறேன்.”

அறைக்குள் நுழையப் போன ரிதன்யா ரூபேஷிடம் திரும்பினாள். “உன்னோட அப்பா எங்கே இருக்கிறதா சொன்னே?”

“மேலே ரூஃப் கார்டன்ல.”

“அவருக்கு போன் பண்ணி ரூமுக்கு வரச் சொல்லு.”

“அவர் வேண்டாம்... நாமளே பேசி ஒரு முடிவுக்கு வருவோம்.”

“ஸாரி! இந்த ‘இனி பொறுப்பதில்லை’ விஷயத்தை உங்க ரெண்டு பேருக்கும் முன்னாடி பேசறதுதான் சரியா இருக்கும்னு நினைக்கிறேன். ஒரு மணி நேரத்துக்குள்ளே எனக்கு வேலை முடியணும்...”

“அவர் இப்போதைக்கு கீழே வர மாட்டார். அவரைப் பார்க்கணும்னா நாம்தான் ரூஃப் கார்டனுக்கு போகணும்!”

“போகலாம்...” என்றாள் ரிதன்யா எங்கோ பார்த்துக்கொண்டு.

ரூபேஷ் எரிச்சலோடு தன்னுடைய அறைக்கதவை மறுபடியும் லாக் செய்தான். “வா... போகலாம்!”

இருவரும் காரிடாரில் நடந்து காலியாக இருந்த லிஃப்ட்டுக்கு வந்து ஏழாவது மாடியில் இருந்த ரூஃப் கார்டனுக்குள் நுழைந்தார்கள்.

ரூஃப் கார்டன்... ஏராளமான மணி ப்ளான்ட் கொடிகளோடும் தொட்டிகளில் வளர்க்கப்பட்ட ஷேடோ குரோட்டன்ஸ் செடிகளோடும் ஒரு செயற்கையான இயற்கையோடு பார்வைக்குக் கிடைத்தது. காற்றில் ஊதுவத்தி புகை இழைகிற மாதிரியான தினுசில் வயலின் இசை. அந்தக் காலை நேரத்தில் ரூஃப் கார்டன் பாரில் யாரும் இல்லை. யோகானந்த் மட்டும் அரையிருட்டான ஒரு மூலையோர மேஜையில் முதுகைக் காட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தார். அவருக்கு முன்னால் உயர்ந்த ஜாதியைச் சேர்ந்த வெளிநாட்டு மதுபான பாட்டில் ஒன்று பொன்னிற திரவத்தோடு பளபளத்தது. பேரர் ஒருவர் மதுபாட்டில்கள் ராணுவ ஒழுங்கோடு அணிவகுத்திருந்த ஷெல்ஃபின் கண்ணாடி உடம்பை பாலீஷ் துணியால் தேய்த்துக்கொண்டிருந்தார்.

ரிதன்யா நடந்துகொண்டே ரூபேஷிடம் கேட்டாள்... "உன் அப்பாகிட்டே விஷயத்தை நீ சொல்றியா... இல்ல, நான் சொல்லட்டுமா?"

"நானே சொல்றேன்!"

"ஹோட்டலுக்கு வெளியே ரெண்டு பேர் கார்ல வெயிட் பண்ணிட்டிருக்காங்க என்கிற விஷயம் மனசுக்குள்ளே இருக்கட்டும்!"

"நிலைமை எனக்குப் புரியுது. நீ மறுபடியும் மறுபடியும் அதை எனக்கு ஞாபகப்படுத்திக்கிட்டு இருக்க வேண்டிய அவசியம் இல்லை..." - ரூபேஷ் குரலைத் தாழ்த்தி கோபமான குரலில் சொல்லிவிட்டு, யோகானந்தை நெருங்கினான்.

"அப்பா..!"

அவரிடமிருந்து பதில் வராமல் போகவே, ரூபேஷ் அவருக்கு எதிரில் போய் நின்றான்.

"அப்பா... மறுபடியும் சைபர் க்ரைமிலிருந்து அந்த ரிதன்யா வந்து..." - பேசிக் கொண்டே போனவனின் பேச்சு சட்டென்று அறுந்து போக, அவனுடைய கண்ணின் பாவைகள் உறைந்தன.

நாற்காலியில் இயல்பாக உட்கார்ந்திருந்த யோகானந் தின் தலை ஒரு பக்கமாக சாய்ந்திருந்தது. நாசித் துவாரங் களிலும், கடைவாய் ஓரத்திலும் ரத்த இழைகள் வழிந்து இருக்க, விழிகள் திறந்த நிலையில் இறந்து போயிருந்தார்.

சென்னை.

போலீஸ் கமிஷனர் ராஜ கணேஷ் தன்னுடைய அலுவலக அறையில் க்யூ பிராஞ்ச் ஆபீஸர் செந்தில்குமாரோடு உட்கார்ந்திருக்க, எதிரில் இருந்த நாற்காலிகளில் அன்வரும் மீராவும் இருள் கப்பிய முகங்களோடு தெரிந் தார்கள். ராஜகணேஷ் அடித்ததன் காரணமாக அன்வரின் உதடுகளும் மூக்கும் வீங்கியிருந்தன. முதலுதவி செய்ததற்கு அடையாளமாக தாடையில் பிளாஸ்டர் ஒன்று ஒட்டப்பட்டிருந்தது.

“அது என்ன வார்த்தை... நள்ளிரவு வானவில்லா..?”

- ராஜகணேஷ் ஒரு கூர்மையான பார்வையோடு கேட்க, அன்வர் தலையாட்டினான்.

“ஆமா ஸார்...”

“அதுக்கு என்ன அர்த்தம்?”

“அது ஒரு கோட்வேர்ட் ஸார்... நான் வொர்க் பண்ற ‘ஃப்யூச்சர் மிராக்கிள்’ ஐ.டி.கம்பெனியில் ஞானேஷ் தலைமையில் ஒரு ப்ராஜெக்ட்டை உருவாக்கி னாங்க. அந்த ப்ராஜெக்ட்டுக்கு ஞானேஷ் வெச்ச பேர்தான் ஏ.எம்.ஆர். ‘ஏ மிட்நைட் ரெயின்போ’. அதாவது நள்ளிரவு வானவில். இப்படியொரு பேரை வெக்கிறதுக்கு இன் னொரு காரணமும் இருக்கு ஸார்...”

“என்ன காரணம்?”

“அந்த ப்ராஜெக்ட்டை உருவாக்கினவங்க, ஞானேஷையும் சேர்த்து, மொத்தம் ஏழு பேர். ஏழு பேரில் ஞானேஷைத் தவிர மற்ற ஆறு பேரும் பெண்கள். ப்ராஜெக்ட் பெரிய அளவில் வெற்றி பெற அந்த ஆறு பெண்களும்

ஞானேஷுக்கு உறுதுணையா இருந்தாங்க. அந்தப் பெண்களின் பெயர்களில் இருந்த முதல் எழுத்துகளையும் ஞானேஷ் பெயரில் இருந்த முதல் எழுத்தையும் சேர்த்து எழுதிப் பார்த்தபோது 'VIBGYOR'னு வந்தது. ஒரு வானவில்லோட ஏழு நிறங்களை குறிக்கிற வார்த்தைதான் விப்ஜியார். இதையே ஒரு காரணமா வெச்சு அவங்க உருவாக்கின ப்ராஜெக்ட்டுக்கு 'நள்ளிரவு வானவில்'னு பெயர் சூட்டி அதையே கோட்வேர்டாகவும் வெச்சுக்கிட்டாங்க... இது வெளியே யாருக்கும் தெரியாது. ஞானேஷ் எனக்கு க்ளோஸ் ஃப்ரெண்டா இருந்ததால என்கிட்ட மட்டும் ஒரு தடவை சொன்னான்."

"அந்த ஆறு பெண்களோட பேர் என்ன?"

"வினயா, இந்துவதனா, பிருந்தா, யாமினி, ஓமனா, ராகவி..!"

அன்வர் சொன்ன பெயர்களை எல்லாம் ஒரு தாளில் குறித்துக்கொண்ட ராஜகணேஷ் அந்தப் பெயர்களில் உள்ள முதல் எழுத்துக்களை எடுத்து எழுதிப் பார்த்துவிட்டு கேட்டார்.

"இப்போ ஞானேஷ் உயிரோடு இல்லை என்கிற விஷயம் இந்த ஆறு பெண்களுக்கும் தெரியுமா...?'

அன்வர் மௌனமாக இருந்தான். மீரா குறுக்கிட்டுச் சொன்னாள்... "இந்த ஆறு பேரும் உயிரோடு இருந்தாத்தானே ஸார் ஞானேஷ் இறந்தது அவங்களுக்குத் தெரியும்..!"

ராஜகணேஷின் இரண்டு புருவங்களும் சில மில்லி மீட்டர்கள் உயர்ந்து, சில விநாடிகள் அப்படியே நின்றன.

"என்னது... அந்த ஆறு பெண்களும் உயிரோடு இல்லையா... நீ என்னம்மா சொல்றே..?"

“உண்மையைச் சொல்லிட்டிருக்கேன் ஸார்...” - சொன்ன மீரா, அன்வரிடம் இருந்த செல்போனை பறித்து ‘வாட்ஸ்அப்’ ஆப்ஷனுக்குப் போய் ஒரு வீடியோ பதிவை உயிர்ப்பித்தாள். ராஜகணேஷிடம் நீட்டினாள்.

அது ஒரு தொலைக்காட்சியின் செய்தி வாசிப்பு. அதன் மேல் விரலை வைக்க பதிவு உயிர் பெற்றது. நியூஸ் ரீடர் பெண்மணி நேர்ப்பார்வை பார்த்துக்கொண்டு செய்தி வாசித்தாள்.

“டெல்லி மென்பொருள் கம்பெனி ஒன்றில் பணியாற்றும் தமிழ்நாட்டைச் சேர்ந்த ஆறு இளம் பெண்கள் உதகை மலர்க்கண்காட்சியைப் பார்த்துவிட்டு திரும்பும் வழியில் பர்லியாறு அருகே கொண்டை ஊசி வளைவில் வேன் திரும்பும்போது தடுப்புச் சுவரை உடைத்துக் கொண்டு நூறடி ஆழப் பள்ளத்தில் விழுந்ததில் பரிதாபமாக உயிரிழந்தனர். இறந்தவர்கள் அனைவரும் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. வேனை ஓட்டிய டிரைவர் குமாரவேல் படுகாயங்களுடன் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்.”

செய்தி வாசிப்புக்குப் பிறகு பள்ளத்தில் உருண்டு கிடந்த உருக்குலைந்த வேனும், சாலையோரமாக கிடத்தப்பட்டிருந்த ஆறு பெண்களின் ரத்தம் தோய்ந்த உடல்களும் போட்டோ பதிவுகளாய் பார்வைக்குக் கிடைக்க, ராஜகணேஷ் ஒரு கனமான கவலையோடு நெற்றியைத் தேய்த்தார்.

“ஞானஷோட மரணத்துக்குப் பின்னாடி இப்படியொரு பரிதாபமான ஃப்ளாஷ்பேக் வேற இருக்கா... இந்த விபத்து எப்ப நடந்தது?”

“போன வருஷம் மே மாசம் ஸார்... அந்தச் சமயத்துல அதை எல்லாருமே விபத்துன்னு நம்பிட்டிருந்தபோது ஞானேஷ் மட்டும் என்கிட்டே ‘அது விபத்து கிடையாது... யாரோ திட்டம் போட்டு ஆறு பேரையும் தீர்த்துக்கட்டியிருக்காங்க’ன்னு சொல்லிட்டிருந்தார்...”
“யார் அந்த யாரோ?”

“ஞானேஷ் சொன்னான் ஸார்..!”

“யாரு..?”

“சொன்னா நம்ப மாட்டீங்க ஸார்..!”

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

# நள்ளிரவு வானவில்!

**சென்னை...** போலீஸ் ஹெட்குவார்ட்டர்ஸ்.

காலை பதினோரு மணி. 'இன் கேமரா' செல் என்று அழைக்கப்படும் அந்தச் சிறிய கான்ஃபரன்ஸ் ஹாலின் நீள்வட்ட மேஜைக்குப் பின்னால் போலீஸ் அதிகாரிகள் நிமிர்ந்த கோடுகளாய் உட்கார்ந்திருக்க,

டி.ஜி.பி. கோகுலகிருஷ்ணன் தனக்கு முன்பாக நீட்டிக்கொண்டிருந்த சிறிய மைக்கில் கவலையும் கோபமும் கலந்த குரலில் பேசிக்கொண்டிருந்தார்.



''ரிட்டையர்ட் ஜட்ஜின் ஒரே மகன் ஞானேஷ் கொலை செய்யப்பட்டு, அவனுடைய அஸ்தியை ஒரு மண்சட்டியில் போட்டு மீராவின் வீட்டு மொட்டை மாடியில் வைக்கப்பட்ட சம்பவத்தைத் தொடர்ந்து இன்னிக்கு வரைக்கும் நடந்த அதன் தொடர்பான சம்பவங்களைப் பார்க்கும்போது ஒரு பக்கம் மிரட்சியாகவும், இன்னொரு பக்கம் கொஞ்சம் பயமாகவும் இருக்கு. இது ஒரு சைபர் க்ரைம் பிராஞ்ச் சம்பந்தப்பட்ட ஹைலி சோஃபிஸ்டிகேட்டட் க்ரைம். போலீஸ் கமிஷனர் ராஜகணேஷ் இந்த வழக்கில் தானே நேரடியான இன்வெஸ்டிகேஷனில் இறங்கி, பல உண்மைகளை வெளியே கொண்டு வந்திருக்கார். இந்த உண்மைகளுக்குள்ளே உறைந்து போயிருக்கிற ஒரு முக்கியமான விஷயம்... 'மிட் நைட் ரெயின்போ'. அதை தமிழில் சொல்றதாயிருந்தா ₹நள்ளிரவு வானவில்'. இது ஒரு ப்ராஜெக்ட். டெல்லியில் இருக்கும் சாஃப்ட்வேர் கம்பெனியான 'ஃப்யூச்சர் மிராக்கிள்' அங்கே ₹குரூப் ஹெட்'டாக பணியாற்றிய ஞானேஷ் மூலம் லான்ச் பண்ணியிருக்கு. ஞானேஷ் கொலை செய்யப்பட்டு, ஒரு மண்சட்டியில் அஸ்தியாக வந்ததற்குக் காரணமே இந்த ₹நள்ளிரவு வானவில்' ப்ராஜெக்ட்தான்னு மீராவும் அன்வரும் தங்களோட ஸ்டேட்மெண்ட்டில் சொல்லியிருக்காங்க. அது மட்டுமில்லை, அவங்க சொல்லியிருக்கிற இன்னொரு விஷயம் நம்மை அதிர்ச்சியின் எல்லைக்கே கொண்டு போய் நிக்க வெச்சிருக்கு. அதைப் பத்தி பேசறதுக்கு முன்னாடி போன வருஷம் ஊட்டி மலைப் பாதையில் நடந்த ஒரு வேன் விபத்தைப் பற்றிய செய்தி அறிக்கையை இப்போ வீடியோ காட்சியாக பார்க்கப் போறோம்' சொன்னவர், தன் முன்னே இருந்த ரிமோட் கன்ட்ரோலை எடுத்து எதிர் சுவரில் பதிக்கப்பட்டு இருந்த டி.வி. திரையை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்து டி.வி.டி. ஆப்ஷனைக் 'கிளிக்' செய்தார்.

டி.வி. திரை உயிர் பிடித்து நியூஸ் ரீடர் பெண்மணியின் வாசிப்பைக் காட்டியது.

''டெல்லி மென்பொருள் கம்பெனி ஒன்றில் பணியாற்றும் ஆறு இளம் பெண்கள், உதகை மலர்க்கண்காட்சியைப் பார்த்துவிட்டு திரும்பும் வழியில், பர்லியாறு அருகே கொண்டை ஊசி வளைவில் வேன் திரும்பும்போது

தடுப்புச் சுவரை உடைத்துக்கொண்டு நூறடி ஆழப் பள்ளத்தில் விழுந்ததில் பரிதாபமாக உயிரிழந்தனர். இவர்கள் அனைவரும் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. வேனை ஓட்டிய டிரைவர் குமாரவேல் படுகாயங்களுடன் மருத்துவமனையில் அனுமதிக்கப்-பட்டுள்ளார்.'

செய்தி வாசிப்புக்கு பிறகு பள்ளத்தில் உருண்டு கிடந்த உருக்குலைந்த வேனும், சாலையோரமாக கிடத்தப்பட்டிருந்த ஆறு பெண்களின் ரத்தம் தோய்ந்த உடல்களும் போட்டோ பதிவுகளாக பார்வைக்குக் கிடைத்தன.

இப்போது டி.ஜி.பிக்கு இடது பக்க நாற்காலியில் உட்கார்ந்திருந்த கமிஷனர் ராஜகணேஷ் தனக்கு முன்பாக இருந்த மைக்கில் பேசினார்.

'இந்தச் சம்பவம் நடந்து ஒரு வருடம் ஆகிவிட்டது. இன்றளவும் மீடியாக்களின் பார்வையிலும், நம்முடைய டிபார்ட்மென்ட்டின் பார்வையிலும் இது ஒரு விபத்தாகத்தான் கருதப்பட்டு வந்திருக்கு... ஆனால், ஞானேஷ் மட்டும் இதை ஒரு விபத்து என்று நம்பாமல் திட்டமிட்டு நடத்தப்பட்ட ஒரு கொலைச் சம்பவமாகவே நினைத்து வந்திருக்கிறார். தான் நினைத்ததை போலீஸிலும், தான் வேலை செய்யும் ஐ.டி. கம்பெனியின் மேல் அதிகாரிகளிடமும் சொல்லியிருக்கார். ஆனால், அதற்குரிய ஆதாரங்களை அவரால காட்ட முடியாததால நடந்தது விபத்துதான்னு கன்ஃபார்ம் ஆயிடுச்சு. 'நள்ளிரவு வானவில்' ப்ராஜெக்ட்டுக்கு உறுதுணையாய் இருந்த வினயா, இந்துவதனா, பிருந்தா, யாமினி, ஓமனா, ராகவி இந்த ஆறு பெண்களும் இறந்துட்ட அதிர்ச்சியில் சில நாட்கள் விரக்தியான மன நிலையில் இருந்த ஞானேஷ் அதுக்கப்புறம் மனசைத் தேத்திக்கிட்டு ப்ராஜெக்ட்டை வெற்றிகரமா முடிச்சிருக்கார்..!'

சி.பி.சி.ஐ.டி. டிபார்ட்மென்ட்டைச் சேர்ந்த அதிகாரிகளில் ஒருவர் மைக் அருகே குனிந்து ராஜகணேஷைப் பார்த்தபடி அந்தக் கேள்வியைக் கேட்டார்...

₹₹₹நள்ளிரவு வானவில்' என்கிற அந்த ப்ராஜெக்ட்டை முடக்குவதற்காகவோ அல்லது அதைக் கைப்பற்றுவதற்காகவோ ஞானேஷும், இந்த ஆறு

பெண்களும் கொலை செய்யப்பட்டிருக்கலாம்னு நீங்க நினைக்கறீங்களா ஸார்..?'

'மே பி... என்னுடைய கெஸ் வொர்க்கும் அதுதான்.'

'அது எது மாதிரியான ப்ராஜெக்ட்..?'

'நாட் நோன்... பட் சம்திங் அப்நார்மல். நான் இப்படிச் சொல்லக் காரணம், ஞானேஷ் தன்னோட ஜர்னி ஷெட்யூலிலிருந்து மாறுபட்டு டெல்லியிலிருந்து ரெண்டு நாளைக்கு முன்னாடியே சென்னை வந்து அவரோட ஃப்ரெண்ட் மணிகண்டன் வீட்ல தங்கியிருந்து அடையார் 'ஸ்கை வ்யூ' ஹோட்டலில் நடந்த ஒரு ஹைடெக் மீட்டிங்கை அட்டெண்ட் பண்ணியிருக்கார். அங்கே யாரோ சிலரை சந்தித்துப் பேசியிருக்கார். அதுக்கப்புறம் நான் அந்த விஷயத்தை ஸ்மெல் பண்ணி அந்த ஹோட்டலுக்குப் போய் ஒரு இன்வெஸ்டிகேஷனை நடத்தினேன். பட், இன் த மீன்வைல்... ஞானேஷின் மரணத்துக்குக் காரணமான எதிரிகள் ஹோட்டல் மானேஜர் புவனேந்திரனுக்கு பணத்தைக் கொடுத்து சி.சி.டி.வி. கேமராவில் பதிவாகியிருந்த ஞானேஷ் சம்பந்தப்பட்ட பதிவுகளை டெலிட் பண்ணிட்டாங்க..!'

'ஸார்! நான் என்னோட அஸம்ஷனைச் சொல்லலாமா..?'

''ப்ளீஸ்...''

'ஞானேஷ் உருவாக்கின அந்த ப்ராஜெக்ட்டுக்கு எதிரான நபர்கள் அவர் வேலை பார்க்கும் கம்பெனியிலேயே ஏன் இருக்கக் கூடாது?'

'அப்படியிருக்க வாய்ப்பில்லைங்கிறது அன்வரோட ஸ்டேட்மென்ட். அன்வர் அந்த கம்பெனியில் ஹெச்.ஆர்.ஓவாக இருப்பதால் அந்த ஸ்டேட்மென்ட்டை நம்ப வேண்டியிருக்கு... அதுவுமில்லாமே ஞானேஷ், அன்வர்கிட்டே 'ஊட்டியில் நடந்தது விபத்து கிடையாது. யாரோ திட்டம் போட்டு 'நள்ளிரவு வானவில்' ப்ராஜெக்ட் உருவாக காரணமாயிருந்த ஆறு

பெண்களையும் தீர்த்து கட்டியிருக்காங்க'னு சொல்லியிருக்கார். 'யார் அந்த யாரோ'னு அன்வர் கேட்டதுக்கு ஞானேஷ் பதிலும் சொல்லியிருக்கார்...'

'என்ன பதில்..?'

கமிஷனர் ராஜகணேஷ் டி.ஜி.பி. கோகுலகிருஷ்ணனிடம் திரும்பி தயக்கமான குரலில் கேட்டார்... 'ஸார்! அது யார்னு சொல்லிடலாமா?'

'அதை அனௌன்ஸ் பண்ணத்தானே, இந்த 'இன் கேமரா' செல் மீட்டிங்கை கூட்டியிருக்கோம்... பேரைச் சொல்லிடுங்க... அதுக்கப்புறம் அது எவ்வளவு தூரம் உண்மை என்கிற விஷயத்தை டிஸ்கஸ் பண்ணிடுவோம்.' ராஜகணேஷ் மைக்கை சரியாக நிமிர்த்தி வைத்துக்கொண்டு பேச ஆரம்பித்தார்.

'ஃப்யூச்சர் மிராக்கிள் என்கிற பெயரில் சென்னையிலும் பெங்களூரிலும் இயங்கி வருகிற ஐ.டி. கம்பெனியைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டு இருக்கலாம். அந்தக் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர் யோகானந்த் தொழில் ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும் வெரி பவர்ஃபுல் பர்சன். ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி 'உத்யோக் ரத்னா' விருதையும் சென்ற வருஷம் பத்ம விருதையும் பிரசிடென்ட் கையால் வாங்கியவர். மனித வள மேம்பாட்டுத் துறை அமைச்சரை முன்கூட்டியே அப்பாயின்ட்மென்ட் இல்லாமல் எப்போது வேண்டு மானாலும் நேரடியாக சென்று பார்க்கக் கூடிய அளவுக்கு செல்வாக்கு படைத்தவர். அவருக்கு ஒரு மகன். பெயர் ரூபேஷ். கம்பெனியின் எக்ஸிக்யூடிவ் மானேஜிங் டைரக்டர் இந்த ரூபேஷ்தான். அப்பாவும் மகனும், மாசத்துல பத்து நாளாவது வெளிநாட்லதான் இருப்பாங்க. பெரும்பாலும் ஹாங்காங். நம்ம நாட்டில் இருக்கிற ஐ.டி. கம்பெனிகள் எந்த ஒரு ப்ராஜக்ட்டை தயாரிக்க முயற்சி பண்ணினாலும் அது பற்றிய விவரங்கள் அந்த விநாடியே அப்பாவுக்கும் மகனுக்கும் போயிடுமாம். அது ஒரு சாதாரண ப்ராஜெக்ட்டா... இல்லை, அசாதாரணமான ஒண்ணான்னு உடனடியா தரம் பிரிச்சு, அது நமக்கு தேவையா இல்லையான்னு முடிவு பண்ணிடுவாங்களாம். ப்ராஜக்ட்

அசாதாரணமானதுன்னு தெரியவந்தா அதை எந்த வழியிலாவது தங்களோட கட்டுப்பாட்டுக்குள்ளே கொண்டு வந்துடுவாங்களாம். இந்த 'நள்ளிரவு வானவில்' ப்ராஜெக்ட்டும் அவங்க பார்வையில் படப்போய்தான் இவ்வளவு அசம்பாவிதங்கள்.'



கமிஷனர் ராஜகணேஷ் பேச்சை சற்றே நிறுத்த ஒரு போலீஸ் அதிகாரி கேட்டார்....

'இப்ப நீங்க சொன்னதெல்லாம் அந்த அன்வர் கொடுத்த ஸ்டேட்மென்ட்தானே..?'

'ஆமா...'

'அது ஏன் ஒரு பொய்யான ஸ்டேட்மென்ட்டா இருக்கக் கூடாது... நான் இப்படி சொல்றதுக்குக் காரணம், யோகானந்த் சாதாரண நபர் கிடையாது. கிட்டத்தட்ட அவர் ஒரு கேபினட் மந்திரியின் அந்தஸ்தில் இருப்பவர்.'

'அவர் யாரா இருந்தா நமக்கென்ன..? தப்பு பண்ணினவங்க யாராயிருந்தாலும் சட்டத்துக்கு முன்னாடி ஒரு நாய்க்குட்டிதான்!

யோகானந்த் தங்கமா இல்லை தகரமானு உரசிப் பார்க்கத்தான் இன்னும் ஒரு மணி நேரத்துக்குள்ளே நான் பெங்களூரு கிளம்பறேன். இந்த 'நள்ளிரவு வானவில்' மேட்டர் ஒரு விபரீதமான விஷயம். ஏற்கெனவே ஏழு பேர் இறந்து போயிருக்காங்க... இதை இன்வெஸ்டிகேட் பண்ணப் போகிற என்னுடைய உயிருக்கும் உத்தரவாதம் கிடையாது. ஆனா, உண்மையான குற்றவாளிகளோடு பெங்களூரிலிருந்து சென்னைக்குத் திரும்புவேன் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கு.'

ராஜகணேஷ் பேசிவிட்டு உட்கார்ந்தார். அந்த கான்ஃப்ரன்ஸ் அறையில் கனத்த நிசப்தம் நிலவியது.

பெங்களூரு.

அந்த ஹோட்டலின் ரூஃப் கார்டன் ரெஸ்டாரன்ட்டின் அரையிருட்டான மூலையோர மேஜைக்கு சாய்ந்தபடி உயிரை விட்டிருந்த யோகானந்தைப் பார்த்து உறைந்து போன ரிதன்யாவும் ரூபேஷும் சகஜமான நிலைமைக்குத் திரும்ப அரை நிமிஷ அவகாசம் தேவைப்பட்டது.

ரூபேஷ், அப்பாவை நெருங்கி அவருடைய தோளைப் பற்றி மெள்ள உலுக்கினான். அவருடைய உதட்டோரம் வழிந்துகொண்டிருந்த ரத்தம் சில துளிகளாய் காற்றில் சிதறியது. அவர் நாசியருகே கை வைத்து சுவாசத்தை சரிபார்த்தவன், முகம் இருண்டு போனவனாய் ரிதன்யாவிடம் திரும்பினான்.

'அப்பா உயிரோடு இல்லை!'

'எப்படி..?'

'ஸீம்ஸ் டு பி மர்டர்... யாரோ இங்கே வந்திருக்காங்க...' சொன்ன ரூபேஷ் ரெஸ்டாரன்ட்டின் இன்னொரு மூலையில் மதுபாட்டில்கள் அணிவகுத்திருந்த கண்ணாடி அலமாரியை பாலீஷ் துணியால் துடைத்துக்கொண்டிருந்த அந்த சீருடை பணியாளை தன் தொண்டை தெறிக்கக் கூப்பிட்டான்.

'பேரர்...'

அரண்டு போய் திரும்பிய அவன் வேக வேகமாய் ஓடி வந்தான். ரூபேஷின் ஆவேசத்தைப் பார்த்து பயந்து போனவனாய் சற்றுத் தள்ளியே நின்றான்.

'ஸ... ஸ... ஸார்..!'

'நீ இங்கே எவ்வளவு நேரமா இருக்கே?'

கன்னடம் கலந்த தமிழில் 'அரை மணி நேரமா ஸார்...' என்றான்.

யோகானந்தைச் சுட்டிக்காட்டியபடி கேட்டான் ரூபேஷ்... 'இவரைத் தவிர இந்த ரெஸ்டாரன்ட்ல வேற யார் யாரெல்லாம் இருந்தாங்க..?'

'யாருமே இல்ல ஸார்... இவர் மட்டும்தான் அரை மணி நேரமா இருக்கார். என்கிட்ட ஷிவாஸ் ரீகல் விஸ்கி கேட்டார். கொடுத்தேன். ஏன் ஸார்... என்னாச்சு?'

'நடுவுல உன்னைக் கூப்பிட்டாரா?'

'இல்ல ஸார். நான்தான் ஒருதடவை வந்து ஏதாவது வேணுமா ஸார்'னு கேட்டேன். அவர் சைகையாலேயே ஒண்ணும் வேண்டாம்னு சொல்லி அனுப்பிட்டார். என்னாச்சு ஸார்... அவருக்கு? லிக்கர் அதிகமா கன்ஸ்யூம் பண்ணி ஏதாவது பிரச்னையா..?'

'ஒண்ணுமில்லை... நீ போ!' ரூபேஷ் பேரரை அனுப்பிவிட்டு, ரிதன்யாவிடம் திரும்பினான்.

'இப்ப என்ன பண்றது..?'

'முறைப்படி போலீஸுக்கு இன்ஃபார்ம் பண்ணிட வேண்டியதுதான். ஆனா, அதுக்கு முன்னாடி ஹோட்டலுக்கு வெளியே எனக்காக காத்திட்டிருக்கிற திவாகருக்கும், பூங்கொடிக்கும் விஷயத்தை சொல்லிடறது நல்லது. ஏன்னா, அவங்க எதிர்பார்க்கிற 'நள்ளிரவு வானவில்' விஷயம்

இப்போதைக்கு உடனடியா கிடைக்கக்கூடிய வாய்ப்பு இல்லைன்னு அவங்களுக்குத் தெரிய வேண்டாமா..?'

'சரி, போன் பண்ணு.'

'என்கிட்டே செல்போன் இல்லை... உன் னோட செல்போனை வாங்கி நான் அவங்களை கான்டாக்ட் பண்ணவும் முடியாது. காரணம், அவங்க செல்போன் நம்பர் எனக்குத் தெரியாது. எனக்கு அவங்க ஒரு மணி நேர அவகாசம் கொடுத்திருக்காங்க. அதுக்குள்ளே நான் ஹோட்டலை விட்டு வெளியே வந்துடணும்..!'

'சரி, நீ வெளியே போய் அவங்களைப்

பார்த்து விஷயத்தைச் சொல்லு... ஒரு வாரம் பத்து நாள் அவகாசம் கேளு. அப்பாவோட மரணம் பற்றின எல்லா போலீஸ் ஃபார்மாலிடீஸும் முடிஞ்ச பின்னாடி நாம மறுபடியும் மீட் பண்ணி 'நள்ளிரவு வானவில்' சம்பந்தமா பேசுவோம்.'

'இட்ஸ் ஓ.கே... நான் பேசிப் பார்க்கிறேன். நீ இதே இடத்துல இரு. நான் போய்ட்டு வந்ததும் போலீஸுக்கு இன்ஃபார்ம் பண்ணிடலாம். அதுவரைக்கும் விஷயம் யாருக்கும் தெரிய வேண்டாம்.'

ரிதன்யா சொல்லிவிட்டு வேக நடை போட்டு ரூஃப் கார்டனை விட்டு வெளியே வந்தாள். யோகானந்தின் திடீர் மரணம் அவளுடைய மனதை அடித்து துவைத்து காயப் போட்டிருந்தது. ஹோட்டலுக்கு வெளியே காரில் காத்துக்கொண்டிருக்கும் திவாகரும், பூங்கொடியும் யோகானந்தின் மரணத்தை எந்த அளவுக்கு சீரியஸாய் எடுத்துக்கொள்வார்கள் என்று தெரியவில்லையே?

லிஃப்ட்டில் இறங்கி வரவேற்பறைக்கு வந்தபோது அந்த ரிசப்ஷனிஸ்ட் பெண் சிநேகமாய் சிரித்து ஆங்கிலத்தில் கேட்டாள்...

'மேடம்..! மிஸ்டர் யோகானந்தைப் பார்த்து பேசிவிட்டீர்களா..?'

’இன்னமும் இல்லை. வெளியே காரில் ஒரு முக்கியமான ஃபைல் இருக்கிறது. அதை எடுப்பதற்காக இப்போது போகிறேன். மறுபடியும் பத்து நிமிஷத்தில் வருவேன்..!’

’மோஸ்ட் வெல்கம் மேடம்!’ அவள் அழகாய் தலையை சாய்த்து சிரிக்க, ரிதன்யா மெஷின்தனமாய் ஒரு புன்னகையை சிந்திவிட்டு ஹோட்டலை விட்டு வெளியே வந்தாள்.,

நூறு மீட்டர் தொலைவில் சாலையோர மரத்தடியில் திவாகரும் பூங்கொடியும்

வந்த கார் நின்றிருக்க, ரிதன்யா எகிறும் இதயத் துடிப்போடு காரை நோக்கி நடந்தாள்.

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

நள்ளிரவு வானவில்!

ரிதன்யாவின் இதயப் பிரதேசம் முழுவதும் கலவர பூமியாக மாறியிருக்க, சற்றே பதற்றமாய் சற்றுத் தூரத்தில் மரத்தடியில் நின்றிருந்த காரை நோக்கி நடைபோட்டாள்.

'யோகானந்த் இப்போது உயிரோடு இல்லை. 'அவர் கொலை செய்யப்பட்டுவிட்டார்' என்று நான் சொல்லப்போகும் விஷயத்தை பூங்கொடியும் திவாகரும் எந்த அளவுக்கு சீரியஸாக எடுத்துக்கொள்வார்கள்...?'

'நள்ளிரவு வானவில்' பிரச்னையை இதோடு விட்டுவிடுவார்களா... இல்லை, ரூபேஷிடமிருந்து வாங்கிக் கொடுக்கச் சொல்வார்களா..?'

'அவர்களுடைய ரியாக்ஷன் எப்படியிருக்கும்?'

ஒட்டுமொத்த உடம்பும் வியர்த்து வழிய, காரை நெருங்கினாள் ரிதன்யா. காரின் கண்ணாடிக் கதவுகள் ஏற்றப்பட்டிருக்க, மெள்ளத் தட்டினாள்.

உள்ளே மௌனம்.

கதவு திறக்கப்பட... பத்து விநாடிகள் வரை காத்திருந்து பார்த்துவிட்டு, மறுபடியும் கண்ணாடியைத் தட்டினாள்.

அதே மௌனம் நீடித்தது.

ரிதன்யா பொறுமை இழந்துபோனவளாய் காரின் கைப்பிடியைப் பற்றி இழுத்தாள்.



'ப்ளக்'... காரின் கதவு சற்று சிரமமாய்த் திறந்துகொள்ள, காரின் முன் ஸீட்டிலும், பின் ஸீட்டிலும் யாரும் இல்லை.

ரிதன்யா திகைத்துப்போனவளாய் காரின் கதவைச் சாத்திவிட்டு சுற்றும்முற்றும் பார்த்தாள். அந்தச் சாலையின் கடைக்கோடி வரைக்கும் மனித நடமாட்டமே இல்லை.

'இந்தத் திவாகரும், பூங்கொடியும் எங்கே போனார்கள்?' காரை இரண்டு முறை சுற்றி வந்த ரிதன்யா, காரின் கதவைத் திறந்துகொண்டு உள்ளே போனாள். பின்ஸீட்டில் ஒரு பிஸ்கட் பொட்டலமும், மினரல் வாட்டர் பாட்டிலும் தெரிய... ஸ்டீயரிங்கில் கார் சாவி தொங்கியது.

'காரை இப்படி சாவியோடு விட்டுவிட்டு இருவரும் எங்கே போயிருப்பார்கள்?'

ரிதன்யா கலக்கம் கப்பிக்கொண்ட மனதோடு மறுபடியும் காரிலிருந்து கீழே இறங்க முயன்றபோது, அவளுடைய கால் விரல்களுக்கு ஏதோ தட்டுப்பட்டது. குனிந்து பார்த்தாள். செல்போன்.

'இது பூங்கொடியின் கையில் இருந்த செல்போன் மாதிரி இருக்கிறதே!'

கையில் எடுத்தாள்.

பூங்கொடியின் செல்போன்தான். ரிதன்யா அந்த செல்போனை தன் இடது உள்ளங்கையில் அதக்கிக் கொண்டபோது ஒருவிதமான பிசுபிசுப்பை உணர்ந்தாள்.

'என்ன அது?'

இடது உள்ளங்கையை உயர்த்திப் பார்த்தாள்.

ரத்தம்.

இன்னமும் உலர ஆரம்பிக்காத ரத்தம்.

ரிதன்யாவின் இதயத் துடிப்பு ரிதம் மாறியது. 'இங்கேயும் ஏதோ ஓர் அசம்பாவிதம் நடந்திருக்க வேண்டும்..!'

'செல்போன் உயிரோடு இருக்கிறதா?'

சோதித்துப் பார்க்க பக்கவாட்டில் இருந்த பட்டனை அழுத்தினாள். செல்போனின் திரை வெளிச்சச் சதுரமாய் தெரிய, அப்பேரட்டஸ் ஐகான்கள் வரிசையாய் தெரிந்தன. 'கான்டாக்ட்ஸ்' ஐகானை அழுத்தி 'சேவ்' செய்யப்பட்ட எண்களைத் தேடினாள். 'ஏதுமில்லை' (*EMPTY*) என்று பதில் வந்தது. 'மெசேஜ்' ஆப்ஷனுக்குப் போய் ஏதாவது 'மெசேஜ்' இருக்கிறதா என்று பார்க்க... எல்லாமே டெலிட் செய்யப்பட்டுவிட்டதாய் ஒரு தகவல் சொன்னது.

'இந்த செல்போனிலிருந்து 'அவுட் கோயிங் கால்' போகுமா... போகாதா?'

ரிதன்யா வியர்த்து வழிந்தபடி செல்போனை கையில் வைத்துக்கொண்டு யோசித்தாள்.

‘ரூபேஷுக்கு போன் செய்யலாமா?’

‘வேண்டாம்.. இப்போது அவனிடம் பேசினால் பிரச்னை இன்னமும் சிக்கலாகும். போலீஸ் டிபார்ட்மெண்ட்டில் இருக்கும் யாராவது ஒருவரிடம் பேசிப் பார்க்கலாம்..!’

ரிதன்யாவுக்கு அவளுடைய இம்மீடியட் பாஸான சைபர் க்ரைம் செல்லில் இருக்கும் டி.எஸ்.பி. நம்பெருமாளின் ஞாபகம் வந்தது. அவருடைய எண்களை செல்போனின் கீ-பேடில் அழுத்தினாள். உடனே ‘நாட் ரீச்சபிள்’ என்ற ஒரு பெண்ணின் ரிக்கார்டட் வாய்ஸ் கேட்டது. இரண்டு தடவை முயற்சித்துப் பார்த்துவிட்டு வேறு யாருக்கு போன் செய்யலாம் என்று யோசித்த விநாடி கணவன் ஹரிகிருஷ்ணனின் நினைவு வந்தது. எண்களைத் தட்டிவிட்டாள்.

அடுத்த விநாடியே ரிங்டோன் போயிற்று. சில விநாடிகளுக்குப் பின் ஹரிகிருஷ்ணனின் குரல் கேட்டது.

‘‘யெஸ்..!’’

“என்னங்க... நான் ரிதன்யா!’’

மறுமுனையில் ஹரிகிருஷ்ணனின் குரல் சீறியது.

’’ரிதன்யா..! இது யாரோட போன்... நீ இப்போ எங்கே இருக்கே..? கடந்த ரெண்டு மணி நேரமா உன்னைக் காண்டாக்ட் பண்ண தவியா தவிச்சுட்டிருக்கேன்.’’

“டென்ஷன் ஆகாதீங்க... நான் சொல்றதைக் கொஞ்சம் நிதானமா கேளுங்க..!’’

“என்ன கேட்கிறது..? உன்னோட போனுக்கு என்னாச்சு..? நம்ம பையன் அபிநய் படிக்கிற கான்வென்ட்டிலிருந்து பிரின்ஸிபால் மரிய புஷ்பம் உனக்கு போன் பண்ணி அபிநய்க்கு உடம்பு சரியில்லை என்கிற விஷயத்தைச் சொன்னாங்களா, இல்லையா..?”

“சொன்னாங்க... டாக்டர் ட்ரீட்மென்ட் கொடுத்ததுல டெம்பரேச்சர் குறைஞ்சிருக்கிறதா சொல்லி, கவலைப்பட ஒண்ணுமில்லைன்னும் சொன்னாங்க...”

“அதுக்கப்புறம் அந்த பிரின்ஸிபால் உனக்கு போன் பண்ணலையா..?”

“பண்ணலையே..!”

“ரிதன்யா... உனக்கு என்னாச்சு? ஆர் யூ ஆல்ரைட்..? அந்த பிரின்ஸிபால் உனக்கு மறுபடியும் போன் பண்ணி ‘அபிநய்க்கு ஃபீவர் குறையவேயில்லை. கொஞ்சம் சீரியஸ் கண்டிஷன். மே பி ஸ்வைன் ஃபுளூ... கோயம்புத்தூருக்கு கொண்டு போய் ஏதாவது ஒரு ஹாஸ்பிடல்ல அட்மிட் பண்ணி ட்ரீட்மென்ட் தர்றது பெட்டர்னு இங்கேயிருக்கிற டாக்டர்ஸ் சொல்லிட்டாங்க. இன்னும் கொஞ்ச நேரத்துல ஆம்புலன்ஸ்ல புறப்பட்டுப் போறோம். நீங்களும் கோயம்புத்தூர் வந்துட்டா பரவாயில்லை’னு சொன்னாங்களா இல்லையா..?”

“சொ... சொல்லலையே..!”

“சொன்னாங்களாமே... நீயும் வந்துடறேன்னு சொன்னியாமே..? எனக்கு அவங்க போன் பண்ணியிருந்தாங்க...”

“அப்படீன்னா... அந்த போன்காலை பூங்கொடிதான் அட்டெண்ட் பண்ணியிருக்கணும்..!”

“பூங்கொடியா... யாரது..?”

“சொல்றேன்... நேத்திலிருந்து நான் ஒரு பிரச்னையில் மாட்டிக்கிட்டு தவியா தவிச்சுட்டு இருக்கேங்க. அதைச் சொல்லத்தான் உங்களுக்கு இப்ப போன் பண்ணினேன்.”

"எ... எ... என்ன பிரச்னை..?"

ரிதன்யா ஒரு ஐந்து நிமிஷ நேரத்தை செலவழித்து திவாகர் - பூங்கொடி சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களையும் சொல்லி முடிக்க... செல்போனின் மறுமுனையில் இருந்த ஹரி கிருஷ்ணன் இடிந்து போயிருந்தான்.

"அது என்ன நள்ளிரவு வானவில்?"

"தெரியலையே..!"

"ரிதன்யா... நடந்திருக்கிற சம்பவங்களைப் பார்க்கும்போது இது ஒரு அசாதாரணமான விவகாரம்னு நல்லாவே தெரியுது... நீ இன்னமும் அந்த அபாய வளையத்துக்குள்ளேதான் இருக்கேனு நினைக்கிறேன்."

"ஆமா..! யோகானந்த் இப்போ உயிரோடு இல்லை. கார்ல எனக்காக வெயிட் பண்ணிட்டிருந்த திவாகரும் பூங்கொடியும் காரை ரோட்ல அப்படியே விட்டுட்டு தலைமறைவாயிட்டாங்க... அவங்களால இன்னும் என்னென்ன பிரச்னைகள் வரும்னு தெரியலை. ரூபேஷ் வேற ஹோட்டலின் ரூஃப் கார்டனில் யோகானந்தின் டெட்பாடியோடு வெயிட் பண்ணிட்டிருக்கான். டி.எஸ்.பி. நம்பெருமாளுக்கு போன் பண்ணினேன். 'நாட் ரீச்சபிள்'னு ரிக்கார்டட் வாய்ஸ் வந்தது."





“டி.எஸ்.பி. நம்பெருமாளை காண்டாக்ட் பண்ண முடியலைன்னா என்ன... வேற போலீஸ் ஆபீஸர்ஸை காண்டாக்ட் பண்ணிப் பேசலாமே..?”

“முடியாதுங்க... இது சைபர் க்ரைம் பிராஞ்ச் சம்பந்தப்பட்ட ஹைலி கான்ஃபிடென்ஷியல் மேட்டர். ‘நள்ளிரவு வானவில்’ சம்பந்தமா எந்த ஒரு சம்பவம் நடந்தாலும் நான் அவர்கிட்ட மட்டும்தான் பேசணும்.”

“சரி... நீ இப்போ என்ன பண்ணப்போறே?”

“ரூபேஷ் எனக்காக வெயிட் பண்ணிட்டிருப்பான். நான் போய் அவன்கிட்டே விஷயத்தை சொல்லணும். நீங்க உடனே கோயம்புத்தூர் புறப்பட்டுப் போங்க. அபிநய்யை கவனிங்க...”

“பிரின்ஸிபால் அரை மணி நேரத்துக்கு முன்னாடி என்கிட்டே பேசும்போது அபிநய்யை கே.ஜி. ஹாஸ்பிடலில் அட்மிட் பண்ணியிருப்பதாகவும்... ப்ளட் டெஸ்ட், ஸ்கேன் எடுத்துப் பார்த்தபோது அது ஸ்வைன் ஃப்ளூ இல்லைன்னு தெரியவந்ததாகவும் சொன்னார். ஸோ, வீ ஆர் சேஃப். நான் அடுத்த ஃப்ளைட்ல கோயம்புத்தூர் கிளம்பறேன். இங்கே உன் ஒருத்தியால பிரச்னைகளை ஃபேஸ் பண்ண முடியுமா..?”

“தன்னோட அப்பா கொலை செய்யப்பட்டதால ரூபேஷ் இடிஞ்சு போயிருக்கான். இனி அவனை ஹேண்டில் பண்றதுல பிரச்னை இருக்காதுன்னு நினைக்கிறேன்...”

“நான் அப்படி நினைக்கலை ரிதன்யா... இனிமேல்தான் நீ அதிகப் படியான பிரச்னைகளை எதிர்கொள்ள வேண்டியிருக்கும்னு நினைக்கறேன்.”

“ஏன்... எதனால..?”

“உன்னைத் துப்பாக்கி முனையில் மிரட்டி ஒயிட்ஃபீல்ட் ஹோட்டல் வரைக்கும் கூட்டிட்டு வந்த திவாகரும் பூங்கொடியும் காரை ரோட்ல அநாதையா விட்டுட்டு திடீர்னு தலைமறைவாக வாய்ப்பேயில்லை.”

“அப்புறம்?”

“அந்த ரெண்டு பேருக்கும் யாரோ ஒரு மூணாவது நபரால ஆபத்து ஏற்பட்டிருக்கலாம்.”

“பூங்கொடியோட செல்போனில் இருந்த ரத்தக் கறையை வெச்சு சொல்றீங்களா?”

“ஆமா..!”

“அதாவது காருக்குள்ளே ஒரு கைகலப்பு ஏற்பட்டு அதன் காரணமா ரத்தகாயம் ஏற்பட்டு அந்த ரத்தம் பூங்கொடியின் செல்போனில் பட்டிருக்கலாம்ங்கிறது உங்க கெஸ் வொர்க்?”

“ஆமா..!”

“ஸோ... இந்த ‘நள்ளிரவு வானவில்’ விவகாரத்தில் கண்ணுக்குப் புலப்படாமல் மூணாவதா ஒரு எதிரி எங்கிருந்தோ செயல்படறான்னு சொல்ல வர்றீங்க?”

“அதேதான்! நீ இனிமேல்தான் ரொம்பவும் ஜாக்கிரதையா இருக்கணும். ரூபேஷைப் போய்ப் பார்க்கிறதுக்கு முன்னாடி நீ டி.எஸ்.பி. நம்பெருமாள்கிட்டே பேசிடறது முக்கியம்.”

“அவருக்குப் போன் பண்ணினால்தான் ரெஸ்பான்ஸே இல்லையே?”

“அவரோட செல்லுக்கு ட்ரை பண்ணாதே! அவர் இந்த நேரத்துக்கு ஆபீஸில்தானே இருப்பார்...?”

“ஆமா..!”

“ஆபீஸோட லேண்ட் லைனுக்கு போன் பண்ணு...”

“சரி... நான் போன் பண்றேன். டி.எஸ்.பி. கிட்டே விஷயத்தைக் கொண்டுபோயிட்டா அதுக்கப்புறமா விசாரணையெல்லாம் டிபார்மென்ட்

ரீதியாகத்தான் இருக்கும். நீங்க கோயம்புத்தூர் போய் அபிநய்யை நல்லவிதமா பார்த்துக்குங்க... நான் இங்கே இருக்கிற நிலவரத்தைப் பார்த்துக்கிட்டு புறப்பட்டு வர்றேன்.”

“அப்புறம்... ரிதன்யா...”

“சொல்லுங்க...”

“இனிமே உனக்கு இந்த போலீஸ் வேலை வேண்டாம். இப்போ நீ பார்த்துட்டு இருக்கிற ‘நள்ளிரவு வானவில்’ கேஸ்தான் உன்னோட கடைசி கேஸா இருக்கணும்.”

“அதைப்பத்தியெல்லாம் பேச இது சரியான நேரமில்லை. நான் போனை கட் பண்றேன். கோயம்புத்தூர் போய்ச் சேர்ந்ததும் எனக்கு உடனடியா தகவல் கொடுங்க... அபிநய் இப்போ எப்படி இருக்கானோன்னு ஒரே பதைபதைப்பா இருக்கு!”

“அவன் ஃபீவரிலிருந்து ரெக்கவர் ஆயிட்டு வர்றதா பிரின்ஸிபால் சொல்லிட்டாங்க. யூ டேக் கேர் வித் யுவர் ஆக்டிவிட்டீஸ்!”

- மறுமுனையில் ஹரிகிருஷ்ணன் செல்போனை அணைத்துவிட, ரிதன்யா அடுத்த சில விநாடிகளில் நம்பெருமாளின் டி.எஸ்.பி. அலுவலகத்தைத் தொடர்புகொள்ள... உதவியாளர் ஒருவர் ரிஸீவரை எடுத்தார்.

“ஹலோ..!”

“நான் ரிதன்யா பேசறேன்.”

“சொல்லுங்க மேடம்...”

“பேசறது யாரு... புருஷோத்தமனா?”

“ஆமா மேடம்...”

“டி.எஸ்.பி. ஆபீஸுக்கு வந்துட்டாரா?”

“வந்துட்டார் மேடம்... ரூம்ல யார் கூடவோ பேசிட்டிருக்கார்”

“நான் உடனடியா அவர்கிட்டே பேசணும். மேட்டர் ஈஸ் வெரி அர்ஜெண்ட்!”

“உடனடியா லைன் தர்றேன் மேடம்..!”

அடுத்த சில விநாடிகளில் இணைப்பு கிடைத்தது. நம்பெருமாள் பேசினார். “சொல்லு ரிதன்யா... எனிதிங் இம்பார்ட்டண்ட்?”

“ஆமா ஸார்..! நீங்க இம்மீடியட்டா புறப்பட்டு ஒய்ட்ஃபீல்டில் இருக்கிற ‘ப்ளஸண்ட் ஓஷன்’ ஹோட்டலுக்கு வரணும். ‘நள்ளிரவு வானவில்’ மேட்டர் ஒரு விபரீதமான முடிவை நோக்கிப் போயிட்டிருக்கு...”

“ஏன்... என்னாச்சு?”

“ஃப்யூச்சர் மிராக்கிள் கம்பெனியின் எம்.டி. யோகானந்த் இப்போ உயிரோடு இல்லை. ஹீ ஈஸ் மர்டர்ட் பை ஸம்படி இன் தட் ஹோட்டல் ரூஃப் கார்டன்...”

“எ... எ... எப்போ?

“சம்பவம் எப்போ நடந்ததுன்னு தெரியலை ஸார். நானும் ரூபேஷும் அவரைப் பார்க்கப் போனபோது அவர் இறந்து போயிருந்தார்.”

“நீ எதுக்காக அங்கே போனே?”

“நேர்ல வாங்க ஸார்... எல்லாத்தையும் சொல்றேன்.”

மறுமுனையில் ரிதன்யா செல்போனை அணைத்துவிட... டி.எஸ்.பி. நம்பெருமாள் வியர்த்துவிட்ட முகத்தோடு, தனக்கு எதிரில் உட்கார்ந்திருந்த போலீஸ் கமிஷனர் ராஜகணேஷைப் பார்த்தார்.

“மிஸ்டர் ராஜகணேஷ்... நீங்க சென்னை யிலிருந்து பெங்களூர் வந்து ‘நள்ளிரவு வானவில்’ சம்பந்தமா யோகானந்தை விசாரிக்க இருந்த விஷயம் வேற யாருக்காவது தெரியுமா...?”

ராஜகணேஷ் தீர்க்கமாய் தலையாட்டினார்.

“சான்ஸே இல்லை... இது ஒரு ‘இன்-கேமரா’ மேட்டர்...”

“சில மணி நேரத்துக்கு முன்னாடி யோகானந்த் ஒரு ஹோட்டலின் ரூஃப் கார்டனில் வைத்து கொலை செய்யப்பட் டிருக்கார்.”

“எ... எ... எப்படி..?”

“தெரியலை... என்னுடைய ‘இன்வெஸ்டிகேஷன் விங்’கில் இருக்கிற ரிதன்யாகிட்டயிருந்து வந்த செய்தி. நாம உடனடியா ஸ்பாட்டுக்குப் போகணும்.”

இருவரும் அறையை விட்டு வேகமாக வெளிப்பட்டார்கள். அலுவலகத்தின் நீள வராந்தாவில் நடக்கும்போது நம்பெருமாளின் செல்போன் முணுமுணுப்பாய் கூப்பிட்டது. எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தார்... ரூபேஷ். தன்னுடைய முகத்தில் எந்தவிதமான உணர்ச்சியையும் காட்டிக்கொள்ளாமல், காதுக்கு செல்போனைக் கொடுத்தார்.

“சொல்லு..!”

மறுமுனையில் ரூபேஷ் பேசினான். குரலில் பயமும் நடுக்கமும் தெரிந்தது.

“டி.எஸ்.பி. ஸார்! நாம நினைச்சமாதிரியே அப்பாவைக் கொன்னுட்டாங்க... இனி நாம ரெண்டு பேரும் ஜாக்கிரதையா இருக்கணும்.”

“டி.எஸ்.பி. ஸார்!
நாம நினைச்ச
மாதிரியே
அப்பாவைக்
கொன்னுட்டாங்க!”

# நள்ளிரவு வானவில்!- 19

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

நள்ளிரவு வானவில்!

பெங்களூரு சைபர் க்ரைம் பிராஞ்ச் செல், ஏ.ஸி. காற்றில் நனைந்து, அந்த 250 சதுர அடி பரப்புள்ள இடத்தை மினி ஊட்டியாய் மாற்றியிருக்க... உஷ்ணமான உள்ளங்களோடு ராஜகணேஷ், நம்பெருமாள், ரிதன்யா, ரூபேஷ் நான்கு பேரும் அந்த வட்டமான மேஜையைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்தார்கள்.

ராஜகணேஷின் பார்வை ஆணியடித்த மாதிரி ரூபேஷ் முகத்தில் நிலைத்திருக்க, அவருடைய உதடுகள் தன்னிச்சையாய் வார்த்தைகளை உதிர்த்து, அவற்றை கேள்விகளாக மாற்றிக்கொண்டிருந்தன.

'அப்படீன்னா, உங்களுக்கு 'நள்ளிரவு வானவில்'னா என்னன்னே தெரியாதா..?'

'தெரியாது ஸார்.'

’அப்படியொரு விஷயமே உங்களுக்குத் தெரியாதபோது விசாரணைக்காக உங்ககிட்ட வந்த ரிதன்யாவை பயமுறுத்துகிற மாதிரியாகவும், மிரட்டுகிற மாதிரியாகவும் பேச வேண்டிய அவசியம் என்ன?’

’எங்களுக்கு சம்பந்தமேயில்லாத ஒரு விஷயத்தைப் பத்தி க்ரைம் பிராஞ்ச் செல்லில் இருந்து ரிதன்யா விசாரிக்க வந்தது எனக்கும் என்னுடைய அப்பாவுக்கும் பிடிக்கலை. அதுதான் ரிதன்யாகிட்டே கொஞ்சம் கடுமையா நடந்துகிட்டோம்.”

ரிதன்யா குறுக்கிட்டாள்... ’ஸார்! அன்னிக்கு ரூபேஷும் அவரோட அப்பா யோகானந்தும் என்கிட்டே ரொம்பவும் அநாகரிகமான முறையில் நடந்துகிட்டாங்க. அவங்க ரெண்டு பேரும் பேசின பேச்சையெல்லாம் என்னோட செல்போன்ல ரிக்கார்ட் பண்ணி வெச்சிருந்தேன். அந்த போன் இப்போ திவாகர் பூங்கொடிகிட்டே இருக்கு.’

ரிதன்யாவை கையமர்த்திவிட்டு, மறுபடியும் ரூபேஷிடம் திரும்பினார் ராஜகணேஷ். ’இதோ பாருங்க ரூபேஷ்..! இந்த ’நள்ளிரவு வானவில்’ மேட்டர், வெடிகுண்டை மடியில் வெச்சு கட்டியிருக்கிற மாதிரியான ஒரு விபரீதம். இந்த விபரீதத்தோட சம்பந்தப்பட்ட பத்து பேர் இப்போ உயிரோடு இல்லை. முதலாவது நபர் ஞானேஷ். டெல்லி ஃப்யூச்சர் மிராக்கிள் ஐ.டி. கம்பெனியின் ப்ராஜெக்ட் ஹெட்டான இவர்தான் அந்த நள்ளிரவு வானவில்லை உருவாக்கினார். அந்த ப்ராஜெக்ட் தொண்ணூறு சதவிகிதம் முழுமை அடைஞ்சு ’லாஞ்ச்’ செய்யப்போகும் நேரத்தில்தான், போன வருஷம் ஊட்டி ஜாலி ட்ரிப்பை முடிச்சுகிட்டு ஊர் திரும்பும்போது பர்லியாறு அருகே கொண்டை ஊசி வளைவில் வேன் கவிழ்ந்து, அதில் பயணம் பண்ணின ஆறு இளம் பெண்கள் இறந்து போயிட்டாங்க. அந்த ஆறு பெண்களும் ’நள்ளிரவு வானவில்’ ப்ராஜெக்ட் உருவாக குரூப் ஹெட் ஞானேஷுக்கு உறுதுணையா இருந்தவங்க. இந்த விபத்து இயல்பா நடந்ததா... இல்லை, வேறு யாராவது ஒரு நபர் மூலமா உண்டாக்கப்பட்டதானு போலீஸ் விசாரணை நடந்துட்டு இருக்கிற நேரத்துலதான் ஞானேஷ் உயிரோடு

எரிக்கப்பட்டு, அவரோட அஸ்தி சென்னையில் இருக்கிற மீரா வீட்டு மொட்டை மாடியில் வைக்கப்பட்டிருந்தது.

தமிழ்நாட்டில் இந்தச் சம்பவங்கள் நடந்த மாதிரியே பெங்களூரிலும் 'நள்ளிரவு வானவில்' விஷயத்தில் தீவிரம் காட்டிய போலீஸ் எஸ்.பி. சந்திர கௌடா, யஷ்வந்த்பூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரே ஜீப்பில் வரும்போது பெட்ரோல் குண்டு வீசப்பட்டு கொலை செய்யப்பட்டார். ரிதன்யா இங்கே உங்ககிட்டே விசாரணை நடத்தும்போதே இந்த விவகாரத்தில் சம்பந்தப்பட்ட போலீஸ் இன்ஃபார்மர்₹இரண்டாம் நாரதர்' என்கிற ஒரு நபரை, சென்னை ஓ.எம்.ஆர். ரோட்டில் பைக்கில் போயிட்டிருந்தபோது, கூலிப்படையைச் சேர்ந்த சிலர் அரிவாளால வெட்டி சாய்ச்சிருக்காங்க. இந்தக் கொலைகளுக்கெல்லாம் முத்தாய்ப்பு வைக்கிற மாதிரி இப்போ உங்க அப்பா யோகானந்த் கொலை செய்யப்பட்டிருக்கார். மொத்தம் பத்து கொலைகள். இதற்குக் காரணம் அந்த 'நள்ளிரவு வானவில்'தானே?'

ரூபேஷ் சில விநாடிகள் மௌனமாக இருந்துவிட்டு நீர் நிரம்பிய விழிகளோடு ராஜகணேஷை ஏறிட்டான்.

'ஸார்... என்னோட அப்பா கொலை செய்யப்பட்டதற்குக் காரணம் அந்த 'நள்ளிரவு வானவில்' இல்லை!'

'அப்புறம்..?'

'எங்களுடைய தொழில் எதிரிகளில் யாராவது ஒரு நபர் காரணமா இருக்கலாம். கடந்த ரெண்டு வருஷ காலமாவே எங்களுடைய ஐ.டி. கம்பெனி வெளிநாட்டு அசைன்மெண்ட்டுகளை வாங்கி, அவற்றைக் குறித்த நேரத்தில் செய்து முடித்த செயலைப் பாராட்டி 'வேர்ல்ட் சிலிகான் வேலி' என்கிற அமைப்பு 'கிரேட் அச்சீவர்' அவார்டைக் கொடுத்து, 500 கோடிக்கான ஆர்டர்களையும் கொடுத்து எங்களை ஹானர் பண்ணியிருந்தாங்க. இது எங்களோட காம்படீட்டர்ஸுக்குப் பிடிக்கலை. அதுல சில பேர் தங்களோட கம்பெனிகளை இழுத்து மூடிட்டு வேற தொழில்களுக்குப் போயிட்டாங்க.

அவங்கள்ல யாராவது ஒரு நபர்கூட அப்பாவோட மரணத்துக்குக் காரணமா இருக்கலாம்..!’

’ஸோ... உங்களுக்கும் உங்களுடைய அப்பாவுக்கும் இந்த₹நள்ளிரவு வானவில்’ விவகாரம் தெரியவே தெரியாது..?’

’தெரியாது ஸார்...’

அதுவரைக்கும் எதுவும் பேசாமல் அமைதியாக உட்கார்ந்திருந்த டி.எஸ்.பி. நம்பெருமாள் இப்போது மெதுவாக வாயைத் திறந்தார்

’ஸார்! நான் கொஞ்சம் பேசலாமா..?’

’ப்ளீஸ்..!’

’ரூபேஷ் மே பி கரெக்ட் ஸார்..! ஆறு மாதத்துக்கு முன்பு மிஸ்டர் யோகானந்த் ஒரு புகார் கடிதத்தோடு என்னை வந்து பார்த்தார். தன்னோட உயிருக்கும், தன் மகன் ரூபேஷ் உயிருக்கும் தொழில்ரீதியான எதிரிகளால் பெரிய அளவில் அச்சுறுத்தல் இருப்பதாகவும், தங்களுக்குப் பாதுகாப்பு வேணும்னும் கேட்டார்.₹உங்களுடைய தொழில் எதிரிகள் யார்?’◌‘னு கேட்டேன். அதுக்கு அவர்,₹அதை வெளிப்படையா சொல்ல முடியாது. ஏன்னா, இப்போ என்கூட பேசறவங்க பழகறவங்க எல்லோருமே ஒரு சமயம் பார்த்தா ஃப்ரெண்ட்ஸ் மாதிரி தெரியறாங்க. இன்னொரு சமயம் பார்த்தா ரைவல்ஸ் மாதிரி தெரியறாங்க. யார் கையில் பழம் இருக்கு, யார் கையில் கத்தி இருக்குனு தெரியலை. அதுவும் சில நாட்கள்ல தெரிஞ்சுடும். அந்த சமயத்துல வந்து ’லிஸ்ட்’ தர்றேன்’னு சொல்லிட்டுப் போயிட்டார்.’

ராஜகணேஷ், நம் பெருமாளை தன்னுடைய வியப்பான பார்வையால் நனைத்தார்.

’யோகானந்த் அப்படி ஒரு புகார் கடிதத்தை உங்ககிட்ட கொடுத்ததும், நீங்க என்ன ஸ்டெப்ஸ் எடுத்தீங்க மிஸ்டர் நம்பெருமாள்?’



'அந்தக் கடிதத்தை எஸ்.பி. சந்திர கௌடாவுக்கு அனுப்பி வெச்சேன் ஸார். ஆனா, அவர் அந்த லெட்டரை இக்னோர் பண்ணிட்டார்'

'ஏன்..?'

'அவருக்கு எப்பவுமே இந்த ஐ.டி. பீப்பிள் மேல தேவையில்லாத ஒரு வெறுப்பு இருந்து வந்தது ஸார்.₹பெயரளவுக்கு ஒரு ஐ.டி. கம்பெனியை நடத்திக்கிட்டு திரைமறைவுக் குப் பின்னாடி ஃபிராடுதனம் பண்ணி கோடிக்கோடியா பணம் சம்பாதிக்கறாங்க'னு சொல்லுவார்.₹இது மாதிரியான புகார் கடிதம் வந்தா, அதை ஒரு பெரிய விஷயமா எடுத்துக்காதீங்க. அவங்களுக்கு முன்னாடி₹சரிசரி'ஃனு தலையை ஆட்டிட்டு, அவங்க போனதும் புகார் கடிதத்தைக் கிழிச்சு குப்பை கூடையில் போட்டுடுங்க'னு சொல்லுவார்.'

ரூபேஷ் இப்போது குறுக்கிட்டான்... 'ஸார்! சில ஐ.டி. கம்பெனிகள் அரசு விதிமுறைகளை மீறி முறைகேடா செயல்பட்டு கோடிக்கணக்கில் பணம் சம்பாதிப்பது உண்மைதான். சந்திர கௌடா நேர்மையான போலீஸ் ஆபீஸர். அவரால அந்த முறைகேடுகளைப் பொறுத்துக்க முடியலை. டிபார்ட்மென்ட் ரீதியா சில நடவடிக்கைகளை எடுத்தார். ஐ.டி. கம்பெனிகளின் நடவடிக்கைகளைத் தீவிரமா கண்காணிக்க ஒரு சிறப்பு புலனாய்வுக் குழுவை நியமிச்சார். இதெல்லாம் ஏதோ ஒரு ஐ.டி. கம்பெனிக்கு பிடிக்கலை. கூலிப்படையை வெச்சு பெட்ரோல் குண்டை வீசி அவரைத் தீர்த்துக்கட்டிட்டாங்க.'

ராஜகணேஷ் கேட்டார்...

'அது எந்த கம்பெனின்னு உங்களால சொல்ல முடியுமா..?'

'அதெப்படி ஸார் சொல்ல முடியும்... பெங்களூர்ல நூற்றுக்கணக்கான ஐ.டி. கம்பெனிகள் இருக்கு. அதுல பாதி கம்பெனிகள் அரசியல் பிரமுகர்களுக்குச் சொந்தமானது" ரூபேஷ் சொல்லிக்கொண்டிருக்கும் போதே மேஜையின் மேல் இருந்த இன்டர்காம் முணுமுணுத்தது.

ராஜகணேஷ், ரிதன்யாவைப் பார்க்க... அவள் ரிஸீவரை எடுத்து இடது காதுக்கு ஒற்றினாள்.

'யெஸ்...'

ரிசப்ஷன் செல்லில் இருந்து ஒரு கான்ஸ்டபிள் பேசினார்... 'மேடம்! ஃபாரன்ஸிக் டிபார்ட்மென்ட்டிலிருந்து மிஸ்டர் சார்லஸ் வந்திருக்கார். உடனடியா டி.எஸ்.பியைப் பார்க்கணும்னு சொல்றார். அனுப்பலாமா மேடம்?'

'விஷயம் என்னன்னு கேட்டீங்களா?'

'கேட்டேன் மேடம்..! ஐ.டி. கம்பெனி யோகானந்தின் மர்டர் சம்பந்தமா பேசணும்னு சொன்னார்.'

’அவரை உள்ளே அனுப்புங்க!’ ரிதன்யா ரிஸீவரை அதனிடத்தில் அமர்த்திவிட்டு விஷயத்தை ராஜகணேஷிடமும், நம்பெருமாளிடமும் சொல்ல, அவர்கள் ஆர்வமாகக் காத்திருக்க ஆரம்பித்தார்கள். அடுத்த நிமிடத்தின் ஆரம்பத்தில் அந்த நடுத்தர வயது சார்லஸ் வொயிட் யூனிஃபார்மில் அபார உயரத்தோடு உள்ளே வந்தார். கையில் ஒரு பிரவுன் கவர். ’சுள்’ என்று ஒரு சல்யூட் அடித்துவிட்டு, ஐந்து விநாடிகள் நேர்க்கோடு போல் நின்றுவிட்டுத் தளர்ந்தார்.

ராஜகணேஷ் தனக்குப் பக்கத்தில் இருந்த காலி இருக்கையைக் காட்ட, சார்லஸ் உட்கார்ந்தார். நம்பெருமாள் கேட்டார்...

’சொல்லுங்க... எனிதிங் இம்பார்ட்டன்ட்?’

யெஸ் ஸார்..! யோகானந்தின் உள் உறுப்புகளை ஆய்வு செய்து பார்த்ததில் ஒரு உண்மை வெளிப்பட்டிருக்கு. அதைப் பத்தி கொஞ்சம் பேசணும் ஸார்!’

’என்ன உண்மை?’

’அவர் விஷம் கொடுத்து கொல்லப் பட்டிருக்கார். அவர் சாப்பிட்ட விஸ்கியில் அந்த விஷம் கலந்திருந்தது.’

ரூபேஷ் அதிர்ந்து போனவனாய் சார்லஸை ஏறிட்டான். ’என்ன ஸார் சொல்றீங்க... அப்பா அந்த ஹோட்டலின் ரூஃப் கார்டன் பாரில் தனியா உட்கார்ந்துதானே லிக்கர் கன்ஸ்யூம் பண்ணிட்டிருந்தார்..?’

’’பாரில் இருந்த ஒரு பேரர்தான் விஸ்கியில் விஷத்தைக் கலந்திருக்கான்.’

’’எப்படி அவ்வளவு கன்ஃபர்மா சொல்றீங்க?’

’யோகானந்தின் மரணத்துக்கு மதுவில் கலந்திருந்த விஷம்தான் காரணம்னு தெரிஞ்சதுமே நான் இந்த விஷயத்தை யாருக்கும் தெரியப்படுத்தாம, அந்த ஹோட்டலுக்குப் போனேன். பாரில் இருந்த எந்த

பேரர் அவருக்கு விஸ்கியை சர்வ் செய்தான்னு விசாரிச்சேன். சிட்டிபாபுனு சொன்னாங்க.'

'அந்த சிட்டிபாபுவை விசாரணை பண்ணீங்களா?'

'ஆள் இருந்தாத்தானே விசாரணை பண்ண முடியும்?'

'என்ன சொல்றீங்க சார்லஸ்..?'

'ஆள் தலைமறைவாயிட்டான். நான் அந்த ஹோட்டல் மானேஜர்கிட்டே என்கொயரி பண்ணிட்டு இருக்கும்போது அந்த சிட்டிபாபு அவனோட ரெஸ்ட் ரூம்ல இருந்திருக்கான். அவனைத் தேடிப் போகும்போது ஹோட்டலின் பின்பக்க வாசல் வழியா வெளியேறிப் போயிருக்கான்.'

ராஜகணேஷ் குறுக்கிட்டார்...

'ஒரு விஷயம் இடிக்குதே சார்லஸ்...'

'என்ன ஸார்?'

'சிட்டிபாபு, யோகானந்தத்துக்கு விஷம் கலந்த விஸ்கியை கலந்து கொடுத்திருக்கலாம்னு சொன்னீங்க... பாடியை போஸ்ட் மார்ட்டம் பண்ணும்போது யோகானந்த் இறந்தது விஷத்தின் காரணமாதான்னு போலீஸ் கண்டுபிடிச்சுடுவாங்கன்னு அவனுக்குத் தெரியாதா என்ன?'

''ஸாரி ஸார்! அந்த பேரர் நினைச்சது ஒண்ணு... நடந்தது ஒண்ணு! அவன் விஸ்கியில் கலந்த அந்த விஷம் ஒருத்தருக்கு மாரடைப்பை உண்டாக்கி மரணத்தை ஏற்படுத்துமே தவிர, தான் யார்ங்கிறதை காட்டிக்காத விஷம். அந்தப் பேருக்குப் பின்னாடி இருக்கிற கொலையாளி ரொம்பவும் புத்திசாலி. விஷங்கள் சம்பந்தப்பட்ட விஷயங்களைக் கரைச்சு குடிச்சவனா இருக்கணும். இல்லேன்னா இப்படியொரு அரிதான விஷத்தை அவன் செலக்ட் பண்ணியிருக்க முடியாது!"

'அரிதான விஷமா...?'

'ஆமா ஸார்..! யோகானந்தை கொலை செய்ய உபயோகப்படுத்திய அந்த விஷத்தைப் பத்தி இந்த டாக்ஸிகாலாஜி (ஜிஷீஜ்வீநீஷீறீஷீரீஹ்) புக்குல என்ன போட்டிருக்குன்னு பாருங்க ஸார்' சொன்ன சார்லஸ், தன் கையில் வைத்திருந்த ஒரு புத்தகத்தைப் பிரித்து சில பக்கங்களைப் புரட்டி ஒரு பக்கம் வந்ததும் நிறுத்தி ஃப்ளோரஸன்ட் பேனாவால் 'மார்க்' செய்யப்பட்டிருந்த அந்த ஆங்கில வரிகளைக் காட்டினான். ராஜகணேஷ், நம்பெருமாள் இருவரும் தங்களுடைய பார்வைகளை அங்கே கொண்டுபோனார்கள்.

ராஜகணேஷ் வியப்பும் அதிர்ச்சியுமாக சார்லஸை ஏறிட்டார். ''சார்லஸ்...! இப்படியொரு விஷம் இருப்பது உண்மையா..?'

'உண்மை ஸார்... இப்படியொரு விஷம் இருப்பது சமீபகாலமாதான் ஃபாரன்ஸிக் ஆய்வுகளுக்கே தட்டுப்பட்டிருக்கு. எந்த ஒரு விஷத்துக்குமே வாசனையும், சுவையும், நிறமும் இருக்கும். ஆனா, இந்த விஷத்துக்கு மட்டும் நிறம், சுவை, வாசனை எதுவுமே இருக்காது. ஒரு நபரோட உயிரை எடுத்த பின்னாடி ஹார்ட் அட்டாக் வந்ததுக்கான அடையாளத்தை மட்டும் காட்டிட்டு எந்த ஒரு ஆய்வுக்கும் சிக்காம திருட்டுத்தனமா உடலின் உள் உறுப்புகளுக்குள் போய் ஒளிந்துகொள்ளும். இந்தக் கண்ணாமூச்சி விளையாட்டில் ஜெயிக்க சில சமயங்களில் எங்களுக்குப் பல மணி நேரம் தேவைப்படும். ஆனா, யோகானந்த் விஷயத்தில் ஒரு மணி நேரத்தில் கண்டுபிடிச்சுட்டோம். சிட்டிபாபுவையும், அவனுக்குப் பின்னாடி இருக்கிற உண்மையான கொலையாளியையும் பிடிக்க வேண்டியது இனி உங்களோட வேலை ஸார். திஸ் ஈஸ் த ரிப்போர்ட் ஸார்!'

சொன்ன சார்லஸ் தன் கையில் வைத்து இருந்த பிரவுன் கவரை நம்பெருமாளிடம் நீட்ட, அவர் இருண்டு போன முகத்தோடு, கைநடுக்கத்தோடு பெற்றுக்கொண்டார்.

# நள்ளிரவு வானவில்!

**சா**ர்லஸ் நீட்டிய ஃபாரன்ஸிக் ரிப்போர்ட்டை வாங்கிக்கொண்ட டி.எஸ்.பி. நம்பெருமாள், அதை நிதானமாகப் படித்துப் பார்த்துவிட்டு, தன் அருகே அமர்ந்திருந்த கமிஷனர் ராஜகணேஷிடம் கொடுத்தார்.

“ப்ளீஸ் கோ த்ரூ இட் ஸார். இதுல உங்களுக்கு ஏதாவது சந்தேகம் இருந்தால், மிஸ்டர் சார்லஸ்கிட்டே கேட்டு க்ளியர் பண்ணிக்கலாம்.”

ரிப்போர்ட்டின் பக்கங்களை ராஜகணேஷ் புரட்ட, அறை நிசப்தத்தில் இருந்தது. ரூபேஷ் நெற்றியைப் பிடித்தபடி தலை கவிழ்ந்திருக்க, ரிதன்யா இறுக்கமான முகத்தோடு நாற்காலியில் சாய்ந்திருந்தாள்.

ரிப்போர்ட்டைப் படித்து முடிக்க முழுசாக இரண்டு நிமிஷங்களை எடுத்துக்கொண்ட ராஜகணேஷ், சார்லஸ்ஸை ஏறிட்டார்.

“யோகானந்தோட மரணத்துக்குக் காரணம் ‘ஏ ரேர் ஆஃப் த ரேரஸ்ட் பாய்ஸன்’னு போட்டிருக்கீங்களே... அந்த பாய்ஸனுக்கு பேர் கிடையாதா?”

“பேர் இருக்கு ஸார்...”

“பின்னே ஏன் மென்ஷன் பண்ணலை?”

“ஸாரி ஸார்... சில வகை பாய்ஸன்களோட பேரை ரிப்போர்ட்ல மென்ஷன் பண்ணக்கூடாதுன்னு எழுதப்படாத சட்டம் ஒண்ணு ஃபாரன்ஸிக் செக்ஷன்ல இருக்கு. பட், இந்த பாய்ஸனோட பூர்வீகத்தைப் பற்றியும் இதனோட ப்ளஸ், மைனஸ் பாயின்ட்ஸ் என்ன என்பதைப் பற்றியும் சொல்ல எந்தவிதமான ரெஸ்ட்ரிக்ஷனும் இல்லை. சொல்லலாமா ஸார்?”

“ப்ளீஸ்..!”



“ஸார்... அரிதிலும் அரிதான இந்த பாய்ஸனோட பூர்வீகம் தெற்கு சீனப் பகுதியில் இருக்கும் ஷாங்சீ என்கிற ஒரு மலைப்பிரதேசம். அந்த மலைப்பகுதியில் இருக்கும் ‘சைனீஸ் கோப்ரா’ எனப்படும், ஒரு அடி நீளம் மட்டுமே இருக்கும் பாம்புகளிடம் இருந்து விஷத்தை எடுத்து, அதை திடப்பொருளாக்கி உடைத்து பவுடராக மாற்றி, காப்ஸ்யூல்களில் அடைத்து ‘லைஃப் சேவிங் ட்ரக்ஸ்’ என்ற பெயரில் ஒரு சில குறிப்பிட்ட நாடுகளுக்கு மட்டும் சப்ளை செய்யப்படுகிறது. அந்த லிஸ்ட்டில் நம்ம நாடும் இருக்கு. உண்மையில் இந்த பாய்ஸனை ஒரு குறிப்பிட்ட பிக்கோகிராம் (Picogram) அளவு கொடுத்து ஒரு நோயாளியின் உயிரைக் காப்பாற்ற முடியும். பிக்கோகிராமின் அளவை அதிகப்படுத்தும்போது மட்டும்தான் இது ஒரு கொடிய விஷமாக மாறி உயிரைப் பறிக்கும். எந்த ஒரு விஷமும் ஒரு மனிதனின் மரணத்துக்கு தான் காரணம் என்பதை ஒப்புக்கொள்ளும். ஆனா,

இந்த பாய்ஸன் மட்டும் தன்னை வெளிப்படுத்திக்கொள்ளாமல் பதுங்கிக்கொண்டு மௌனம் சாதிக்கும். இந்த ஒரு காரணத்துக்காகவே இந்த பாய்ஸனுக்கு 'ஸ்டெப் மதர் பாய்ஸன்' என்கிற ஒரு செல்லப் பெயரும் உண்டு!"

"இந்த விஷத்தோட தாயகம் சீனா மட்டும்தானா... இல்லை, வேறு நாடு ஏதாவது உண்டா..?"

"சீனா மட்டும்தான் ஸார்..."

ராஜகணேஷின் பார்வை இப்போது ரூபேஷின் பக்கம் திரும்பியது.

"மிஸ்டர் ரூபேஷ்... உங்களுடைய ஐ.டி. கம்பெனிக்கும் சீனாவில் இருக்கிற ஐ.டி. கம்பெனி

களுக்கும் ஏதாவது தொடர்பு உண்டா..?"

"இல்ல ஸார்."

"ப்ளீஸ்..! அவசரப்பட்டு எந்த ஒரு பதிலையும் சொல்லாதீங்க. தொலைத்தொடர்பு தொழில்நுட்பம் சம்பந்தமா எந்த ஒரு சீனப் பிரதிநிதியாவது கடந்த வருடமோ, அதற்கு முந்தைய வருடமோ உங்கள் கம்பெனிக்கு வந்து பேச்சுவார்த்தை ஏதேனும் நடத்தியது உண்டா..?"

"சர்ட்டன்லி நாட் ஸார்... ஐயாம் ஷ்யூர் அபௌட் இட்!"

ராஜகணேஷ், ரிதன்யாவிடம் திரும்பி கையை நீட்டினார்... "அந்த போட்டோவைக் கொடுங்க மிஸஸ் ரிதன்யா!"

ரிதன்யா தன் கைப்பையைத் திறந்து, பத்திரப்படுத்தி வைத்திருந்த போஸ்ட் கார்டு சைஸ் போட்டோவை எடுத்து நீட்ட, அவர் அதை வாங்கி ரூபேஷிடம் கொடுத்தார்.

"ஒரு நிமிஷம் இந்த போட்டோவைப் பாருங்க..!"

ரூபேஷ் வாங்கிப் பார்த்தான்.

நாற்பது வயது வெளிநாட்டுப் பெண் ஒருத்தி கறுப்பு கவுனில் கேமராவைப் பார்த்து சிரித்தபடி இருந்தாள். உடையின் மேல் பட்டன் அவிழும் அபாயத்தில் இருந்தது.

"யார் ஸார் இது?" - ரூபேஷ் கேட்க, ராஜகணேஷ் சிரித்தார்...

"இந்தக் கேள்விக்கு நீங்கதான் பதில் சொல்லணும்!"

ரூபேஷ் திகைத்தான்.

"நான் பதில் சொல்லணுமா... எனக்கு எப்படி ஸார் தெரியும்?"

"இந்த வெளிநாட்டுப் பெண்ணோட போட்டோவை நான் எங்கேயிருந்து எடுத் தேன்னு சொன்னா உங்க ஆச்சர்யம் இன்னும் கொஞ்சம் அதிகமாகும்..."

"எங்கேயிருந்து எடுத்தீங்க..?"

ராஜகணேஷ் மறுபடியும் ரிதன்யாவைப் பார்க்க, அவள் மறுபடியும் தன்னுடைய கைபையைத் திறந்து அதிநவீன செல்போன் ஒன்றை எடுத்து வைத்தாள்.

"இது யாரோட செல்போன்னு தெரியுதா மிஸ்டர் ரூபேஷ்..?"

"தெரியலை ஸார்."

"இது உங்க அப்பாவோட செல்போன். உங்க கம்பெனியில் இருக்கும் அவருடைய பெர்சனல் ரூமை தரோவா செக் பண்ணிப் பார்த்தபோது சுவரோர ஷெல்ஃபின் மறைவான பகுதிக்குள்ளே இந்த செல்போன் ஒளித்து வைக்கப்பட்டு இருந்தது. மிகப்பெரிய வி.ஐ.பி-க்கள் மட்டுமே பயன்படுத்துகிற இது மாதிரியான அல்ட்ரா ஸ்மார்ட் செல்போன்கள் மூலமா தனக்குத் தெரிந்த, மிகவும் அறிந்த நபர்களை மட்டுமே தொடர்புகொள்ள முடியும்... இது மாதிரியான போன்கள் இந்தியாவுக்கு 2020-ல்தான் வரும்.

இந்த போனை உங்கப்பாவுக்கு தன்னுடைய பரிசா கொடுத்ததே இந்தப் பெண்தான்."

"உங்களுக்கு எப்படி ஸார் தெரியும்?"

"இந்த செல்போனை 'ஆன்' பண்ணுங்க. அது எப்படினு உங்களுக்கே தெரியும்!"

ரூபேஷ், ராஜகணேஷ் நீட்டிய செல்போனை வாங்கி அதை 'ஆன்' செய்ததுமே செல்போன் திரையில் அந்தப் பெண்ணின் போட்டோ ஸ்லோமோஷனில் உற்பத்தியாயிற்று.

போட்டோவுக்குக் கீழே ஆங்கிலத்தில் வார்த்தைகள்...

*Mr. Yog!*

*This is my humble gift...*

*Accept it.*

ரூபேஷ் குழப்பமான முகத்தோடு செல்போனிலிருந்து நிமிர்ந்தான்... "ஸார்! இந்த போன் விஷயம் எனக்குப் புதுசா இருக்கு. இந்த ஃபாரின் லேடி யார்னு எனக்குத் தெரியலை ஸார்."

"உங்க ஃபாதர் பெண்கள் விஷயத்தில் எப்படி..?"

"ஸார்.... என்னோட மதர் இறந்தபோது எனக்குப் பத்து வயசு. அந்த சமயத்துல அப்பாவுக்கு வயசு நாற்பதுதான். ஆனா, அவர் ரீமேரேஜ் பண்ணிக்கலை. ரிலேட்டிவ்ஸ், ஃப்ரெண்ட்ஸ் எல்லாருமே சொல்லிப் பார்த்தாங்க. அவர் கேட்கலை. என்னைப் பொறுத்தவரைக்கும் பெண்கள் விஷயத்துல அவர் மிஸ்டர் க்ளீன். எனக்குத் தெரிஞ்சு அவர்கிட்டே இருக்கிற ஒரே ஒரு கெட்ட பழக்கம் விதம்விதமான பிராண்ட்களில் லிக்கர் கன்ஸ்யூம் பண்றதுதான்."

"ஸோ... உங்களுக்கு இந்த ஃபாரின் லேடி யார்னு தெரியாது..?"

“தெரியாது ஸார்...”

“இந்த அல்ட்ரா ஸ்மார்ட் செல்போனை ஒரு மணி நேரமா கிளறிப் பார்த்தும் கேஸுக்கு பாஸிட்டிவ்வா ஒரு சின்னத் தகவல்கூட கிடைக்கலை. கிடைச்ச ஒரே விஷயம், இந்த போட்டோதான். பை த பை, உங்களுக்கு பசவன்குடியில் சொந்தத்துல ஒரு ஃபார்ம் ஹவுஸ் இருக்காமே... அது உண்மையா?”

“உண்மைதான் ஸார்..!”

“ஒவ்வொரு பௌர்ணமியன்னிக்கும் உங்க ஃபாதர் அந்த ஃபார்ம் ஹவுஸுக்குப் போயிடுவாராமே..?”

“இதை உங்களுக்கு யார் ஸார் சொன்னது?

“கடந்த 48 மணி நேர விசாரணையில் உங்க கம்பெனியின் ‘கீ போஸ்ட்’களில் இருக்கும் 119 பேரை விசாரிச்சதுல, மூணு பேர் இந்தத் தகவலைச் சொன்னாங்க. அது என்ன பௌர்ணமி நாட்களில் மட்டும் அந்த ஃபார்ம் ஹவுஸுக்கு விஜயம்?”

“ஃபார்ம் ஹவுஸ் அமைந்திருக்கிற அந்த இடம் ஒரு வெட்டவெளி ஏரியா ஸார். பௌர்ணமி நாட்களில் அந்த இடம் ரொம்பவும் அழகா இருக்கும்னு அப்பா சொல்வார். அதுக்காகவே அங்கே ஸ்டே பண்ணிட்டு வருவார்.”

“அது மட்டும்தான் காரணமா?”

“வேற என்ன காரணம் இருக்கும்னு நீங்க நினைக்கறீங்க..?”

“அந்த ஃபார்ம் ஹவுஸை சோதனை போட்ட பிறகுதான் அந்தக் காரணத்தைச் சொல்ல முடியும்...”

“இப்பவே வேணும்னாலும் பசவன்குடியில் இருக்கிற அந்த ஃபார்ம் ஹவுஸுக்குப் புறப்பட்டுப் போலாம் ஸார். நானும் சரி, என்னோட அப்பாவும் சரி... சட்டவிரோதமான காரியங்களுக்கு எதிரானவங்க. மிஸஸ்

ரிதன்யாகிட்டே நாங்க அன்னிக்கு கடுமையா நடந்துகிட்டதுக்குக் காரணம், எங்களுக்கு சம்பந்தமே இல்லாத ஒரு விஷயத்தைப் பத்தி என்கொயரி பண்ண வந்ததுதான்.”

“மிஸ்டர் ரூபேஷ்... நீங்க ஒரு விஷயத்தை தெளிவா புரிஞ்சுக்கணும். ‘நள்ளிரவு வானவில்’ என்கிற ஒரு விஷயத்துக்கும் உங்களுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லைனு சொல்றீங்க. ஆனா... திவாகர், பூங்கொடி என்கிற இரண்டு பேர் ரிதன்யாவின் வீட்டுக்கே போய் அவங்களை ஹவுஸ் அரஸ்ட் பண்ணி மிரட்டியிருக்காங்க. ‘நள்ளிரவு வானவில்’ மேட்டர் உங்களுக்கும் உங்க ஃபாதருக்கும் தெரியும்னு சொல்லியிருக்காங்க. அவங்க மிரட்டலுக்குப் பயந்துதான் ரிதன்யாவும் ஒயிட்ஃபீல்டில் இருந்த அந்த ஹோட்டலுக்கு உங்க அப்பாவைப் பார்க்க வந்தாங்க. அன்ஃபார்ச்சுனேட்லி யோகானந்த் வாஸ் மர்டர்ட் பை ஸம்படி. திவாகர், பூங்கொடி யார்னு உங்களுக்குத் தெரியுமா?

“ஸார்! நான் ஏற்கெனவே இந்தக் கேள்விக்குப் பதில் தெரியாதுனு சொல்லிட்டேன். அவங்களை யாரோ ‘மிஸ்கைடு’ பண்ணியிருக்காங்க... என்னோட ஃபாதர் கொலை செய்யப்பட்ட விஷயத்தை திவாகருக்கும், பூங்கொடிக்கும் ரிதன்யா தெரியப்படுத்தறதுக்கு முன்னாடியே அந்த ரெண்டு பேரும் காரை அதே இடத்துல நிறுத்திட்டு தப்பிச்சுப் போயிட்டாங்க. அப்படீன்னா, என்னோட அப்பா கொலை செய்யப்பட்ட விஷயம் முன்னாடியே அவங்களுக்குத் தெரிஞ்சிருக்கு.”

ரிதன்யா இடைமறித்துச் சொன்னாள்...

“ஸார்... பசவன்குடியில் இருக்கிற யோகானந்தின் ஃபார்ம் ஹவுஸுக்குப் போய் ஒரு கம்ப்ளீட் சர்ச் பண்ணினாலே நம்மகிட்டே இருக்கிற விடை தெரியாத பல கேள்விகளுக்கு விடைகள் கிடைக்கலாம்.”

ரூபேஷ் இருண்டு போன முகத்தோடு ராஜகணேஷை ஏறிட்டான். “ஸார்... என் அப்பாவோட உயிருக்கு ஆபத்து ஏற்பட்ட மாதிரி என்னோட உயிருக்கும் ஆபத்து ஏற்படலாம். ‘நள்ளிரவு வானவில்’ சம்பந்தப்பட்ட விஷயங்கள் எனக்கும் அப்பாவுக்கும் தெரியும்னு யாரோ தப்பா நினைச்சுக்

கிட்டு செயல்பட்டுக்கிட்டு இருக்காங்க. அதைத் தடுத்து நிறுத் தணும்னா உடனடியா உங்க இன்வெஸ்டிகேஷனை தீவிரப் படுத்தணும். அப்பாவோட ஃபார்ம் ஹவுஸுக்கு உடனே போலாம் ஸார். அங்கே என்னோட பார்வைக்குத் தட்டுப்படாத சில தடயங்கள் உங்க பார்வைக்குத் தட்டுப்படலாம்" - ரூபேஷ் சொல்லிக்கொண்டிருக்கும்போதே டி.எஸ்.பி. நம்பெருமாளுக்கு முன்பாக இருந்த இன்டர்காம் டெலிபோன் மெலிதாய் சிணுங்கிக் கூப்பிட்டது.



ரிஸீவரை எடுத்தார் நம்பெருமாள். மறுமுனையில் பேசிய நபரின் பேச்சை அரை நிமிஷ நேரம் செவிமடுத்துவிட்டு, பாறையாய் இறுகிப்போன முகத்தோடு ரிஸீவரை வைத்துவிட்டு, ராஜகணேஷிடம் திரும்பினார்.

“ஸார்... இந்த சைபர் க்ரைம் பிராஞ்ச் கட்டடத்தின் வளாகத்தில் இருக்கிற சி.சி.டி.வி. கேமராக்களின் ஒருங்கிணைப்பு அதிகாரியான மிஸ்டர் சர்வானந்த் கௌடா உங்களைத் தனிப்பட்ட முறையில் பார்த்து பேச விரும்பறார். உங்களுக்கு ஏதும் ஆட்சேபனை இல்லையே?”

“நோ... நோ... ஏதோ ஒரு முக்கியமான விஷயமா இருக்கப் போய்த்தானே அவர் என்னோட பேச விரும்பறார்...”- சொல்லியபடியே ராஜகணேஷ் எழுந்துகொண்டார்.

சைபர் க்ரைம் பிராஞ்ச் வளாகத்தின் கோடியில் இருந்தது சி.சி.டி.வி. கேமராக்களின் ஒருங்கிணைப்பு மையம். நடுத்தர வயதில் இருந்த சர்வானந்த் கௌடா, பாதி வழுக்கைத் தலையோடு பிரெஞ்ச் தாடி வைத்துக் கொண்டு தொண்ணூறு கிலோ உடம்போடு நாற்காலியில் நிரம்பியிருந்தார். உத்யோக ரீதியான புன்னகையோடு வரவேற்றவரின் உச்சரிப்பில் நல்ல ஆங்கிலம் தெரிந்தது...

“தேங்க்ஸ் ஃபார் யுவர் கம்மிங்!”

“நோ ஃபார்மாலிட்டீஸ்... கம் டு த பாயின்ட்.”

“உங்களோடு மட்டுமே ஒரு விஷயத்தைப் பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன்...”

“ப்ளீஸ்..!”

“டெல்லி ஃப்யூச்சர் மிராக்கிள் கம்பெனியில் பணியாற்றிக்கொண்டிருந்த ஞானேஷ் என்பவர் கொலை செய்யப்பட்டு, அவருடைய அஸ்தி சாம்பல், மீராவின் வீட்டு மொட்டை மாடியில் ஒரு மண்சட்டியில் வைக்கப் பட்டிருந்தது உண்மைதானே..?”

“உண்மைதான்..!”

“அந்த சாம்பலை டி.என்.ஏ. சோதனைக்கு அனுப்பி வைத்து ரிப்போர்ட் வாங்கினீர்களா?”

“வாங்கினேன்.”

“ரிப்போர்ட் சொன்ன செய்தி என்ன?”

“அது ஞானேஷின் சாம்பல்தான் என்று ரிப்போர்ட் உறுதிபடுத்தியிருந்தது.”

“அதை நீங்களும் நம்பிவிட்டீர்கள்..?”

“நேஷனல் பயாலாஜிகல் ரிசர்ச் யூனிட் கொடுத்த ரிப்போர்ட்டை நம்பாமல் இருக்க முடியுமா..?”

“அது பொய்..!”

“வாட் டூ யூ மீன்..?!”

“ஞானேஷ் உயிரோடு இருக்கிறார்... ஒரு ஏ.டி.எம். சென்டரில் பணம் எடுப்பதற்காக வரிசையில் நகர்ந்துகொண்டு இருக்கிறார். பார்க்கிறீர்களா..?”

சர்வானந்த் கௌடா சொல்லிக்கொண்டே தன் கையில் வைத்திருந்த ரிமோட் கன்ட்ரோலை எதிரேயிருந்த டி.வி. திரைக்கு முன்பாக நீட்டி, பட்டனை அழுத்தினார்.

நாற்பத்தியாறு அங்குல டி.வி-யின் திரை உயிர் பிடித்துக்கொண்டு வெளிச்சமாய் ஒளிர்ந்தது.

# நள்ளிரவு வானவில்!- 21

**ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்**

நள்ளிரவு வானவில்!

**டி**.வி திரையில் அந்தக் காட்சி நன்றாகவே தெரிந்தது.

தேசியமயமாக்கப்பட்ட ஒரு வங்கியின் ஏ.டி.எம் சென்டர் அது. ஆறு பேர் கொண்ட க்யூவில் மூன்றாவது நபராக நின்றிருந்தான் ஞானேஷ். ஷேவ் செய்யப்படாத முகம். ஒழுங்காக வாரப்படாத தலைக்கேசம். வலது கையில் சுருட்டி வைக்கப்பட்டிருந்த நாளிதழும், இடது கைவிரல்களின் இடுக்கில் ஏ.டி.எம் கார்டும் தெரிந்தன.



போலீஸ் கமிஷனர் ராஜகணேஷ் உறைந்துபோன விழிகளோடு டி.வி திரையையே பார்த்துக்கொண்டிருக்க, சி.சி.டி.வி கேமராக்களின் ஒருங்கிணைப்பு அதிகாரியான சர்வானந்த் கௌடா அவரிடம் திரும்பினார்.

"ஸார்... நீங்கள் குறிப்பிடும் ஞானேஷ் என்கிற நபர் க்யூவில் மூன்றாவது நபராக நின்றுகொண்டிருக்கிறார். சரியா?"

"சரிதான்..."

"அது ஞானேஷ்தானே... ஆர் யூ ஷ்யூர்?"

"ஷ்யூர்... நோ டவுட்! பை த பை... இது எந்த ஊரில் இருக்கிற ஏ.டி.எம் சென்டர்?"

"அந்த விவரத்தைச் சொன்னால் இன்னமும் ஆச்சர்யப்படுவீர்கள். ரூபேஷின் அப்பா யோகானந்த் எந்த ஹோட்டலில் வைத்து கொலை செய்யப்பட்டார்?"

"ஒயிட்ஃபீல்டில் இருக்கிற ப்ளஸன்ட் ஓஷன் ஹோட்டல்."

"அந்த ஹோட்டலுக்கு எதிரே நூறு மீட்டர் தூரத்தில் இருக்கிற ஒரு ஷாப்பிங் காம்ப்ளெக்ஸின் கிரவுண்ட் ஃப்ளோரில் இந்த ஏ.டி.எம் சென்டர் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. பெங்களூரில் ஒரு பெண் ஏ.டி.எம் சென்டரில் தாக்கப்பட்ட சம்பவத்தைத் தொடர்ந்து, சைபர் க்ரைம் பிராஞ்ச் சில வாரங்களாக முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை எடுத்து வருகிறது. அதில் ஒரு நடவடிக்கையாக, பெங்களூரிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் உள்ள ஏ.டி.எம் சென்டர்களில் பதிவான காட்சிகளை இந்த சி.சி.டி.வி ஒருங்கிணைப்பு மையத்துக்குக் கொண்டுவந்து ரேண்டமாக டி.வி-யில் போட்டுப் பார்த்து சந்தேகத்துக்குரிய நபர்களை போலீஸ் வளையத்துக்குள் கொண்டுவருவதுதான் இந்த டிபார்ட்மென்டின் வேலை. இந்த 'நள்ளிரவு வானவில்' விவகாரத்தில் சம்பந்தப்பட்ட எல்லா நபர்களின் போட்டோக்களும் சைபர் க்ரைம் பிராஞ்ச்சில் இருந்ததால், ஏ.டி.எம்-மின் க்யூவில் நின்றிருந்த ஞானேஷை என்னால் அடையாளம் கண்டுபிடிக்க முடிந்தது. மண்சட்டியில் அஸ்தியா வந்த ஒரு நபர் உயிரோடு இருப்பது எப்படி சாத்தியம்?"

“தப்பு எங்கேயோ நடந்திருக்கிறது!” என்று இறுகிப்போன முகத்தோடு சொன்ன ராஜகணேஷ், தன்னுடைய செல்போனை எடுத்து ஒரு எண்ணைத் தேடி எடுத்து கான்டாக்ட்ஸ் ஆப்ஷனுக்குப் போய் தட்டினார். மறுமுனையில் ரிங் போய், சில விநாடிகளில் ஒரு குரல் கேட்டது.

“யெஸ்...”

“நேஷனல் பயாலாஜிகல் ரிசர்ச் யூனிட்?”

“யெஸ்...”

“மிஸ்டர் கௌசிக் பாண்டே?”

“ஹோல்டிங்...”

“மிஸ்டர் கௌசிக்... ஐயாம் ராஜகணேஷ். சென்னை கமிஷனர் ஆஃப் போலீஸ்.”

“ஓ! ஹௌ ஆர் யூ ஸார்?”

“ஃபைன்..!”

“எனக்கு போன் செய் திருக்கிறீர்கள். எனிதிங்க் இம்பார்ட்டன்ட்?”

“யெஸ்... எனக்கு உண்மையான, ஒளிவு மறைவு இல்லாத தகவல் தேவைப்படுகிறது. உங்களால்தான் அதைக் கொடுத்து உதவ முடியும்.”

“வாட் டூ யூ மீன்?”

“சில நாட்களுக்கு முன் ஞானேஷ் என்பவரின் சாம்பலை டி.என்.ஏ. சோதனைக்கு உட்படுத்தி, அவருடைய தந்தை பார்த்தசாரதியின் டி.என்.ஏ-வோடு ஒப்பிட்டுப் பார்த்து, இறந்து போனது ஞானேஷ்தான் என்று ரிப்போர்ட் கொடுத்தது நீங்கள்தானே மிஸ்டர் கௌசிக்?”

“ஆமாம்..!”

“உண்மையாகவே அந்த அஸ்தி சாம்பலை சோதனைக்கு உட்படுத்தி டி.என்.ஏ கம்பேரிசன் செய்து பார்த்தீர்களா?”

“பார்த்தேன்..!”

“கொலை செய்யப்பட்டது ஞானேஷ்தான்... மண்சட்டியில் இருந்தது அவருடைய அஸ்திதான் என்று ரிப்போர்ட் அனுப்பியது நீங்கள்தானே?”

“ஆமாம்!”

“அந்த ஞானேஷ் இப்போது உயிரோடு இருக்கிறாரே... எப்படி?”

“எ... எ... என்ன சொன்னீர்கள்... உயிரோடு இருக்கிறாரா?”

“ஆமாம்... பெங்களூரில் இருக்கிற ஒரு ஏ.டி.எம் சென்டரில் பணம் எடுப்பதற்காக க்யூவில் காத்துக்கொண்டிருக்கிறார். ‘வாட்ஸ்அப்’பில் அந்தப் பதிவை உங்களுக்கு அனுப்பி வைக்கிறேன். பார்க்கிறீர்களா..?”

மறுமுனையில் மௌனம் பல விநாடிகளுக்கு நீடிக்கவே, ராஜகணேஷ் கேட்டார்... “என்ன மிஸ்டர் கௌசிக், பேச்சையே காணோம்?”

“இது மாதிரியான இக்கட்டான நிலைமை என்றைக்காவது ஒருநாள் வரும்; இப்போதைக்கு வராது என்று நினைத்திருந்தேன். ஆனால், இவ்வளவு சீக்கிரம் வரும் என்று நான் நினைக்கவில்லை...”

“என்ன சொல்கிறீர்கள்?”

“அது ஒரு பொய்யான ரிப்போர்ட்தான். அது ஞானேஷின் சாம்பல் கிடையாது. ஒரு பறவையின் சாம்பல்.”

“எதற்காக அப்படியொரு பொய் ரிப்போர்ட்?”

“மேலிடத்துக் கட்டளை.”

“யார் அது?”

“ஸாரி ஸார்... ஐயாம் ஹெல்ப்லஸ். நான் இந்த விஷயத்தில் உண்மையான தகவல்களைச் சொல்ல முடியாது.”

“இப்படி சொல்லி நீங்கள் தப்பித்துக்கொள்ள முடியாது மிஸ்டர் கௌசிக்! டிபார்ட்மெண்ட் ரீதியா நடவடிக்கை எடுக்கப்பட்டால் சட்டம் உங்களை நெருக்கும். அப்போது நீங்கள் உண்மையைச் சொல்லித்தான் தீரவேண்டும்!”

மறுமுனையில் கௌசிக் பாண்டே சிறிதும் அதிர்ச்சி காட்டாமல் சிரித்தார். “ஸார்... நீங்கள் எதுமாதிரியான நடவடிக்கை எடுத்தாலும் எனக்குக் கவலையில்லை. ஏனென்றால், உங்களுக்குப் பதில் சொல்லப்போவது நான் இல்லை.”

ராஜகணேஷ் மேற்கொண்டு பேசும் முன்பு கௌசிக் பாண்டே மறு முனையில் செல்போனை வைத்துவிட, எரிச்சலாகி தானும் செல்போனை அணைத்தார். எதிரில் உட்கார்ந்து தன்னையே பார்த்துக்கொண்டிருந்த சர்வானந்த் கௌடாவை ஏறிட்டார். உஷ்ணமான பெருமூச்சொன்றை வெளியேற்றிவிட்டு சொன்னார்...

“ஞானேஷ் உயிரோடுதான் இருக்கிறான்.”

“ஸோ... சி.சி.டி.வி. கேமரா ஞானேஷ் மாதிரி இருக்கிற ஒரு பொய்யான நபரைக் காட்டவில்லை?”

“ஆமாம்.”

“ஞானேஷ் இப்படியொரு கண்ணாமூச்சி விளையாட்டு விளையாட என்ன காரணம் ஸார்..?”

“தெரியவில்லை. நான் கண்டுபிடிக்க வேண்டிய பல உண்மைகளில் இதுவும் ஒன்று...” என்று சொல்லிக்கொண்டே எழ முயன்ற ராஜகணேஷ், மறுபடியும் நாற்காலியில் உட்கார்ந்தபடி குரலைத் தாழ்த்தினார்.

“நீங்கள் எனக்கு உதவி செய்ய வேண்டும்.”

“சொல்லுங்க ஸார்...”

“சி.சி.டி.வி கேமராவில் ஞானேஷ் பதிவாகியிருக்கிற விஷயம் அதிகாரபூர்வமா இங்கே யார் யாருக்கெல்லாம் தெரியும்?”

“உங்களுக்கும் எனக்கும் மட்டும்தான் தெரியும். இனிமேல்தான் டி.எஸ்.பி நம்பெருமாளுக்கு சொல்ல வேண்டும். அவருக்கு ஞானேஷைப் பற்றித் தெரிந்திருக்க நியாயமில்லை. அதனால்தான் உங்களுக்கு முதன்முதலா சி.சி.டி.வி கேமராவில் பதிவாகியிருந்த காட்சியைக் காட்டி அது ஞானேஷ்தானா என்று உறுதி செய்துகொண்டேன்.”

“இட்ஸ் ஓ.கே... இந்த விஷயம் தற்போது யாருக்கும் தெரியவேண்டாம். இதுபற்றி டி.எஸ்.பி நம்பெருமாளோடு நான் பேசிக் கொள்கிறேன்...”

அறையிலிருந்து வெளிப்பட்டார் ராஜ கணேஷ். அந்த நீண்ட வராந்தாவில் யோசனையோடு நடந்து, டி.எஸ்.பி நம் பெருமாளின் அறைக்குள் நுழைந்தார்.

நம்பெருமாள் செல்போனில் யாரிடமோ பேசிக்கொண்டிருக்க, ரூபேஷ் தன் இடது கை விரல்களால் நெற்றியைத் தேய்த்தபடி தலைகுனிந்து உட்கார்ந்திருந்தான். ராஜகணேஷைப் பார்த்ததும் நம்பெருமாள் வேகவேகமாய் செல்போன் பேச்சை முடித்துக்கொண்டு நாற்காலியைக் காட்டினார்.

“ப்ளீஸ் ஸார்...”

ராஜகணேஷ் உட்கார்ந்ததும் நம்பெருமாள் கேட்டார்...

“சி.சி.டி.வி. கேமரா யூனிட்டில் எனிதிங் இம்பார்ட்டன்ட் ஸார்?”

அறையில் ரூபேஷ் இருந்த காரணத்தால் ராஜகணேஷ், ஞானேஷைப் பற்றிய செய்தியைச் சொல்லாமல் “நத்திங்” என்று சொன்னார். “சர்வானந்த் கௌடா சில சி.சி.டி.வி. கேமரா பதிவுகளைக் காட்டி உங்கள் விசாரணைக்கு ஏதாவது உபயோகப்படுமா என்று கேட்டார். நானும் பார்த்தேன்.

ஒயிட்ஃபீல்ட் ப்ளஸன்ட் ஓஷன் ஹோட்டலுக்கு வெளியே நடந்த சில சாதாரண நிகழ்வுகள் அவை.”

தலைகுனிந்து உட்கார்ந்திருந்த ரூபேஷ் நிமிர்ந்தான்.

“ஸார்... இந்த ‘நள்ளிரவு வானவில்’ பிரச்னையை வெகு சீக்கிரமா ஒரு முடிவுக்குக் கொண்டுவரணும். பசவன்குடியில் இருக்கிற என் அப்பாவோட ஃபார்ம் ஹவுஸைப் பார்க்க விரும்பறதா சொன்னீங்க... புறப்பட்டு போலாமா?’

“ஏன் இப்படி அவசரப்படறீங்க ரூபேஷ்..?”

“உயிர் பயம் ஸார்! எங்க அப்பாவுக்கு நேர்ந்த மாதிரியான ஒரு மரணம் எனக்கும் ஏற்பட்டுவிடக்கூடாதே..!”

“இது தேவையில்லாத பயம்! இப்போ நீங்க பாதுகாப்பான போலீஸ் வளையத்துக்குள்ளே இருக்கீங்க... கொலையாளி பிடிபடும் வரை உங்களுக்கு எந்த ஆபத்தும் வராதபடி பார்த்துக்க வேண்டியது என்னோட பொறுப்பு!”

“கொலையாளியோட திறமையை நீங்க குறைச்சு மதிப்பிட்டுப் பேசிட்டு இருக்கீங்க ஸார். ‘ப்ளஸன்ட் ஓஷன்’ ஹோட்டலில் இருந்த அத்தனை செக்யூரிட்டி ஏற்பாடுகளையும் ஏமாத்திட்டு, என் அப்பாவோட உயிரை சுலபமா எடுத்துட்டுப் போற அளவுக்கு கொலையாளியோட செயல்பாடு இருந்திருக்கு. வெளியே எனக்கு எந்தப் பாதுகாப்பும் இல்லை... மரணம் என்னை நெருங்க எவ்வளவு நேரமாகும்?”

ராஜகணேஷை ஏறிட்டார், நம்பெருமாள்.

“ஸார்... ரூபேஷ் பயப்படறதுல நியாயம் இருக்கு. ‘நள்ளிரவு வானவில்’ விவகாரம் சம்பந்தமா நடந்த மரணங்களுக்கும், ரூபேஷுக்கும் அவரோட அப்பாவுக்கும் எந்த ஒரு சம்பந்தமும் இல்லை. சம்பந்தம் இருக்கிறதா

நினைச்சுட்டு யாரோ பழிவாங்கும் படலத்தை ஆரம்பிச்சிருக்காங்க.... இதை நாம உடனடியா தடுத்தாகணும்!"

"நான் என்னோட கெஸ்வொர்க்கை சொல்லட்டுமா ஸார்..?" - கேட்டுக்கொண்டே பக்கத்து அறையிலிருந்து வெளிப்பட்டாள் ரிதன்யா. எல்லோருடைய பார்வையும் அவள் மேல் திரும்பியது.

"சொல்லு!" என்றார் நம்பெருமாள்.

"நள்ளிரவு வானவில் விவகாரத்துக்கும் யோகானந்த்துக்கும் மட்டும் ஏதாவது லிங்க் இருந்திருக்கலாம். ரூபேஷுக்கு அது தெரியாமலும் இருக்கலாமில்லையா?"

"இப்ப நீ என்ன சொல்ல வர்றே?"

"கொலையாளியோட எய்ம் யோகானந்த் மட்டும்தான். ரூபேஷ் இல்லைன்னு சொல்றேன். பசவன்குடியில் இருக்கிற யோகானந்த்தோட ஃபார்ம் ஹவுஸை தரோவா செக் பண்ணினா நிச்சயமா ஏதாவது ஒரு யூஸ்ஃபுல் க்ளூ கிடைக்கும்ங்கிறது என்னோட நம்பிக்கை..."

"இனியும் லேட் பண்ண வேண்டாம்... கிளம்புவோம்" எழுந்தார் ராஜகணேஷ்.

பசவன்குடியை நோக்கி கார் சீரான வேகத்தில் விரைந்துகொண்டிருந்தது.

காரை ரூபேஷ் ஓட்ட, அவன் அருகில் ராஜகணேஷும் பின் ஸீட்டில் நம்பெருமாளும் ரிதன்யாவும் உட்கார்ந்திருந்தார்கள். சாலையின் இருபுறமும் பெங்களூரு நகரம் கட்டடங்களால் நிரம்பி மூச்சுத் திணறிக்கொண்டிருந்தது. காருக்குள் நிலவிய வேண்டாத மௌனத்தை ராஜகணேஷ் கலைத்தார்.

"உங்க மூணு பேர்ல ஞானேஷை நேர்ல பார்த்தவங்க யாரு?"

“யாருமே இல்ல ஸார்... பேரைக் கேள்விப்பட்ட தோட சரி. இன்னிக்கு நீங்க காட்டின போட்டோவைப் பார்த்துதான் ஞானேஷ் எப்படியிருப்பான்னு தெரிஞ்சுகிட்டோம்!” - ரிதன்யா சொல்ல, நம்பெருமாள் தொடர்ந்தார்...

“ஸார்! நான் ஒரு விஷயம் சொன்னா நீங்க தப்பா நினைச்சுக்கமாட்டீங்களே?”




“இதுல நான் தப்பா நினைக்க என்ன இருக்கு மிஸ்டர் நம்பெருமாள்? இந்தக் கேஸ் விஷயமா நீங்க எதுமாதிரியான கருத்தை வேணும்னாலும் தைரியமா சொல்லலாம். அந்தக் கருத்து கேஸுக்கு உபயோகமானதா இருந்தா நல்லதுதானே?”

“ஸார்... இந்த நள்ளிரவு வானவில் ப்ராஜெக்ட்டை தயார் பண்ணி அதை வெற்றிகரமா முடிச்சது மொத்தம் ஏழு பேர்... ஞானேஷ் உள்பட. இதில் ஆறு பேர் பெண்கள். இவங்க ஆறு பேருமே ஊட்டி மலைப்பாதையில் வேன் கவிழ்ந்து இறந்துட்டாங்க. அவங்க இறந்ததுக்கு ஆதாரம் இருக்கு. ஆனால், ஞானேஷ் இறந்ததுக்கு ஆதாரம் இல்லை. மண்சட்டியில் அஸ்தி வந்ததா சொன்னீங்க. அந்த அஸ்தி சாம்பலை சோதனைக்கு அனுப்பி டி.என்.ஏ கம்பேரிசன் செய்ததில் அது ஞானேஷ்தான்னு கன்ஃபார்ம் ஆனதா சொன்னீங்க... இல்லையா?”

“ஆமா...”

“அந்த டெஸ்ட் ஏன் பொய்யா இருக்கக்கூ டாது?”

ராஜகணேஷ் லேசாக திடுக்கிட்டு, பிறகு இயல்பான நிலைமைக்கு வந்தார்.

‘நம்பெருமாள் விஷயம் தெரிந்து பேசுகிறாரா இல்லை தெரியாமல் பேசுகிறாரா..?’

“என்ன ஸார் சைலன்ட் ஆகிட்டீங்க...? டி.எஸ்.பி-யோட சந்தேகம் சரியா தப்பா...?” - காரை ஓட்டிக்கொண்டிருந்த ரூபேஷ் கேட்டான்.

“நேஷனல் பயாலாஜிகல் ரிசர்ச் யூனிட்ல கொடுத்த ரிப்போர்ட் தப்பா இருக்க வாய்ப் பில்லையே?”

“ஒருவேளை தப்பா இருக்க வாய்ப்பு இருந்தா?”

“ஞானேஷ் உயிரோடு இருக்கான்னு அர்த்தம்.”

“அப்படி அவன் உயிரோடு இருந்தா தப்பானவன்தானே..?” - டி.எஸ்.பி. நம்பெருமாள் சொல்லிக்கொண்டிருக்கும்போதே அவருடைய வாய்க்குள் சட்டென்று உமிழ்நீரின் அளவு அதிகமாயிற்று. புளிப்புச் சுவையை உணர்ந்தார். உதடுகள் ஈரமாயின.

‘என்ன இது?’ திடுக்கிட்டுப் போனவராய் தன்னுடைய கர்ச்சீஃப்பை எடுத்து வாயை ஒற்றி எடுத்துப் பார்த்தார்.

ரத்தம்.

அடுத்த விநாடியே நம்பெருமாளின் இதயம் இரும்புக் குண்டாய் கனக்க ஆரம்பித்தது.

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

# நள்ளிரவு வானவில்!

கமிஷனர் ராஜகணேஷ், ரிதன்யா இருவரும் கர்நாடக டி.ஜி.பி. ருத்ரப்பாவுக்கு முன்பாக இறுகிப்போன முகங்களோடு உட்கார்ந்திருக்க, அவர் பிசிறடிக்காத ஆங்கிலத்தில் நிதானமான குரலில் கேட்டார்...

“டி.எஸ்.பி. நம்பெருமாளின் போஸ்ட்மார்ட்டம் என்ன சொல்கிறது..?”



“ரூபேஷின் அப்பா யோகானந்த், ஒரு புது வகையான விஷத்தை வைத்து எப்படி கொலை செய்யப்பட்டாரோ, அதேபோல் டி.எஸ்.பி. நம்பெருமாளும் கொலை செய்யப்பட்டிருக்கிறார். பசவன்குடியில் உள்ள யோகானந்த்தின் ஃபார்ம் ஹவுஸுக்கு நாங்க நான்கு பேரும் காரில் போய்க்கொண்டு இருந்தபோது, நம்பெருமாளுக்கு திடீரென்று வாய்க்குள் உமிழ்நீரின் சுரப்பு அதிகமாகி, அதில் ரத்தம் கலந்து வழிய ஆரம்பித்துவிட்டது. நாங்கள் உடனே பதற்றமடைந்தோம். நம்பெருமாளால் பேச முடியவில்லை. இரண்டு கைகளாலும் இதயத்தைப் பிடித்துக்கொண்டு அவர் துடிக்க ஆரம்பித்தார். காரை ஓட்டிக்கொண்டிருந்த ரூபேஷ், உடனடியாக மால்வாடிக்கு அருகில் உள்ள ஹாஸ்பிடலுக்கு காரை செலுத்தினார். ஆனால், ஹாஸ்பிடலுக்கு போவதற்கு முன்பாகவே நம்பெருமாளின் உயிர் பிரிந்துவிட்டது!”

டி.ஜி.பி. ருத்ரப்பா தன்னுடைய பரந்த முன்வழுக்கையை இடது கை விரல்களால் ஸ்லோமோஷனில் தேய்த்துக்கொண்டே கமிஷனர் ராஜகணேஷை ஏறிட்டார்.



"யோகானந்த் கொலை செய்யப்படு வதற்குக் காரணம் இந்த 'நள்ளிரவு வானவில்' ப்ராஜெக்ட் சம்பந்தப்பட்ட பிரச்னை என்றால், நம்பெருமாள் கொலை செய்யப்படுவதற்கு என்ன காரணம்?"

"அதே 'நள்ளிரவு வானவில்' ப்ராஜெக்ட் பிரச்னைதான் ஸார்" என்றாள் ரிதன்யா.

"எப்படி... நம்பெருமாள் ஒரு போலீஸ் ஆபீஸர். அவர் மேல் கொலையாளிக்கு என்ன பகை இருக்க முடியும்?"

"நான் இங்கே இப்போது ஓர் உண்மையைச் சொல்லியாக வேண்டும் ஸார்..."

"என்ன உண்மை?"

“டி.எஸ்.பி. நம்பெருமாள் என்னுடைய இம்மீடியட் பாஸ். இந்த ‘நள்ளிரவு வானவில்’ ஒரு விபரீதமான ப்ராஜெக்ட். அதைப்பற்றின எல்லா உண்மைகளும் யோகானந்த்துக்கும் அவருடைய சன் ரூபேஷுக்கும் தெரியும் என்கிற உண்மை நம்பெருமாளுக்கும் தெரியும். எனக்கும் தெரியும். ஆனால், இந்த விஷயத்தை அவர் ஆர்வம் இல்லாமல் நிதானமாகக் கையாண்டார். ஒரு கட்டத்தில் எனக்குக் கூட எச்சரிக்கை விடுவது போல் பேசினார். இரண்டு வருடங்களுக்கு முன்பு கன்னட அரசியல் பத்திரிகையொன்று, யோகானந்த் - நம்பெருமாள் இரண்டு பேரையும் இணைத்து ஒரு புகைப்படத்தை வெளியிட்டு, பரபரப்பை ஏற்படுத்தியது. ஆனால், அந்தச் செய்தி எந்தக் காரணத்தினாலோ அப்படியே அடங்கிப் போயிற்று. இப்போது... யோகானந்த் எந்த முறையில் விஷம் வைத்து கொலை செய்யப்பட்டாரோ, அதே முறையில் நம்பெருமாள் கொலை செய்யப்பட்டிருக்கிறார்.”

“யோகானந்த் சாப்பிட்ட மதுவில் விஷம் கலக்கப்பட்டு இருந்தது. அவர் இறந்தார். நம்பெருமாள் உங்களோடு காரில் பயணித்தவர். அவர் வழியில் என்ன சாப்பிட்டார்?”

ராஜகணேஷ் குறுக்கிட்டு சொன்னார்...

“ஸார்! நாங்கள் காரில் பசவன்குடிக் குப் பயணம் செய்வதற்கு முன்பாக அவர் உபயோகித்த மினரல் வாட்டர் பாட்டிலில் இருந்த நீரைக் குடித்திருக் கிறார். அந்த பாட்டிலில் விஷம் கலக்கப்பட்டு இருக்கலாம் என்பது போஸ்ட்மார்ட்டம் செய்த டாக்டர்களின் கணிப்பு. அதற்கேற்றாற்போல் அவருடைய அறையில் இருந்த அந்த மினரல் வாட்டர் பாட்டிலைத் தேடியபோது அது கிடைக்கவில்லை. நாங்கள் காரில் ஏறியதுமே அந்த பாட்டிலை யாரோ அப்புறப்படுத்தியிருக்கிறார் கள். அவருடைய அலுவலகத்தில் விசாரித்தால், யாரிடமிருந்தும் உபயோகமான எந்தத் தகவலும் கிடைக்கவில்லை. அதேபோல் ப்ளஸன்ட் ஓஷன் ஹோட்டலில் யோகானந்த்துக்கு மதுவை ஊற்றிக் கொடுத்த பேரர், போலீஸ் விசாரணைக்குப் பயந்து தலைமறைவானான். ஆனால், அடுத்த நாளே ஒரு லாயரோடு வந்து, போலீஸில் சரண் அடைந்து, ‘நான் மதுவில் எந்த

விஷத்தையும் கலக்கவில்லை' என்று சொல்லி, தன்னுடைய வாதத்தை நியாயப்படுத்திவிட்டு, இப்போது ஜாமீனில் வெளியே வந்துவிட்டான்."

"கொலையாளியின் அடுத்த குறி... ரூபேஷ்தான்!"

"கண்டிப்பா ஸார்... ரூபேஷ் இப்போதே மரணபயத்தில் உறைந்து போயிருக்கிறான். அவனுடைய வீட்டுக்குப் பலத்த போலீஸ் காவல் போட்டிருந்தாலும் எதையுமே சாப்பிடப் பயப்படுகிறான்.

"கொலையாளி ஞானேஷ்தான் என்பதில் உங்களுக்கு இரண்டாவது கருத்து இருக்கிறதா மிஸ்டர் ராஜ கணேஷ்?"

"யெஸ் ஸார்... என்னுடைய சந்தேகம் எல்லாம் ரிதன்யாவை வீட்டுக்குள் வைத்து மிரட்டிய அந்த திவாகர், பூங்கொடி மேல்தான். யோகானந்த்தைக் கொலை செய்யும் நோக்கத்தோடுதான் ரிதன்யாவையும் அழைத்துக்கொண்டு ஒயிட் ஃபீல்டுக்கு வந்திருக்க வேண்டும்."

"கொலைக்கான மோட்டிவ்..?"

"ஐயாம் நாட் ஹேவிங் எனி கெஸ் வொர்க் ஸார். தலைமறைவான அல்லது கடத்தப்பட்ட அந்த இரண்டு பேரும் போலீஸ் கையில் பிடிபட்டால்தான் உண்மைகள் வெளியே வரும்!"

"எனக்கென்னவோ இது ஞானேஷின் பழிவாங்கும் படலம் போல் தெரிகிறது. உயிரோடு இருப்பவன் எதற்காக தான் இறந்துவிட்டதாக எல்லோரும் நினைக்க வேண்டும் என்று நாடகமாட வேண்டும்?"

"அதுவும் புரியாத புதிர்தான் ஸார். ஞானேஷ், பெங்களூரில் இருப்பது உறுதியாகிவிட்டதால் அவனைத் தேடிக் கண்டுபிடிக்க போலீஸின் தனிப்படைஒன்று எல்லாப்பக்கமும் வலையை வீசி வைத்திருக்கிறது. எப்படியும் இரண்டு அல்லது மூன்று நாட்களுக்குள் ஞானேஷை மடக்கிவிட முடியும் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது ஸார்" - ராஜகணேஷ் சொல்லிக்கொண்டு இருக்கும்போதே, ரிதன்யாவின் கைப்பையில் இருந்து

செல்போன் தன் ரிங்டோனை வெளியிட்டது. செல்போனை எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தாள்.

அவளுடைய கணவன் ஹரிகிருஷ் ணன். செல்போனை எடுத்து தன் காதுக்கு ஒற்றி மெள்ளப் பேசினாள்...

“என்னங்க..! நான் இப்போ முக்கிய மான மீட்டிங்ல இருக்கேன். அப்புறமா பேசட்டுமா?”

டி.ஜி.பி. ருத்ரப்பா கையமர்த்தினார். “மிஸஸ் ரிதன்யா! நீங்கள் உங்கள் கணவரிடம் தாராளமா பேசலாம். நம்முடைய மீட்டிங் ஓவர். மேலும் இந்த அறையில் இருந்துகொண்டு நீங்கள் செல்போனில் பேசினால் வாய்ஸ் பிரேக் ஆகும். வெளியே போய் பேசிவிட்டு வாருங்கள். சூடாக காபி சாப்பிட்டுவிட்டு கிளம்புவோம்.”

“தேங்க்யூ ஸார்” என்று சொன்ன ரிதன்யா, அந்த அறையிலிருந்து வெளிப் பட்டு காரிடாருக்கு வந்து ஓர் ஓரமாய் நின்றுகொண்டு கணவனிடம் பேச்சைத் தொடர்ந்தாள்...

“என்னங்க! நம்ம அபிநய் இப்போ எப்படியிருக்கான்... ஃபீவர் மறுபடியும் வரலையே..?”

“வரலை... இன்னிக்குக் காலையில் ரெண்டு இட்லி சாப்பிட்டான். இனி எந்தப் பிரச்னையும் இல்லைனு டாக்டர் சொல்லிட்டார். நான் நாளைக்குக் காலை யில் கோயம்புத்தூரிலிருந்து அபிநய்யையும் கூட்டிக்கிட்டு ஃப்ளைட்ல பெங்களூர் வந்துடலாம்னு இருக்கேன். அபிநய் ‘அம்மா அம்மா’ என்று புலம்பிட்டே இருக்கான்...”

“சரிங்க... கூட்டிட்டு வந்துடுங்க. எனக்கும் அவனைப் பார்க்கணும்போல் இருக்கு...”

“உனக்கு அங்கே எந்தப் பிரச்னையும் இல்லையே?”

“ஒரு பிரச்னையும் இல்லை. ‘நள்ளிரவு வானவில்’ பிரச்னை ஒரு முடிவை நோக்கிப் போயிட்டிருக்கு. அதுக்கு சீக்கிரமாவே விடை கிடைக்கும்.”

“நான் சொன்னது ஞாபகம் இருக்கட் டும்...”

“என்ன சொன்னீங்க?”

“இனிமேல் உனக்கு இந்த போலீஸ் வேலை வேண்டாம்!”

“அதைப்பத்தி அப்புறமா பேசி ஒரு முடிவு எடுப்போம். நீங்க மொதல்ல கோயம்புத்தூரிலிருந்து புறப்பட்டு வாங்க..!” செல்போனை அணைத்து கைப்பைக்குள் போட்டுக்கொள்ள முயன்ற ரிதன்யா, சுற்றும்முற்றும் ஒரு தடவை பார்த்துவிட்டு, செல்போனில் கான்டாக்ட்ஸ் ஆப்ஷனுக் குப் போய் ஒரு எண்ணைத் தேய்த்தாள். மறுமுனையில் உடனே ரிங் போயிற்று. அடுத்த சில விநாடிகளில் ஓர் ஆண் குரல் ‘ஹலோ’ என்றது.

ரிதன்யா குரலைத் தாழ்த்தினாள்.

“என்ன பண்ணிட்டிருக்கீங்க ஞானேஷ்?”

“ஹோட்டல் ‘மௌரியா’வுக்குப் போய்க் கிட்டிருக்கேன்”

“எதுக்கு?”

“பார்ட்டியைப் பார்க்கத்தான்!”

“பார்ட்டி யாரு..?”

“ஜோர்டானிலிருந்து வந்திருக்காங்க... மொத்தம் மூணு பேர். ‘எம்.என்.ஆர்’ ப்ராஜெக்ட்டைப்பத்திப் பேசி ஒரு ஹ்யூஜ் ரேட் ஃபிக்ஸ் பண்ணணும்.”

“ஜாக்கிரதை ஞானேஷ்..! நீங்க உயிரோடு இருக்கிற விஷயம் தெரிஞ்சு, கர்நாடகாவின் போலீஸ் படை பெங்களூருவின் எட்டு திசைகளிலும் வலைவீசித் தேடிக்கிட்டு இருக்கு!”

ஞானேஷ் மறுமுனையில் சிரித்தான்... "நான் ஒன்பதாவது திசையில் இருக்கேன் என்கிற விஷயம் அவங்களுக்குத் தெரியாது. சரி... அங்கே என்ன நிலைமை?"

"வழக்கம் போல் உயரதிகாரிகள் இன்வெஸ்டிகேஷன் 'க்யூப்'களில் உட்கார்ந்து 'இன் கேமரா கான்வெர்சேஷன்'களை நடத்திக்கிட்டு இருக்காங்க. நானும் என்னோட பங்குக்கு ஏதோ பேசிட்டிருக்கேன். இப்பகூட டி.ஜி.பி. ருத்ரப்பா, சென்னை போலீஸ் கமிஷனர் ராஜகணேஷ், நான்... மூணு பேரும் உட்கார்ந்து பேசிக்கிட்டு இருக்கும்போதுதான் என்னோட ஹஸ்பண்ட் எனக்கு போன் பண்ணினார். அறைக்குள்ளே உட்கார்ந்து பேசினா... வாய்ஸ் பிரேக்காகும்ங்கிறதால வெளியே வந்து அவர் கூட பேசினேன். பேசி முடிச்சதும் எனக்கு உங்க ஞாபகம் வந்தது. பக்கத்துல யாரும் இல்லாததால நான் உங்களுக்கு போன் பண்ணினேன்."

"ரூபேஷ் எப்படியிருக்கான்?"

"தேவையான அளவு போலீஸ் பாதுகாப்பு கொடுத்திருக்கோம். இருந்தாலும் பயந்து செத்துட்டிருக்கான்."

"பயத்திலேயே சாகட்டும்! சரி... ரிதன்யா, நான் ஹோட்டல் மௌரியாவுக்கு வந்துட்டேன். பார்ட்டிகிட்டே பேசிட்டு ராத்திரி பதினோரு மணிக்கு மேல உங்களுக்கு போன் பண்றேன். அதுக்கு முன்னாடி ஏதாவது அர்ஜென்ஸி இருந்தா எனக்கு ஒரு 'மிஸ்டு கால்' கொடுங்க. நிலைமை எனக்கு சாதகமா இருந்தா உடனே போன் பண்றேன்!"

"ஓ.கே... ஞானேஷ்! டேக் கேர்... இன்னிக்கு என்ன கெட்டப்..?"

"போகப் போகிற இடம் ஃபைவ் ஸ்டார் ஹோட்டல். அதனால ஃபுல்சூட் இன் க்ரே கலர். வயசு ஃபார்ட்டி ப்ளஸ்னு நினைக்கிற மாதிரி பெப்பர் சாலட் ஹேர் ஸ்டைல் பிரெஞ்ச் தாடி, மீசை. கண்ணாடிக்கு முன்னாடி நின்னு பார்த்தப்ப எனக்கே என்னை அடையாளம் தெரியலை!"

"சரி... காரிடார்ல யாரோ வர்ற மாதிரி இருக்கு. ராத்திரி பேசுவோம்!" - செல்போனின் இணைப்பை அணைத்து, அதைக் கைப்பைக்குள் போட்டுக்கொண்டு டி.ஜி.பி அறையை நோக்கிப் போனாள் ரிதன்யா.

**மௌ**ரியா எக்சல்சையர் ஹோட்டலின் வரவேற்பறைக்குள் நுழைந்தான் ஞானேஷ்.

மின்சார வெளிச்சத்தை வெள்ளமென உமிழ்ந்துகொண்டிருந்த மெகா சைஸ் லஸ்தர் விளக்குகளுக்குக் கீழே சிறகுகள் இல்லாத தேவதைகள் போல் மூன்று ரிசப்ஷனிஸ்ட் பெண்கள் தெரிய, மையமாக இருந்த பெண்ணை நோக்கிப் போனான் ஞானேஷ். அவளுடைய கண்களும் உதடுகளும் போட்டி போட்டுக்கொண்டு புன்னகைக்க "யெஸ்..." என்றாள்.

''ஒன் மிஸ்டர் ஜியா கலீத் ஃப்ரம் ஜோர்டான். ரூம் நம்பர் ப்ளீஸ்...''

"வாட் அபௌட் யூ ஸார்?"

"ஐயாம் ஃபாஸில் ஃப்ரம் ஹைதராபாத்."

ரிசப்ஷனிஸ்ட் பெண் ஆங்கிலத்தில் தொடர்ந்தாள்... "அவரை எதற்காகப் பார்க்க வேண்டும்?"

"எனக்கு அவர் அப்பாயின்ட்மென்ட் கொடுத்திருக்கிறார்."

"ஒன் மினிட் ஸார்..!" - சொன்னவள், இன்டர்காமின் ரிஸீவரை தன் பொன்னிற விரல்களால் எடுத்து, அவரைத் தோல் போன்ற காதின் மடலோடு உரசவிட்டாள். லிப்ஸ்டிக் பூசாமலேயே சிவந்து போயிருந்த உதடுகள், முப்பது விநாடிகள் அசைந்தன. பின்னர் ரிஸீவரை வைத்துவிட்டு, தன் புன்னகையின் பரப்பைப் பெரிதாக்கிக் கொண்டே ஞானேஷை ஏறிட்டாள்.

''செகண்ட் ஃப்ளோர், ரூம் நம்பர் டூ நாட் ஃபைவ் ஸார். ஹி ஈஸ் வெயிட்டிங் ஃபார் யூ..."

"தேங்க்யூ..!"

ஞானேஷ் லிஃப்ட்டை நோக்கி நடந்தான். அடுத்த சில விநாடிகளில் இரண்டாவது மாடியின் வராந்தாவில் கடைசியாக இருந்த 205 எண்ணிட்ட அறைக்கு முன்பாக நின்று அழைப்பு மணிக்கு வேலை கொடுத்தான்.



விரிந்த பளபளப்பான ரோஸ்வுட் கதவுக்குப் பின்னால் அந்த ஜியா கலீத், ஆறரையடி உயரத்தில் நின்றிருந்தார். செம்பழுப்பில் தலைமுடியும் தாடியும் அடர்த்தியாய் தெரிய, பைஜாமா போன்ற வெள்ளுடுப்பை தன் ஐம்பது வயது உடம்புக்குக் கொடுத்திருந்தார். நல்ல ஆங்கிலம் பேசினார்.

“வெல்கம் மிஸ்டர் ஞானேஷ்... உங்களுக் காகத்தான் எல்லா வேலைகளையும் முடித்துவிட்டு காத்திருக்கிறேன்.”

ஞானேஷைத் தழுவிக்கொண்டபோது ரோஜாப்பூக்களில் நனைந்ததுபோல் அவர் பூசியிருந்த அத்தர் சென்ட் மணத்தது.

“மன்னிக்க வேண்டும் ஜியா கலீத். இங்கே கொஞ்சம் நிலைமை சரியில்லை. சுற்றும்முற்றும் பார்த்துவிட்டுத்தான் தெருவில் கால் வைக்க வேண்டியிருக்கிறது. இன்றைக்கு நாம் ‘மிட்நைட் ரெயின்போ’ பற்றிப் பேசிவிடலாம் இல்லையா..?”

‘‘கண்டிப்பாகப் பேசியாக வேண்டும். ஓர் ஒப்பந்தத்தையும் தயாரித்து பரஸ்பரம் நாம் மாற்றிக்கொள்ள வேண்டும். இந்த வாய்ப்பை நழுவவிட்டால், இனிமேல் இதுபோன்றதொரு வாய்ப்பு நமக்கு கிடைக் காமலே போய்விடும். பக்கத்து அறைகளில் என்னுடைய இரண்டு உதவியாளர்கள் தங்கியிருக்கிறார்கள். அவர்களையும் இங்கே வரவழைத்த பிறகு நீங்கள் மிட்நைட் ரெயின்போவைப் பற்றியும், அதன் செயல்பாடுகள் பற்றியும் விளக்கமாக எடுத்துச் சொல்லலாம். இதுபோன்ற கம்ப்யூட்டர் சம்பந்தப்பட்ட விஷயங்களில் அவர்களுக்குத்தான் நிறைய சந்தேகங்கள் தோன்றும்.’’

- சொன்ன ஜியா கலீத் தன்னுடைய செல்போனை எடுத்துக்கொள்ள, ஞானேஷ் அங்கிலிருந்த சோபாவில் சாய்ந்தான்.

அதே விநாடி அவனுடைய கோட் பாக்கெட்டில் இடம் பிடித்திருந்த செல்போன் வைப்ரேஷனில் உதறுவதை உணர்ந்து எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தான்.அவனுடைய நண்பன் மணிகண்டன்.

“என்ன மணி...?”

‘‘ஞானேஷ்... நீ இப்போ எங்கே இருக்கே?”

“மௌரியா ஹோட்டல்ல! ஏன்... என்ன விஷயம்?”

“அஞ்சு நிமிஷத்துக்கு முன்னாடி சின் னதா ஒரு அசம்பாவிதம் நடந்து போச்சு...”

“விஷயத்தைச் சொல்லு...!”

“திவாகரையும், பூங்கொடியையும் ஒரு ரூம்ல போட்டு அடைச்சு வெச்சிருந்தோம் இல்லையா... அங்கேயிருந்து திவாகர் வென்டிலேட்டர்

வழியா தப்பிக்க முயற்சி பண்ணினான். நான் அங்கிருந்த இரும்புக் கம்பியை எடுத்து அவன் பின்னந்தலையில் ஓங்கி அடிச்சேன். அப்படியே தலைகுப்புற விழுந்து மயக்கமாயிட்டான். மூச்சு பேச்சில்லை. ஆள் உயிரோடு இருக்கானா இல்லையான்னு சந்தேகமா இருக்கு. எனக்கு என்ன பண்றது தெரியலை. நீ உடனே புறப்பட்டு வந்தா பரவாயில்லைனு நினைக்கிறேன்!"

# நள்ளிரவு வானவில்!- 23

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

# நள்ளிரவு வானவில்!

**செல்**போனில் ஞானேஷ் சில விநாடிகள் மௌனமாக இருந்துவிட்டு மறுமுனையில் இருந்த மணிகண்டனிடம் பேசினான்...

“இதோ பார் மணிகண்டன்... நாம ஒரு பிரச்னையைக் கையாளும்போது அசாத்தியமான பொறுமையும் சகிப்புத்தன்மையும் வேணும். நாம அடைச்சு வெச்சிருந்த திவாகர் தப்பிக்க முயற்சி பண்ணும்போது நீ அவனைத் தாக்கியது சரிதான். ஆனா, இரும்புக் கம்பியை எடுத்து அவனோட தலையில் அடிச்சிருக்கக் கூடாது. உடம்போட வேற ஏதாவது ஒரு பாகத்தைத் தாக்கியிருக்கலாம்.”

“ஸாரி ஞானேஷ்... ஆத்திரத்துல கொஞ்சம் அவசரப்பட்டுட்டேன். இப்ப எனக்கு என்ன பண்றதுன்னு தெரியலை!”



“சரி... பதற்றப்படாதே! அடிபட்ட திவாகரை மறுபடியும் செக் பண்ணு. அவனோட ரெண்டு பாதங்களையும் சூடு பறக்கத் தேய்ச்சுவிடு. அவனுக்கு எதுவும் ஆயிருக்காதுன்னு நினைக்கிறேன். பூங்கொடிக்கு இந்த விஷயம் தெரியுமா?”

“தெரியும். அவ ஒரு பக்கம் உட்கார்ந்து அழுதுட்டு இருக்கா...”

“திவாகருக்கு அப்படி ஏதாவது விபரீதம் நடந்திருந்தா அதை வெளியே காட்டிக்காதே. நான் இப்பத்தான் ஹோட்டல் மௌரியாவுக்கு வந்தேன். பேச்சுவார்த்தைகளை முடிச்சுட்டு நம்ம இடத்துக்கு வர எனக்கு எப்படியும் ரெண்டு மணி நேரம் பிடிக்கும். நான் வந்த பிறகு மேற்கொண்டு என்ன பண்றதுன்னு பேசுவோம். டென்ஷன் வேண்டாம்!”

“ஞா... ஞானேஷ்! ஒரு நிமிஷம்...”

“என்ன..?”

“திவாகரோட உடம்பு அசையுது... எந்திரிச்சு உட்கார முயற்சி பண்றான்...”

“மொதல்ல அவனை ஒரு நாற்காலியோடு சேர்த்து கட்டிப் போட்டுட்டு தலையில் ஏதாவது காயம் ஏற்பட்டு இருந்தா ஃபர்ஸ்ட் எய்டு பண்ணு!”

“சரி...”

“நீ எனக்கு போன் பண்ணாதே... ஒரு மணி நேரம் கழிச்சு நானே போன் பண்றேன்” - ஞானேஷ் செல்போனை அணைக்க, எதிர் சோபாவில் உட்கார்ந்து அவனையே பார்த்துக்கொண்டிருந்த ஜியா கலீத் சற்றே கவலையான குரலில் கேட்டார்...

“ஏதாவது பிரச்னையா?”

ஞானேஷ் மெள்ளச் சிரித்தான். “செல்போனை அட்டெண்ட் பண்ணுகிறபோது பிரச்னை இருந்தது. இப்போது இல்லை. நாம் பேச

வேண்டிய விஷயத்தைப் பற்றிப் பேசிவிடலாம்... நீங்கள் உங்களுடைய இரண்டு உதவியாளர்களையும் இந்த அறைக்கு அழைத்துவிட்டீர்களா?"

"தகவல் கொடுத்துவிட்டேன். இப்போது வந்துவிடு வார்கள்" - ஜியா கலீத் சொல்லிக்கொண்டிருக்கும் போதே பிஸ்கட் நிற ஃபுல் சூட்டில் அந்த இரு இளைஞர்களும் உள்ளே வந்தார்கள். தோல் சீவிய பீட்ரூட் நிற உடம்பு. இளம் பச்சை நிறக் கண்கள். நீளமான தலைமுடியை வாரி பிடரியில் பிரிப்பிரியாய் வழியவிட்டிருந்தார்கள். ஜியா கலீத் அந்த இரண்டு பேரையும் ஞானேஷுக்கு அறிமுகப்படுத்தினார்.



"இவர் பெல்ஃபோர்ட், இவர் ஸ்பைக் ஜோன்ஸ். இரண்டு பேருமே சைக்காலஜி ரிசர்ச் ஸ்காலர்ஸ். யுனிவர்சிட்டி ஆஃப் ஜோர்டான்'ஸ் இன்ஸ்டிட்யூட் ஃபார் லேர்னிங் அண்ட் பிரெய்ன் சயின்சஸ் (Institute for Learning and Brain Sciences) பிரிவில் பணிபுரிகிறார்கள். கம்ப்யூட்டர் தொழில்நுட்பத்தில் பட்டம் பெற்றுள்ள இவர்கள்தான் இப்போது உங்களோடு 'மிட்நைட் ரெயின்போ' ப்ராஜெக்ட்டைப் பற்றி விரிவாகப் பேசப் போகிறார்கள்."

ஞானேஷ் இருவரோடும் கைகுலுக்கி, அவர்கள் அமர்ந்ததும் எதிர் சோபாவில் தானும் அமர்ந்தான். சில விநாடிகளுக்கு நிலவிய அமைதியை பெல்ஃபோர்ட் என்கிற அந்த இளைஞன் கலைத்தான்.

“மிஸ்டர் ஞானேஷ்...! நீங்கள் எங்களுக்கு அனுப்பி வைத்த ‘எக்ஸ்பெரிமென்ட் செண்ட்ஸ் தாட்ஸ் ஓவர் நெட்’ (*Experiment sends thoughts over net*)

என்று தலைப்பிட்ட ப்ராஜெக்ட்டை எங்களுடைய டெக்னாலஜி குரூப் ஆய்வு செய்து பார்த்தது. அந்த குழுவுக்கு ஏற்பட்ட சந்தேகங்களை நாங்கள் குறித்துக்கொண்டு வந்திருக்கிறோம். அவர்கள் கேட்டிருக்கும் கேள்விகளுக்கு நீங்கள் தெளிவான பதில்களைச் சொல்ல முடிந்தால் மட்டுமே நாம் மேற்கொண்டு பேச முடியும்.”

ஞானேஷின் உதடுகள் ஒரு பெரிய புன்னகையில் விரிந்தது.

“எனக்கு கேள்வி கேட்பவர்களைத்தான் நிரம்ப

பிடிக்கும். நீங்கள் ‘மிட்நைட் ரெயின்போ’ ப்ராஜெக்ட் தொடர்பா எந்த சந்தேகம் கேட்டாலும், விளக்கம் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.”

“நன்றி மிஸ்டர் ஞானேஷ்... எங்களுடைய முதல் சந்தேகமே இந்த ப்ராஜெக்ட்டுக்கு கொடுத்த பெயர்தான். அது என்ன ‘மிட்நைட் ரெயின்போ’..?”

“நான் இந்த ப்ராஜெக்ட்டை ஆரம்பித்தபோது நான் பணிபுரியும் ஐ.டி. கம்பெனியின் வைஸ் பிரசிடென்ட் என்னைக் கூப்பிட்டு, ‘நீ இப்போது செய்யப்போகும் ப்ராஜெக்ட் சாத்தியமில்லாத ஒன்று. பகலில் வண்ணமாய் வானவில்லைப் பார்க்கலாம். இரவில் அது எப்படிச் சாத்தியமாகும்? எனவே, இந்த ப்ராஜெக்ட் வேண்டாம். வீண் வேலை’ என்று சொன்னார். இதற்கு நான் அவரிடம் சொன்ன பதில் என்ன தெரியுமா..?”

“சொல்லுங்கள்...”

“நம்மால் முடியாது என்று நினைத்துக்கொண் டிருக்கும் ஒன்றை இந்த உலகத்தின் எந்த மூலை யிலாவது இருக்கும் யாரோ ஒருத்தர் நேற்றே செய்து முடித்திருப்பார். எனவே, முடியாத விஷயம் என்று இந்த உலகத்தில் எதுவும் இல்லை. இரவிலும் வானவில்லைப் பார்க்கும் காலம் வரும் என்று

சொன்னேன். என்னுடைய தன்னம்பிக்கையைப் பார்த்துவிட்டு இந்த ப்ராஜெக்ட்டை செய்து முடிக்க எனக்கு ஒரு வருஷ கால அவகாசம் கொடுத்தார். இந்த ப்ராஜெக்ட்டுக்கு என்ன பெயர் வைப்பது என்று நானும் என் குழுவில் இருந்த ஆறு பெண்களும் யோசித்தபோது எங்களுடைய பெயர்களின் முதல் ஆங்கில எழுத்துக்களை மட்டும் எடுத்து மாற்றி மாற்றிப் போட்டு ஒரு வார்த்தையை உண்டாக்க நினைத்தோம். எதிர்பாராதவிதமாக VIBGYOR என்ற வார்த்தை கிடைத்தது. எங்களின் கம்பெனியின் வைஸ் பிரஸிடென்ட் இரவில் வானவில்லைப் பார்க்க முடியாது என்று சொன்னார். ஆனால், ப்ராஜெக்ட்டுக்கு கிடைத்த பெயரே வானவில்லோடு சம்பந்தப்பட்ட பெயராக இருந்ததால் அதையே வைத்துக்கொண்டோம்.''

''உங்களுக்கு கீழே வேலை செய்த அந்த ஆறு பெண்களும் ஒரு விபத்தில் இறந்துவிட்டதாகக் கேள்விப்பட்டோம். அது விபத்தா... இல்லை, கொலை முயற்சியா?''

''அது விபத்து என்று போலீஸார் சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள். முழு விசாரணை முடியும்போதுதான் உண்மை தெரியவரும். என் முயற்சியில் உருவான இந்தப் ப்ராஜெக்ட்டின் அறிவியல்பூர்வமான செயல்திட்டத்தை என்னிடமிருந்து அபகரிக்க வெளியே சிலர் முயற்சித்துக்கொண்டிருக்கிறார்கள் என்பது மட்டும் உறுதி. ஆனால், அதில் அவர்கள் வெற்றிபெற மாட்டார்கள்.''அதுவரைக்கும் ஒன்றும் பேசாமல் இருந்த இன்னொரு இளைஞனான ஸ்பைக் ஜோன்ஸ் இப்போது வாயைத் திறந்தான்...

''இனி ப்ராஜெக்ட்டைப் பற்றிப் பேசுவோமா..?''

''நான் தயாராக இருக்கிறேன்''

''எங்களுக்கு நீங்கள் அனுப்பியிருக்கும் ரிசர்ச் ரிப்போர்ட்டில் ஒரு வாசகத்தைக் குறிப் பிட்டுள்ளீர்கள். அதை நான் ஃப்ளோரஸன்ட் பேனாவால் மார்க் செய்துள்ளேன். அதை மட்டும் கொஞ்சம் வாய்விட்டுப் படியுங்கள்.''

அவன் சுட்டிக் காட்டிய இடத்தைப் பார்த்து ஞானேஷ் படித்தான்... *"To show that two brains can be directly linked to allow one person to guess what is on the another person's mind, research report says."*

- ஞானேஷ் படித்துவிட்டுக் கேட்டான்...

"இதில் உங்களுக்கு என்ன சந்தேகம்.?"

"இரண்டு வெவ்வேறான நபர்களின் மூளைகளை இன்டர்நெட் மூலம் இணைத்து ஒரு நபரை மட்டுமே பேசவைத்து இன்னொரு நபரின் மூளையில் பதிவாகியுள்ள செய்திகளை யும், அவர் மனதில் உள்ள எண்ணங்களையும் தெரிந்துகொள்ள முடியும் என்பதுதானே ப்ராஜெக்ட்டின் இறுதியான ரிப்போர்ட்?"

"ஆமாம்..."

"இது சாத்தியமாகிவிட்டதா?"

"ஆகிவிட்டது!"

"அதை நிரூபணம் செய்வதற்கான டெமோ ஏதாவது உங்களிடம் இருக்கிறதா?"

"இருக்கிறது!" என்று சொன்ன ஞானேஷ் தன் கார் சாவியின் கீ-செயினில் இருந்த ஸ்படிகம் போன்ற ஒரு சின்னப் பொருளை எடுத்தான் "இது ஒரு பென் ட்ரைவ். இதில்தான் 'மிட்நைட் ரெயின்போ' ப்ராஜெக்ட்டின் முதுகெலும்பு போன்ற முக்கியமான விஷயங்கள் உள்ளன. என்னுடைய 'லேப் டாப்'பில் போட்டுக் காட்டுகிறேன். நான் சொல்வதைவிட நீங்கள் பார்த்தால்தான் உங்கள் மனதில் இருக்கும் மற்ற சந்தேகங்களும் காணாமல் போகும்!" ஞானேஷ் பேசிக்கொண்டே தன் கையோடு கொண்டுபோயிருந்த ப்ரீஃப்கேஸைத் திறந்து அந்த அதிநவீன லேப்டாப்பை எடுத்தான். சில விநாடி நேரத்தில் அதை உயிர்ப்பித்து ஸ்படிகம் போன்று மின்னிய பென்ட்ரைவை செருகி ஆன் செய்தான்.

லேப்டாப்பின் செவ்வகத் திரை வெளிச்சம் பிடித்து அதன் மையத்தில் *'MNR'* என்ற எழுத்துக்களைக் காட்டியது. அதன் பிறகு ஸ்லோமோஷனில் ஆங்கில வார்த்தைகள் உற்பத்தியாகி, ஸ்லோமோஷனில் மறைய... பெல்ஃபோர்ட்டும், ஸ்பைக் ஜோன்ஸும் உன்னிப்பாக படித்தார்கள்...

*The experiment was carried out*

*In dark rooms in UW labs*

*located 1.5 KM apart and*

*involved five pairs of participants*

லேப் - டாப் திரையில் டெமோ போய்க் கொண்டிருக்கும்போதே ஞானேஷ் ஒரு வர்ணனையாளராய் மாறி விளக்க ஆரம்பித் தான்...

"இந்த பிரெய்ன் டு ப்ரெய்ன் கனெக் ஷன் பரிசோதனையில் மொத்தம் ஐந்து ஜோடிகள் ஆணும் பெண்ணுமாய் கலந்துகொண்டார்கள். UW-வின் இருட் டான சோதனைச்சாலைகளில் அவர்கள் உட்கார வைக்கப்பட்டிருந்தார்கள். அவர்களின் மூளைகள் இன்டர்நெட்டால் இணைக்கப்பட்டு, கன்ட்ரோல் கேம்ஸ் மூலம் முதலில் பரிசோதிக்கப்பட்டார்கள். இந்த டெமோவை கண்காணித்து, உண்மை நிலைகளைக் கண்டறிய ஐந்து ரிசர்ச்சர்களும், ஐந்து என்கொயரர்களும் காதுகளில் இயர் ப்ளக்குகளைப் பொருத்திக்கொண்டு, ஒருவரை மட்டுமே விசாரித்து, இன்னொருவரின் மன ஓட்டங் களையும், அவர்களின் மூளைகளில் பதிவாகியிருந்த விஷயங்களையும் கிரகித்துக் கொண்டார்கள். இவை எல்லாமே ட்ரான்ஸ் மிட்டிங் சிக்னல்கள் பெறுவதன் மூலமாக சாத்தியமானது!"

ஞானேஷ் சரளமான ஆங்கிலத்தில் நிதானமாகப் பேசிக் கொண்டிருக்கும் போதே

அந்த மனித மூளை நீல நிறத்தில் லேப் டாப்பின் திரை மையத்துக்கு வந்து நின்றது.

ஞானேஷ் அதைக் காட்டியபடி சொன்னான்... "இப்போது நீங்கள் பார்க்கும் ஒரு மனித மூளையானது நீல நிறத்தில் இருப்பதற்குக் காரணம், இன்னொரு மனித மூளையின் பதிவுகளையும் எண்ண ஓட்டங்களையும் இந்த மூளை ஏற்றுக்கொண்டு பதில் சொல்லத் தயாராகிவிட்டதுதான். இதனிடம் கேள்வி நேரம் முடித்ததும் அது தன்னுடைய பழைய இளஞ்சிவப்பு நிறத்துக்குப் போய்விடும்!"

"பார்க்கும்போதே பிரமிப்பா இருக்கிறது."

"இதன் இன்னொரு டெமோவை அடுத்த மாதத்தில் ஒருநாள் நடத்தவிருக்கிறோம். அப்போது நீங்கள் நேரடியாகவே அதைப் பார்த்து உண்மை நிலையை உணர முடியும்."

"இப்போதுள்ள நிலைமையில் இந்த பிரெய்ன் டு பிரெய்ன் இணைப்பின் ப்ளஸ் பாயின்ட்டுகள் என்ன... மைனஸ் பாயின்ட்டுகள் என்ன..?"

"முதலில் ப்ளஸ் பாயின்ட்டுகளைச் சொல்கிறேன். இன்றைக்கு நம் உலகை அச்சுறுத்திக்கொண்டிருக்கும் பயங்கரவாதத்துக்குக் காரணமான தீவிரவாதிகளை இந்த பிரெய்ன் டு பிரெய்ன் இன்டர்ஃபேஸ் டெமான்ஸ்ட்ரேஷன் மூலமாக நம் வழிக்குக் கொண்டுவர முடியும். இதற்கு முன்பெல்லாம் எந்தத் தீவிரவாதி காவல் துறையிடம் மாட்டினாலும் அவனிடம் இருந்து உண்மைகளை வரவழைக்க முடியாமல் அதிகாரிகள் திணறிக்கொண்டு இருந்தார்கள். அவனை சித்ரவதைகளுக்கு உட்படுத்தினாலும் அவற்றை எல்லாம் தாங்கிக்கொண்டு பிடிவாதமாக மௌனம் சாதித்து வந்தான். ஆனால், இனிமேல் அவன் அப்படி இருக்க முடியாது. அவனுடைய மூளையை இன்னொருவரின் மூளையோடு இன்டர்நெட் மூலமாக இணைத்து அதன் மூலமாக அந்தத் தீவிரவாதியின் மூளையில் பதிவாகியிருக்கும் செய்திகளையும், அவனுடைய எண்ண

ஓட்டங்களையும் அறிந்து ஒட்டுமொத்த தீவிரவாத கும்பலையும் நம்மால் கண்டு பிடிக்க முடியும். இது முதல் ப்ளஸ் பாயின்ட்.”



ஞானேஷ் சில விநாடிகள் பேச்சை நிறுத்தி விட்டு தொடர்ந்தான்...

“இரண்டாவது ப்ளஸ் பாயின்ட்... விபத்தில் சிக்கிய ஒரு நபரின் மூளையில் உள்ள நியூரான்கள் சேதம் அடையும்போது அவர் ‘மூளைச் சாவு’ அடைய வாய்ப்பு அதிகம். அந்த வாய்ப்பை இனி நம்மால் தவிர்க்க முடியும். ஆரோக் கியமான ஒரு நபரின் மூளையோடு விபத்தில் சிக்கிய நபரின் சேதமான நியூரான்களைக் கொண்ட மூளையோடு இணைத்து அந்த நியூரான்களை ரிப்பேர் செய்து மூளைச் சாவை தடுத்து அந்த நபரைக் காப்பாற்றிவிடலாம். மூன்றாவது ப்ளஸ் பாயின்ட், புத்திசாலித்தனம் குறைந்த மாணவர்களின் மூளைத்திறனை, புத்திசாலியான மாணவர்களின் மூளை யோடு இணைத்து அவர்களுடைய அறிவுத்திறனை அதிகரிக்கச் செய்யலாம். நான்காவது ப்ளஸ் பாயின்ட் - மனநலம் பாதிக்கப்பட்டவர்களையும், மூளை

நோயால் பாதிக்கப்பட்ட நபர்களையும் டிமென்ஷியா, அம்னீஷியா போன்ற மறதி நோய்களால் பாதிக்கப்பட்டவர்களையும் வெகு எளிதில் குணப்படுத்திவிடலாம்!"

"இதனுடைய மைனஸ் பாயின்ட்டுகள்..?"

"ஒன்றே ஒன்றுதான்."

"என்ன..?"

"இந்த 'மிட்நைட் ரெயின்போ' சம்பந்தப்பட்ட ரகசிய செயல்பாடுகள் சமூக விரோதிகளின் கைகளுக்குப் போய்விட்டால் அவர்களால் எதிர்மறை விளைவுகள் உண்டாக வாய்ப்பு இருக்கிறது. அறிவியல் விஞ்ஞானியிடம் இருந்து அவருடைய கண்டுபிடிப்புகள் பற்றிய தகவல்களையும், உயர் ராணுவ அதிகாரியிடம் இருந்து ராணுவ ரகசியங்களையும் அவர்களால் திருட முடியும். இந்த விஷயத்தில் மட்டும் நாம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.."

"அது ஒன்றும் பிரச்னையில்லை... நாம் ஒப்பந்தம் போட்டுக் கொள்வதற்கு முன்பு 'MNR ப்ராஜெக்ட்'டின் மதிப்பு என்ன என்பதைப் பற்றிப் பேசிவிடலாமா?"

"மதிப்பு என்ன என்பதைப் பற்றி உங்கள் தலைவர் மிஸ்டர் ஜியா கலீத்திடம் ஏற்கெனவே பேசிவிட்டேன். அவர் ஏதும் உங்களிடம் சொல்லவில்லையா?"

"சொன்னார்.... அது அதிகம் என்பதை உணர்கிறோம்!"

"நீங்கள் ஓர் உண்மையைப் புரிந்துகொள்ள வேண்டும். வெளிநாட்டின் பல பல்கலைக் கழகங்கள் எவ்வளவோ முயற்சி செய்தும் தோற்றுப்போன விஷயத்தை எங்களின் பயோடெக் நிறுவனமான ஃப்யூச்சர் மிராக் கிள் கையில் எடுத்துக்கொண்டு, அந்த பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தது. ஆண் உதவியாளர்களை நம்ப முடியாது என்கிற காரணத்தால் ஆறு பெண்

உதவியாளர்களை இந்த *MNR* ப்ராஜெக்ட்டில் ஈடுபடுத்தினேன். இந்த ப்ராஜெக்ட் வெற்றிபெறும் தறுவாயில் என் பெண் உதவியாளர்கள் ஆறு பேரும் எதிர்பாராதவிதமாக மரணம் அடைந்தார்கள். என்னுடைய உயிருக்கும் குறிவைக்கப்பட்டது. ஆனாலும் தப்பிவிட்டேன்... ஓர் உயிருக்கே விலை மதிப்பை நிர்ணயம் செய்ய முடியாது. ஆனால், ஆறு பேர்... அதுவும் இளம்பெண்கள் கொல்லப்பட்டிருக்கிறார்கள். அதற்கான மதிப்பை அளவிட்டுப் பாருங்கள். அப்போது உங்களுக்குப் புரியும்..!"

"இட்ஸ் ஓ.கே... ஐ அக்ரி வித் யூ மிஸ்டர் ஞானேஷ்!" - ஜியா கலீத் தன் இரண்டு கைகளையும் உயர்த்தி சொல்லிக்கொண் டிருக்கும்போதே ஞானேஷின் செல்போன் மெலிதாய் முணுமுணுத்தது.

எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தான். சென்னையில் இருந்து அவனுடைய அப்பா பார்த்தசாரதி. செல்போனை காதுக்கு ஒற்றி மெல்லிய குரலில் கேட்டான்...

"என்னப்பா..?"

"ஞானேஷ்... நீ உயிரோடு இருக்கிறது தெரிஞ்சு போலீஸ் நம்ம வீட்டுக்கு வந்து விசாரணை அது இதுன்னு டார்ச்சர் பண்ண ஆரம்பிச்சுட்டாங்க. நான் ரிட்டையர்ட் ஜட்ஜ்ங்கிறதால டி.ஜி.பி லெவல்ல என்கொயரி போயிட்டிருக்கு. எனக்கு என்ன பண்றதுன்னு தெரியலை."

"அப்பா... இவ்வளவு நாள் பொறுத்தீங்க. ஒரு ரெண்டு நாள் பொறுங்க... அப்புறம் நம்ம திட்டப்படி எல்லாமே நடக்கும்."

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

# நள்ளிரவு வானவில்!

பார்த்தசாரதி மறுமுனையில், உடைந்துபோன குரலில் பேச்சைத் தொடர்ந்தார்...

“இதோ பார் ஞானேஷ்... உன்னோட திட்டத்தை சீக்கிரமா ஒரு முடிவுக்குக் கொண்டு வா..! நீ உயிரோடு இருக்கிற விஷயம் போலீஸுக்குத் தெரியாம இருந்திருந்தா, எனக்கு எந்தப் பிரச்னையும் வந்திருக்காது. ஆனா, விஷயம் வெளியாயிட்டதால போலீஸ்ல இருக்கிற ஹைலெவல் ஆபீஸர்ஸ் நினைச்ச நேரம் என்கிட்டே வந்து என்கொயரி என்கிற பேர்ல தேவையில்லாத கேள்விகளைக் கேட்டு டார்ச்சர் தர்றாங்க. கொஞ்ச நேரத்துக்கு முந்தி டி.ஜி.பி. எனக்கு போன் பண்ணி ‘உங்க மகன் ஞானேஷ் சம்பந்தப்பட்ட பிரச்னையில் உண்மைகள் வெளியே வர நீங்க முழுமையா ஒத்துழைப்பு தரணும்’னு சொல்றார். அதுக்கு என்ன அர்த்தம்... நான் விசாரணைக்கு முழு ஒத்துழைப்பு தரலைன்னு அவர் சொல்லாம சொல்றார்.”

ஞானேஷ் செல்போனில் குரலைத் தாழ்த்தினான்.

“அப்பா! ஒரு ரெண்டு நாள் சமாளிங்க. திட்டம் இப்போ ஃபைனல் ஸ்டேஜ்ல இருக்கு. எப்படியும் இரண்டு நாளைக்குள்ளே எல்லாத்தையும் முடிச்சுடுவேன்..!”

“ரெண்டு நாளைக்குள்ளே எல்லாம் முடிஞ்சுடுமா?”

“கண்டிப்பா முடிஞ்சுடும்.”

“உன்னோட ஃப்ரெண்ட் மணி கண்டன் இப்போ சென்னையில் இருக்கானா... இல்லை, பெங்களூர்ல இருக்கானா?”



“பெங்களூர்லதான் இருக்கான். அவனோட கஸ்டடியில்தான் திவாகரையும் பூங் கொடியையும் வெச் சிருக்கேன்.”

“ஞானேஷ்..!”

“சொல்லுங்கப்பா...”

“அந்த ஜோர்டான் நாட்டு ஹை டெக் பீப்பிள்ஸைப் பார்த்துப் பேசிட்டியா..?”

"பேசிட்டேன். நான் சொன்ன எல்லா டெர்ம்ஸ் அண்ட் கண்டிஷன்களுக்கும் ஒப்புக்கிட்டாங்க. இனிமே சொல்ல வேண்டியவங்ககிட்டே சொல்லிட்டா என்னோட வேலை முடிஞ்சுது..."

"சரி... ரூபேஷை எப்படி ஹேண்டில் பண்ணப்போறே? அவனோட விஷயத்துல நீ ரொம்பவும் காஷியஸ்ஸா இருக்கணும்."

"அப்பா... நான் அதையெல்லாம் பார்த்துக்கறேன். நீங்க டென்ஷன் ஆகாம இருந்தா போதும். இப்படியெல்லாம் எனக்கு போன் பண்றதுகூட வேண்டாம்... போலீஸ் டிபார்ட்மென்ட்ல உங்க செல்போன் காலை மானிட்டர் பண்ணி டேப் பண்றதுக்கும் வாய்ப்பு இருக்கு!"

"நீ சொல்றதும் சரிதான்... நான் இனிமே உனக்கு போன் பண்ணலை. ஏதாவது முக்கியமான விஷயமா இருந்தா என்னோட இ-மெயில் ஐ.டி-க்கு மெசேஜ் பண்ணிடு... நானும் அதே மாதிரி பண்ணிடறேன்."



"இட்ஸ் ஓ.கே!" என்று சொன்ன ஞானேஷ் தன்னுடைய செல்போனை அணைத்தான். எதிரில் உட்கார்ந்திருந்த ஜியா கலீத் தன் சதைப்பிடிப்பான உதடுகளை புன்னகையில் விரித்தார்.

"ஏதாவது பிரச்னையா..?"

"பிரச்னைதான்! ஆனா, நாம் பயப்படுகிற அளவுக்குப் பிரச்னையில்லை. எம்.என்.ஆர் டெமோவில் மேற்கொண்டு உங்களுக்கு ஏதாவது சந்தேகம் இருக்கிறதா..?"

"இல்லை... எல்லாவற்றுக்கும் நீங்கள் சரியான விளக்கம் கொடுத்துவிட்டீர்கள். ப்ராஜெக்ட்டுக்கான விலையும் முடிவாகிவிட்டது."

"இனி நான் புறப்படலாமா..?"

"நீங்கள் புறப்படலாம். ஆனா, இன்னொரு தடவை நாம் சந்திக்கவேண்டி வரலாம்..."

“நான் காத்திருக்கிறேன்.”

“அந்தச் சந்திப்பு இந்தியாவில் இருக்காது. எங்கள் நாட்டில்தான் இருக்கும். உங்களுக்கு ஜோர்டான் வர எந்த ஆட்சேபனையும் இல்லையே?”

ஞானேஷ் சிரித்தான். “இந்த உலகத்தின் எந்த மூலைக்குக் கூப்பிட்டாலும் நான் வரத் தயாரா இருக்கிறேன். ஆனால், பேச்சுவார்த்தை திசைமாறிப் போகாமல் நேர்மையா இருக்க வேண்டும். நான் ஏமாற்றப்படுவதாக ஒரு விநாடி உணர்ந்தாலும் உங்களை விட்டு விலகிவிடுவேன்.”

“எந்த ஒரு வியாபாரம் நடந்தாலும் அதில் எங்களுடைய முதல் முதலீடு நேர்மையாகத்தான் இருக்கும். நாங்கள் பேசும் வார்த்தைகளில் ஒரு வார்த்தைகூட பொய்யாக இருக்காது என்கிற உத்தரவாதத்தை நான் தருகிறேன்!”

“இந்த வார்த்தை போதும்... முதல்கட்ட பேச்சுவார்த்தை வெற்றிகரமாக முடிந்ததில் எனக்கு மிக்க மகிழ்ச்சி!” - சொன்ன ஞானேஷ், ஜியா கலித்தின் கையைப் பற்றிக் குலுக்கிவிட்டு எழுந்தான்.

பசவன்குடியில் இருந்த யோகானந்த்தின் ஃபார்ம் ஹவுஸ் அந்த ராத்திரியின் பத்து மணி இருட்டில் நிசப்தமாய் உறைந்து போயிருக்க, கமிஷனர் ராஜகணேஷ், ரூபேஷின் அறையில் அவனுக்கு முன்பாக உட்கார்ந்து நிதானமான குரலில் சொல்லிக்கொண்டிருந்தார்...

“கடந்த ரெண்டு நாளா பயத்தின் காரணமா நீங்க சரியா சாப்பிடறது இல்லைன்னு கேள்விப்பட்டேன். உங்க ஃபாதர் யோகானந்த்துக்கும், டி.எஸ்.பி. நம்பெருமாளுக்கும் ஏற்பட்ட மரணம் போலவே உங்களோட மரணமும் இருக்கும்னு நீங்க நினைச்சு பயப்படறதும், அதுக்காக பயந்து பயந்து சாப்பிடறதும் தேவையில்லாதது. இந்த ஃபார்ம் ஹவுஸைச் சுற்றிலும் ஒரு போலீஸ் படையே நிறுத்தப்பட்டிருக்கு. மூன்றடுக்கு பாதுகாப்பு. உங்களுக்குத் தரப்படுகிற உணவு மூன்று பேர் கொண்ட டாக்டர் குழுவால்

சோதனை செய்யப்பட்ட பிறகே இந்த அறைக்கு உங்களுடைய நம்பிக்கைக்குரிய வேலைக்காரனால் கொண்டுவரப்படுது. அதனால நீங்க தைரியமா சாப்பிடலாம்!"

தலைகுனிந்து உட்கார்ந்திருந்த ரூபேஷ், ஒரு கோபப் பார்வையோடு ராஜகணேஷை ஏறிட்டான்.

"ஸார்! நீங்க கடமைக்காக எனக்கு ஆறுதல் சொல்றீங்க. அந்த ஞானேஷை நீங்க பிடிக்காத வரை நான் நிம்மதியா சாப்பிட முடியாது; தூங்க முடியாது. ஞானேஷ் என்னோட செல்போனுக்கு அனுப்பியிருக்கிற மெசேஜைப் பாருங்க. அவன் உபயோகப்படுத்தியிருக்கிற வார்த்தைகளைப் படிச்சாலே அடிவயித்துல அமிலம் சுரக்கற மாதிரி இருக்கு. இந்த மெசேஜைப் படிங்க..!" - சொன்ன ரூபேஷ், தன்னுடைய செல்போனை உயிர்ப்பித்து மெசேஜ் ஆப்ஷனுக்குப் போய் அந்த எஸ்.எம்.எஸ் செய்தியைக் காட்டினான்.

கமிஷனர் ராஜகணேஷ் வாங்கிப் பார்த்தார்.

'ரூபேஷ்! உன்னுடைய அப்பா யோகானந்தும் அந்தக் கறுப்பு ஆடு டி.எஸ்.பி. நம்பெருமாளும் உனக்காக நரகத்தின் வாசலில் உன் வருகையை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டு இருக்கிறார்கள். நீ புறப்பட்டு செல்ல தயாராய் இருக்கவும். அவர்கள் எப்படி இறந்தார்களோ, அது போலவே உன்னுடைய மரணமும் இருக்கும். நீ பசிக்குச் சாப்பிடும் உணவுதான் உனக்கு எமன். நீ போலீஸ் வளையத்துக்குள் எவ்வளவு பாதுகாப்போடு இருந்தாலும் மரணம் உன்னை நெருங்குவது சர்வ நிச்சயம்.'

ராஜகணேஷ் அந்த செல்போனை ரூபேஷிடம் திருப்பிக் கொடுத்துக்கொண்டே சொன்னார்...

"இதே மாதிரியான மெசேஜ் எனக்கும் வந்தது. அந்த ஞானேஷ் சட்டவிரோதமான சில சிம்கார்டுகளை வெச்சுக்கிட்டு இப்படிப்பட்ட எஸ்.எம்.எஸ்-களை அனுப்பி உங்களுக்கும் போலீஸ் டிபார்ட்மென்ட்டுக்கும்

டார்ச்சர் கொடுத்துட்டிருக்கான். இன்னும் ரெண்டு நாள்ல அவனை எப்படியும் மடக்கிடுவோம்!"

"அதுக்குள்ளே நான் போயிடுவேன் போலிருக்கே..!"

"மிஸ்டர் ரூபேஷ்... இது மாதிரியான நேரங்களில்தான் தைரியமா இருக்கணும். நீங்க துணிச்சலோடு இருந்தாத்தான் டிபார்ட்மென்ட் பீப்பிளான நாங்க துணிஞ்சு சில ஏற்பாடுகளைப் பண்ண முடியும்."

"இது என்னோட உயிர்ப் பிரச்னை ஸார்... அதுதான் உள்ளுக்குள்ளே இவ்வளவு பயந்து பயந்து செத்துட்டிருக்கேன்!" ரூபேஷ் சொல்லிக்கொண்டிருக்கும்போதே ராஜகணேஷின் செல்போன் வைப்ரேஷனில் உதறியது. எடுத்து, அழைப்பது யார் என்று பார்த்தார்.

சென்னையில் இருந்து டெபுடி போலீஸ் கமிஷனர் மகேஷ்வரன். ராஜகணேஷ் செல்போனை இடது காதுக்கு ஒற்றினார்.

"சொல்லுங்க மகேஷ்வரன்..!"

"ஸார்! நமக்கு வேண்டிய இன்ஃபார்மர் மூலமா ரெண்டு நிமிஷத்துக்கு முன்னாடி ஒரு தகவல் வந்தது..."

"என்ன?"

"அந்த ஞானேஷ் பெங்களூரிலிருந்து சென்னைக்கு வந்துட்டு இருக்கிறதா தகவல் ஸார்!"

"எதுல வர்றான்?"

"பஸ்... ஆனா, எந்த பஸ்ஸுலன்னு தெரியலை. அதனால டோல்கேட் போன்ற இடங்களில் எல்லா பஸ்களையும் நிறுத்தி சோதனை போட ஏற்பாடு பண்ணியிருக்கேன் ஸார்..!"

"அது மட்டும் போதாது மகேஷ்வரன். ஞானேஷ் இப்போ அவன் தன்னோட சுய உருவத்தில் இல்லை. வேறு ஏதாவது ஒரு 'கெட் அப்'பில்

இருக்கலாம். சோதனை கடுமையான முறையில் இருந்தாத்தான் அவனைக் கண்டுபிடிக்க முடியும்.''

''அதற்கான ஏற்பாடுகளையும் பண்ணிட்டேன் ஸார்..!''

''தட்ஸ் குட்!''

''அப்புறம் இன்னொரு விஷயம் ஸார்...''

''என்ன..?''

''ஞானேஷோட அப்பா ரிட்டையர்ட் ஜட்ஜ் பார்த்தசாரதி விசாரணைக்கு சரியான முறையில் ஒத்துழைக்க மறுக்கிறார் ஸார். மகன் ஞானேஷைப் பற்றிய எந்த ஒரு கேள்விக்கும் தெளிவான பதிலைச் சொல்லுவது கிடையாது. 'உங்க மகன் உயிரோடு இருக்கிறார் என்று தகவல் வந்திருக்கிறது. இதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?' என்று கேட்டால், 'ஞானேஷ் உயிரோடு இருந்தா எனக்கு சந்தோஷம்தான்' என்று சர்வசாதாரணமா சொல்லிவிட்டு மௌனமா இருந்துவிடுகிறார். 'உங்கள் மகன் இப்படி நாடகமாட வேண்டிய அவசியம் என்ன?' என்று கேட்டால், 'இந்தக் கேள்வியை அவனிடம்தான் கேட்க வேண்டும்' என்று சொல்கிறார். ரிட்டையர்ட் ஜட்ஜ் பார்த்தசாரதிக்கு எல்லா உண்மைகளும் தெரியும்; ஆனால், அவர் மறைக்கிறார் என்று டி.ஜி.பி. நினைக்கிறார். மேற்கொண்டு எது மாதிரியான நடவடிக்கையை அவர் மீது எடுப்பது என்று நமது டிபார்ட்மென்ட்டின் சட்டக்குழு யோசித்து வருகிறது.''

''மிஸ்டர் மகேஷ்வரன்! இங்கேயும் நிலைமை சரியில்லை. யோகானந்த்தும் நம்பெருமாளும் கொலை செய்யப்பட்டுவிட்ட நிலையில், ரூபேஷின் உயிருக்கும் ஞானேஷ் குறிவைத்திருக்கிறான். அதை பகிரங்கமா எஸ்.எம்.எஸ். மூலம் குறுஞ்செய்தியா அனுப்பி மிரட்டல் விடுத்திருக்கிறான். ரூபேஷ் ஒவ்வொரு வேளையும் பயந்து பயந்து சாப்பிட வேண்டியிருக்கிறது. 'மிட்நைட் ரெயின்போ' ப்ராஜெக்ட்டைப் பற்றி முழுமையா தெரிந்துகொள்ள யோகானந்த், டி.எஸ்.பி. நம்பெருமாள், ரூபேஷ் இந்த மூன்று பேரும் முயற்சி

செய்தது ஞானேஷுக்குப் பிடிக்கவில்லை என்பதால்தான் இந்தப் பழிவாங்கல் என்று நான் நினைக்கிறேன்."



"ஸார்! பெங்களூரிலிருந்து சென்னை நோக்கி வந்துகொண்டிருக்கும் ஞானேஷை எப்படியும் இன்று இரவுக்குள் மடக்கிடுவோம் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது."

"ஞானேஷ் சென்னைக்கு வருகிற தகவல் உண்மைதானா..?"

“நம்பத்தகுந்த இன்ஃபார்மரிடம் இருந்து வந்த அதிகாரபூர்வமான தகவல் ஸார் இது! இப்போது எனக்கு இருக்கிற கவலையெல்லாம் அவன் தப்பித்துப் போய்விடக்கூடாது என்பதுதான்!”

“ஞானேஷ் எதற்காக சென்னைக்கு வருகிறான்?”

“தெரியவில்லை ஸார்... அவனுடைய நண்பன் மணிகண்டனும் இப்போது மயிலாப்பூரில் இருக்கும் அவனுடைய வீட்டில் இல்லை. இரண்டு பேரும் சேர்ந்துதான் ஏதோ திட்டம் போட்டிருக்கிறார்கள் என்பது என் யூகம்.”

“எல்லா யூகங்களுக்கும் விடை கிடைக்க வேண்டுமென்றால் ஞானேஷ் ‘லாக்கப்’புக்கு வர வேண்டும்!”

“நாளை பொழுது விடியும் போது ஞானேஷ் சென்னையில் உள்ள ஏதாவது ஒரு போலீஸ் ஸ்டேஷனின் லாக்கப்புக்குள் முழங்கால்களைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பான் ஸார்!”

“டூ இட் மிஸ்டர் மகேஷ்வரன்!” - சொல்லிவிட்டு, செல்போனை அணைத்தார் ராஜகணேஷ்.

ரூபேஷ் கேட்டான்... “என்ன ஸார்... ஞானேஷ் சென்னைக்குப் போயிட்டிருக்கானா..?”

“ஆமா... நம்பிக்கைக்குரிய ஒரு இன்ஃபார்மர் மூலமா சென்னை போலீஸுக்குத் தகவல் கிடைச்சிருக்கு. ஞானேஷை எப்படியும் மடக்கிடுவாங்க... இனிமே கவலையில்லை. நீங்க நிம்மதியா ரெஸ்ட் எடுங்க மிஸ்டர் ரூபேஷ். நாளைக் காலையில் நான் நல்ல செய்தியோடு உங்களை சந்திக்கிறேன்.”

ராஜகணேஷ் விடைபெற்றுக்கொண்டு போய்விட... ரூபேஷ் பயத்தை மறந்தவனாய் புன்னகையோடு படுக்கையில் சாய்ந்தான். பக்கத்தில் இருந்த ரிமோட் கன்ட்ரோலை எடுத்து டி.வி-யை ஆன் செய்தான்.

ஏதோ கார்ட்டூன் சேனல்.

ஜெர்ரியை டாம் துரத்திக்கொண்டிருந்தது. ஒரு ஐந்து நிமிட நேரம் அதைப் பார்த்துக்கொண்டு இருந்துவிட்டு சேனலை மாற்றினான். காஷ்மீர் பார்டரில் இந்தியா - பாகிஸ்தான் பரஸ்பரம் துப்பாக்கிச் சண்டை நடத்தியதை ஒரு ஆங்கிலச் செய்தி சேனல் 'பிரேக்கிங் நியூஸ்' என்று சொல்லிப் பதற்றப்படுத்திக்கொண்டிருக்க, அதையும் சில நிமிஷ நேரம் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு ஒரு தமிழ் சேனலின் சீரியலுக்குப் போனான்.

அதே விநாடி - ரூபேஷின் செல்போன் ரிங்டோனை வெளியிட்டது. டி.வி-யை அணைத்துவிட்டு செல்போனை எடுத்துப் பார்த்தான். புது எண்.

'யாராக இருக்கும்' என்று யோசித்தபடியே செல்போனை எடுத்து காதுக்கு ஒற்றினான்... "யாரு?"

"என்ன ரூபேஷ்... பகவன்குடியில் இருக்கிற பண்ணைவீட்டில் போலீஸோட பாதுகாப்பு வளையத்துக்குள்ளே உட்கார்ந்துகொண்டு, வரப்போகிற மரணத்துக்காக வெயிட் பண்றே போலிருக்கு!"

ரூபேஷ் நிமிர்ந்து உட்கார்ந்தான். உடம்பு இன்ஸ்டன்ட்டாக வியர்த்து, நாக்கு உடனே வறண்டது.

"யா... யார்... நீ..?"

"நீ ரூபேஷ்னா, நான் ஞானேஷ்..!"

கட்டிலிலிருந்து நடுக்கமாக இறங்கினான் ரூபேஷ். கையில் இருந்த செல்போன் தன்னிச்சையாக ஒரு நடுக்கத்துக்கு உட்பட்டது.

"நீ... நீயா..?"

"நானேதான்! கொஞ்சம் பின்னாடி திரும்பிப் பாரு..."

பார்த்தான்.

அந்த அறையின் மூலையில் இருந்த ‘வார்ட்ரோப்’பின் கதவைத் திறந்துகொண்டு ஞானேஷ் வெளிப்பட்டான்.

உதட்டில் சின்னப் புன்னகை.

வலது கையில் மேக்னம் ரிவால்வர்.

ராஜேஷ்குமார், ஓவியங்கள்: அரஸ்

# நள்ளிரவு வானவில்!

**ச**ர்வாங்கமும் அதிர்ந்து போனவனாய் ரூபேஷ், ஞானேஷையே பார்க்க, அவன் தன் கையில் மேக்னம் ரிவால்வருடன் நெருங்கினான்.

“போய் கட்டில்ல உட்கார்... உன்னோட செல்போனை சுவிட்ச் ஆ:ஃப் பண்ணு! நான் சொன்னபடி நீ கேட்கலைன்னா, ரெண்டு தோட்டாவை உன்னோட மார்புக்கும், ரெண்டு தோட்டாவை உன்னோட தலைக்கும் கொடுக்க வேண்டியிருக்கும். என் கையில் இருக்கிற இந்த மேக்னம் ரிவால்வர், மௌனயுத்த கில்லாடி.”

ரூபேஷ் விழித்தான்.

“என்ன புரியலையா... இது சைலன்ஸர் பிஸ்டல். இது கர்ப்பம் தாங்கியிருக்கிற தோட்டாக்கள் ஸ்பைரல் ஜாதி. இந்த தோட்டா உன் உடம்புல பாயும்போது, ஒரு பட்டாணி சைஸ் அளவுக்கு ஓட்டை போட்டு... உன் உடம்போட மறுபக்கம் வெளியேறும்போது, அரை கிலோ சதையை அள்ளிக்கிட்டு போயிடும். ஒரு தோட்டாவுக்கே இந்த நிலைமைன்னா, நாலு தோட்டா பாயும்போது எப்படியிருக்கும்? உன் பாதி உடம்பே காணாம போயிருக்கும்!”

ரூபேஷ் மிரண்ட விழிகளோடு வியர்வை மழையில் நனைந்தபடி சுற்றும்முற்றும் பார்த்தான்.

“என்ன ரூபேஷ், அப்படிப் பார்க்கறே? போலீஸ் யாராவது உதவிக்கு வருவாங்கன்னு பார்க்கறியா? நீ உள்ளே பத்திரமா இருக்கேனு நினைச்சுட்டு அவங்க வெப்பன்ஸோடு பாதுகாப்புப் பணியில் தன்னோட கடமையைக்

கண்ணும் கருத்துமா பண்ணிட்டு இருக்காங்க. நான் இந்த அறைக்குள்ளே வந்து அரை மணி நேரமாச்சு. போலீஸ் கமிஷனர் ராஜகணேஷும் நீயும் பேசிட்டு இருந்ததையெல்லாம் ஒரு வார்த்தைகூட விடாம கேட்டுட்டுத்தான் இருந்தேன். அவர் டியூட்டியைப் பார்த்துட்டு அவர் போயிட்டார். என்னோட டியூட்டியை நான் பார்க்க வேணாமா?"



ரூபேஷ், கட்டிலில் தட்டுத் தடுமாறி உட்கார்ந்தான். கண்களில் மரண பயம்.

"என்னை ஒண்ணும் பண்ணிடாதே... ஞானேஷ்! உனக்கு என்கிட்டயிருந்து என்ன வேண்டும், சொல்லு."

“எனக்கு சில உண்மைகள் தெரியும். அந்த உண்மைகளோடு நீ சொல்லப் போகிற உண்மைகளையும் ஒப்பிட்டுப் பார்த்து எது உண்மை, எது பொய்னு தெரிஞ்சுட்டு போலாம்னு வந்தேன். உன்னோட ஒத்துழைப்பு எனக்கு சரியான முறையில் கிடைச்சா, இந்த பிஸ்டலுக்கு வேலை கொடுக்க வேண்டியதில்லை. நீ ஒரு பொய் சொன்னாலும் உள்ளேயிருக்கிற தோட்டாவுக்குப் பிடிக்காது.”

ரூபேஷ், நடுங்கும் கரங்களோடு கிட்டத்தட்ட கைகூப்பினான். “எனக்குத் தெரிஞ்ச எல்லா உண்மைகளையும் சொல்லிடறேன். என்னை ஒண்ணும் பண்ணிடாதே!”

ரூபேஷுக்கு எதிரில் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தான் ஞானேஷ். குரலைத் தாழ்த்திக்கொண்டு மெல்லிய குரலில் கேட்டான்...

“இந்துவதனாவை உனக்கு எப்படித் தெரியும்?”

“இந்துவதனாவா... யாரது..?”

“என்னோட ‘நள்ளிரவு வானவில்’ ப்ராஜெக்ட்டில், ஆறு பெண்கள் எனக்கு அசிஸ்டென்ட்களா இருந்தாங்க. என்னையும் சேர்த்து ஏழு பேரோட முதல் எழுத்தில் உருவான ‘VIBGYOR’ என்கிற ஆங்கில வார்த்தையில் வர்ற ‘I’ என்கிற எழுத்துக்கு சொந்தக்காரிதான் இந்துவதனா. இப்ப ஞாபகம் வருதா?”

“நீ சொல்ற அந்த இந்துவதனாவை எனக்குத் தெரியாது.”

“நிஜமா தெரியாதா..?”

“தெரியாது!”

ஞானேஷ் தன் கையில் வைத்திருந்த மேக்னம் பிஸ்டலை உயர்த்தி, ரூபேஷின் இடது மார்புப் பக்கத்தை குறிபார்த்தான். “நீ உன்னோட பதிலை மாத்திச் சொல்ல உனக்கு பத்து செகண்ட்ஸ் அவகாசம்.”

ரூபேஷ் அவசர அவசரமாய் "எனக்கு இந்துவதனாவைத் தெரியும்" என்றான்.

"எப்படித் தெரியும்?"

"அது வந்து... வந்து..."

"உண்மை... உண்மை! இனியொரு தடவை உன்னோட வாயிலிருந்து பொய் வரக்கூடாது!"

ரூபேஷ் சில விநாடிகள் தயங்கிவிட்டு பேச்சைத்

தொடர்ந்தான்... "இந்துவதனா தன்னோட காலேஜ் படிப்பை முடிச்சதுமே எனக்குச் சொந்தமான ஒரு ஐ.டி. கம்பெனியில்தான் முதன்முதலா வேலை பார்த்தா. அப்ப எனக்கும் அவளுக்கும் பழக்கம் ஏற்பட்டது. அதைக் காதல்னு சொல்ல முடியாது. நான் வெளியூருக்கு டூர் போகும்போதெல்லாம் எனக்கு கம்பெனி குடுப்பா..."

ஞானேஷ் புன்னகைத்தான். "புரியுது... புரியுது... நீ என்ன சொல்ல வர்றேனு புரியுது. அப்புறம் என்ன நடந்ததுன்னு சொல்லு!"

"இந்துவதனா கொஞ்ச நாள்தான் என்னோட கம்பெனியில் வேலை பார்த்தா. அதுக்கப்புறம் டெல்லியில் நீ வேலை செய்யற பயோ-டெக் கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்தா. அதுக்கப்புறமும் எங்க தொடர்பு நீடிச்சது."

"அந்தத் தொடர்பு நீடிச்சதனாலதான் 'நள்ளிரவு வானவில்' ப்ராஜெக்ட் பத்தி உன்கிட்டே சொன்னாளா?"

ரூபேஷ் மௌனம் சாதித்தான்.

"சொல்லு... சொன்னாளா இல்லையா?"

"சொன்னா..!"

“உடனே நீ அந்த ப்ராஜெக்ட்டோட சூட்சுமம் சம்பந்தப்பட்ட ஃபைல்ஸோட காப்பியை ஒட்டுமொத்தமா உன்கிட்டே கொண்டுவந்து கொடுக்கச் சொல்லி கேட்டே. அதுக்கு ஒரு ரேட்டும் பேசினே... என்னோட உதவியாளரா இருந்த இந்துவதனா பணத்துக்கு ஆசைப்பட்டு நான் கஷ்டப்பட்டு உருவாக்கின ‘மிட் நைட் ரெயின்போ’ ஃபைலை காப்பி எடுத்துட்டு வந்து, உன்கிட்டே கொடுத்தா. உண்டா இல்லையா..?”

“அது... வந்து...”

“உண்மையா... இல்லையா..?” - ஞானேஷ் குரலை உயர்த்தி உறுமவும் ரூபேஷ் நடுங்கிப்

போனவனாய் தலையாட்டினான். நெற்றி யிலிருந்து வியர்வை சொட்டியது.

“ஆமா... உண்மைதான்!”

“உனக்கு விசுவாசமாதானே அவ நடந்து

கிட்டா... அப்புறம் ஏன் அவளைத் தீர்த்துக்கட்ட முயற்சி பண்ணினே? அப்படி முயற்சி எடுத்த நீ அதுக்கப்புறம் இந்துவதனாவோடு சேர்த்து ஊட்டிக்கு டூர் போன வினயா, யாமினி, பிருந்தா, ஓமனா, ராகவி இந்த அஞ்சு பேரையும் சேர்த்து மலைப்பாதையில் ஒரு வேன் விபத்துல ஏன் சாகடிச்சே?”

ரூபேஷ் விழிகள் தெறிக்க அதிர்ந்து போனவனாய் ஞானேஷையே பார்க்க... அவன் இதழ்க்கோடியில் புன்னகையொன்று உதித்து உடனே மறைந்தது. “என்ன அப்படிப் பார்க்கிறே... ‘போலீஸ் அதை விபத்துனு சொல்லி ஃபைலை க்ளோஸ் பண்ணிட்டாங்களே... இவன் மட்டும் அது ஒரு கொலைத்திட்டம்னு எப்படிக் கண்டுபிடிச்சான்’னு பார்க்கறியா? எல்லாமே உன்னோட ஆட்கள் கொடுத்த அக்மார்க் வாக்குமூலம்தான்!”

ரூபேஷ், உப்புத்தாளாய் வறண்டுபோன தன்னுடைய உதடுகளை அவசர அவசரமாய் ஈரப்படுத்திக்கொண்டு எச்சில் விழுங்கினான்.

"எ.... எ... என்னோட ஆட்களா?"



"திவாகரும் பூங்கொடியும் உன்னோட ஆட்கள்தானே! கடந்த மூணு நாளா அந்த ரெண்டு பேரும் என்னோட கஸ்டடியில்

தான் இருக்காங்க. என்னோட ஃப்ரெண்ட் மணிகண்டன் கவனிச்ச கவனிப்புல ரெண்டு பேரும் மாத்தி மாத்தி எல்லா உண்மைகளையும் சொல்லிட்டாங்க... அதுல ஒரு உண்மைதான் அந்த ஊட்டி மலைப்பாதை விபத்து. டி.எஸ்.பி. நம்பெருமாள் உனக்கும் உன்னோட அப்பாவுக்கும் விசுவாசியா இருந்ததால அதை விபத்துன்னு சொல்லி சட்டத்தோட வாயை சாத்த முடிஞ்சுது. என்ன... நான் சொன்னது சரியா இல்லையா..?"

“ச… ச… சரி!”

“அதுலதான் எனக்கு ஒரு விஷயம் புரியலை ரூபேஷ். ‘நள்ளிரவு வானவில்’ ப்ராஜெக்ட் விஷயமா உனக்கு உதவி பண்ணின இந்துவதனா மேல உனக்கு என்ன கோபம்… அவளைத் தீர்த்துக்கட்டறதுக்காக ஒரு வேனையே விபத்துக்குள்ளாக்க வேண்டிய அவசியம் என்ன?”

“அது… வந்து… வந்து…”

“சொல்லு… சொல்லு… இனிமே நீ ஒரு வார்த்தையைக்கூட மறைக்க முடியாது!”

“இந்துவதனா மேல எனக்கு எந்தக் கோபமும் இல்லை. அப்பாவுக்குத்

தான் அவ மேல கோபம். என்கூட அவ

பழகறதைப் பார்த்துட்டு அவளையே கல்யாணம் பண்ணிக்கப் போறே

ேனான்னு பயந்தார். எல்லாத்துக்கும் மேல இந்துவதனா ஒரு கட்டத்தில் ‘நள்ளிரவு வானவில்’ ப்ராஜெக்ட் விஷயமா அவ கொண்டுவந்து கொடுத்த ஃபைல் காப்பிக்கு கூடுதலா பத்து லட்ச ரூபாய் கேட்டா. அதனால அப்பா டென்ஷனானார். ‘அவளுக்குப் பண ஆசை வந்துட்டதால இனிமே அவளை விட்டு வெச்சா காலைச் சுத்தின பாம்பா மாறிடுவா. அவளைப் போட்டுத் தள்ளறதைத் தவிர வேற வழியில்லை’னு சொன்னார். இந்துவதனாவை மட்டும் தனியா தீர்த்துக் கட்டினா போலீஸுக்குச் சந்தேகம் வந்து, அவளோடு தொடர்பு வெச்சுக்கிட்ட நபர்கள் யார் யார்னு என்கொயர் பண்ணும்போது என்னோட பேரும் அடிபடலாம்னு நினைச்சார். அதனால…”

ஞானேஷ் குறுக்கிட்டு சொன்னான். “அதனால இந்துவதனாவோடு வேனில் பயணம் பண்ணின மத்த அஞ்சு பேர்க்கும் சேர்த்து உன்னோட அப்பா கபால மோட்சம் கொடுத்துட்டார். அப்படித்தானே?”

“ஆ… ஆமா!”

“அவர் அப்படி பண்ணினது உனக்குப் பிடிக்கலை. அவர் மேல உனக்கு ஆத்திர ஆத்திரமா வந்தது... சரியா?”

“ஆ... ஆமா!”

“அந்த ஆத்திரத்தைத் தாங்கிக்க முடியாமல்தான் உன்னோட அப்பாவுக்கும், டி.எஸ்.பி. நம்பெருமாளுக்கும் பாய்ஸன் கொடுத்து பரலோகம் அனுப்பினியா?”

திக்கித்துப் போனான் ரூபேஷ்.

ஞானேஷ் சிரித்தான்.

“என்ன ரூபேஷ்... மெயின் ஸ்விட்ச்ல கையை வெச்சுட்டேன்னு ஆடிப் போயிட்டியா? இதை என்கிட்ட சொன்னதும் திவாகர்தான். ஆனா,

காரணத்துக்காக மட்டுமே உனக்கு உன்னோட அப்பா மேல கோபம் வந்திருக்காது. வேற ஏதோ காரணம் இருக்குன்னு நினைக்கிறேன். என்னோட கெஸ் வொர்க் சரியா..?”

ரூபேஷ் தலையைக் குனிந்துகொண்டு மௌனமாக இருந்தான். ஞானேஷின் கையில் இருந்த மேக்னம் பிஸ்டல் லேசாக உயர்ந்தது.

“நான் வந்த வேலையை முடிச்சுட்டுப் போகட்டுமா?”

சட்டென்று முழந்தாளிட்டு உட்கார்ந்தான் ரூபேஷ்.

“என்னை ஒண்ணும் பண்ணிடாதே! நான் எல்லா உண்மைகளையும் சொல்லிடறேன். என்னோட அப்பா வழக்கமா சாப்பிடற விஸ்கியில் ‘ஸ்டெப் மதர் பாய்ஸன்’ என்கிற, மெதுவா உயிரை எடுக்கிற விஷத்தைக் கலந்தது நான்தான். அவர்மேல எனக்கு ஆத்திரம் வரக் காரணம் இந்துவதனா கொலை செய்யப்பட்டது அல்ல.”

“அப்புறம்?”

“அப்பா அடிக்கடி பிசினஸ் விஷயமா தாய்லாந்து போயிட்டு வந்தார். அந்த சமயத்துல பாங்காங் ஹோட்டலில் ரிசப்ஷனிஸ்டா இருந்த ‘கிளாடியா’ என்கிற பெண்ணுக்கும் அவருக்கும் தொடர்பு ஏற்பட்டு, ஒருநாள் அந்த கிளாடியாவோட போட்டோவைக் காட்டி ‘இந்தப் பொண்ணும் நானும் ஒருத்தரையொருத்தர் விரும்பறோம். இவ உனக்கு சித்தியா வர்றதுல உனக்கு ஏதாவது ஆட்சேபனை உண்டா?’னு கேட்டார். அப்பா அப்படிக் கேட்டது எனக்கு அதிர்ச்சியா இருந்தாலும் அதை வெளிக்காட்டிக்காம அப்பாவோட கையைப் பற்றிக் குலுக்கி ‘மோஸ்ட் வெல்கம்’னு சொல்லி சிரிச்சு வெச்சேன். அப்பாவும் சிரிச்சுக்கிட்டே ‘கிளாடியாவை உடனடியா நான் கல்யாணம் பண்ணிக்க முடியாது. அவ கல்யாணமானவள். அவளுக்கு கோர்ட் மூலமா முறைப்படி டிவோர்ஸ் கிடைக்க ஒரு வருஷமாவது ஆகும். அதுக்கப்புறம்தான் கல்யாணம்’னு சொன்னார். என் அப்பாவுக்குப் பின்னாடி கோடிக்

கணக்கான சொத்து பூராவும் எனக்குத்தான்னு நினைச்சுட்டிருந்த என்னோட நினைப்புல மண் விழுந்த மாதிரியான உணர்வு. கிளாடியாவை அப்பா கைப்பிடிக்கிறதுக்கு முன்னாடி அவரை ஒரு கைப்பிடி சாம்பலாக்கணும்ன்னு நினைச்சேன். என்கிட்டயிருந்த ஒரு வித்தியாசமான விஷத்தை வெச்சு முடிச்சேன். அப்பாவோட கதையை முடிச்ச பின்னாடி டி.எஸ்.பி. நம்பெருமாள் என்னை நம்பாத பார்வை பார்த்துக்கொண்டே இருந்தார். ஏன்னா,

அவருக்கும் கிளாடியா விஷயம் தெரியும். நம்பெருமாள் என்னிக்காவது ஒருநாள் உண்மையைக் கண்டுபிடிச்சுடுவார் என்கிற பயத்துல அவர் குடிக்கிற மினரல் வாட்டர் பாட்டிலில் அப்பாவுக்கு கொடுத்த அதே பாய்ஸனைக் கலந்தேன்.”

மூச்சுவாங்க நீளமாய் பேசி முடித்த ரூபேஷ், இரண்டு கைகளையும் குவித்து ஞானேஷைக் கும்பிட்டான்.

“என்னை ஒண்ணும் பண்ணிடாதே ஞானேஷ். நான் எல்லா உண்மைகளையும் சொல்லிட்டேன். அந்த ‘மிட்நைட் ரெயின்போ’ ப்ராஜெக்ட்டை நீ வெற்றிகரமா செய்து முடிக்க நான் எவ்வளவு பணம் வேணும்னாலும் தர்றேன்.”

“அஞ்சு கோடி வேணும். தருவியா?”

“தர்றேன்...”

“உன்னை எப்படி நம்பறது?”

“இதோ பார் ஞானேஷ்! நீ என்னை கார்னர் பண்ணிட்டே. இனிமே நான் உன்னை ஏமாத்த நினைச்சா மாட்டிக்கப் போறது நான்தான். என்னை நீ நம்பு!”

“சரி! எனக்கு ஒரு சந்தேகம். ஒரே நேரத்துல பெங்களூர்ல எஸ்.பி சந்திர கவுடாவையும், சென்னையில போலீஸ் இன்ஃபார்மர் இரண்டாம் நாரதனையும் தீர்த்துக்கட்டினது நீதானே?”

“ஆமாம்!”

“அப்படியே இன்னொரு சந்தேகத்தையும் கேட்டுடறேன்! உன்னோட ஆட்களான திவாகரையும் பூங்கொடியையும் ரிதன்யா வீட்டுக்கு அனுப்பி, ரிதன்யாவை ஹவுஸ் அரெஸ்ட் பண்ணி ‘நள்ளிரவு வானவில்’ பற்றி கேட்டு டார்ச்சர் பண்ண வெச்சியே... அது எதுக்கு?”

“இந்துவதனா கொண்டுவந்து கொடுத்த ‘நள்ளிரவு வானவில்’ ஃபைலில் போதுமான விவரங்கள் இல்லைன்னு அப்பா சொன்னார். அதுக்கு டி.எஸ்.பி. நம்பெருமாள் சைபர் க்ரைம் பிராஞ்ச் ஆபீஸர் ரிதன்யாவுக்கு ‘நள்ளிரவு வானவில்’ பற்றிய கூடுதல் விவரங்கள் தெரிஞ்சிருக்க வாய்ப்பு இருக்குன்னு சொன்னார். அதனால்தான் என்னோட ஆட்களான திவாகரையும், பூங்கொடியையும் ரிதன்யாகிட்டே அனுப்பி வெச்சேன். ஆனா, ரிதன்யாவுக்கு நள்ளிரவு வானவில் பற்றின எந்த விவரமும் தெரியாததனால மேற்கொண்டு

அவளை விசாரிக்க முடியாதுன்னு திவாகர் சொன்னான். நான் உடனே திவாகர்கிட்டே ரிதன்யாவை ஒயிட்ஃபீல்டில் உள்ள ப்ளஸன்ட் ஓஷன் ஹோட்டலுக்குக் கூட்டிட்டு வரும்படி சொன்னேன். அதுக்குக் காரணம், ரிதன்யா இங்கே என்னை பார்க்க வரும்போது என் அப்பாவோட மரணம் நடந்தா யாருக்கும் என் மீது சந்தேகம் வராதுனு நினைச்சேன்."

ஞானேஷ் உதடு பிரியாமல் மெள்ளச் சிரித்தான்.

"ரூபேஷ்! நீ தப்புத் தப்பா பல கணக்குகளைப் போட்டே. ஆனா, நான் ஒரே ஒரு கணக்கை சரியாப் போட்டேன். 'நள்ளிரவு வானவில்' ப்ராஜெக்ட் தொடர்பான விஷயத்தில் சம்பந்தப்பட்ட அந்த ஆறு பெண்களோட மரணத்தைத் தொடர்ந்து நானும் இறந்துட்டதா ஒரு அலிபியை ஏற்படுத்திட்டு தலைமறைவாயிட்டேன். சென்னையில் மூணு நாள், பெங்களூரில் நாலு நாள் என்னோட உருவ அமைப்பை மாத்திகிட்டு எல்லாருடைய நடவடிக்கைகளையும் கண்காணிக்க ஆரம்பிச்சேன். இந்த விஷயத்துல ரிதன்யா எனக்குப் பெரிய அளவுல ஒத்துழைப்பு கொடுத்தாங்க. ரெண்டாவதா என்னோட ஃப்ரெண்ட் மணிகண்டன். உன்னோட ஆட்களான திவாகரையும், பூங்கொடியையும் ஒயிட்ஃபீல்டில் காரில் காத்திருந்தபோது மடக்கி தன்னோட கஸ்டடியில் கொண்டுபோய் வெச்சுகிட்டது மணிகண்டன்தான். மொதல்ல உண்மைகளைச் சொல்ல மறுத்த திவாகர் அதுக்கப்புறமா போலீஸ் கமிஷனர் ராஜகணேஷ், அவருக்கே உரித்தான பாணியில் விசாரிச்ச பிறகுதான் உன்னைப் பத்தின எல்லா உண்மைகளையும் சொல்ல ஆரம்பிச்சான்."

ரூபேஷ் வெகுவாக முகம் மாறி திக்கென்று விழிக்க, ஞானேஷ் மெதுவாக நடந்துவந்து அவனுடைய தோளில் கையை வைத்தான்.

"என்ன ரூபேஷ் அப்படிப் பார்க்கிறே... இந்த விஷயத்துல சென்னை போலீஸ் கமிஷனர் ராஜகணேஷ் எப்படிச் சம்பந்தப்படறார்னு கேட்கறியா? எக்ஸ்டர்னல் அஃபேர்ஸ் மினிஸ்டர் அதாவது வெளியுறவுத்துறை அமைச்சர் ஆதர்ஷ் பாண்டே எனக்குப் பக்கபலமா இருந்து, 'நள்ளிரவு வானவில்'

ப்ராஜெக்ட்டை இந்திய தொழில்நுட்பக் கழகத்துக்கு அர்ப்பணிக்கும் பொறுப்பை கொடுத்திருக்கார். இந்த ப்ராஜெக்ட்டை மேன்மேலும் மேம்படுத்த ஜோர்டான் நாட்டு தொழில்நுட்ப நிறுவனமும் நம்ம அரசோடு இணைந்திருக்கு. அதுக்கான பேச்சு வார்த்தைகளையும் ஜோர்டான் நாட்டு வெளியுறவுத் தூதுவர்களோடு நடத்திட்டேன். இந்த விஷயத்துல வல்லரசு நாடுகளை நம்ப இந்தியா தயாராயில்லை. நம்ம இந்திய அரசு எனக்குப் பின்பலமா இருக்கும்போது சென்னை போலீஸ் கமிஷனர் எனக்கு உதவி பண்ணமாட்டாரா என்ன? அவர் உதவி பண்ணப் போய்த்தான் இந்த ரூமுக்குள்ளே அரை மணி நேரமா 'வார்ட் ரோப்'புக்குள் இருந்தேன்."

ஞானேஷ் சொல்லிக்கொண்டிருக்கும்போதே ரூபேஷுக்குப் பின்னால் காலடிச் சத்தங்கள் கேட்டன. திரும்பிப் பார்த்தான்.

ராஜகணேஷும், ரிதன்யாவும் புன்முறுவல் பூத்த முகங்களோடு வந்துகொண்டிருந்தார்கள்.

ரிதன்யா கேட்டாள்... "என்ன ஞானேஷ்... எல்லா உண்மைகளையும் ரூபேஷ்கிட்டயிருந்து வாங்கிட்டீங்களா?"

"சுபம்" என்றான் ஞானேஷ்.

## முற்றும்